# முன்னுரை

இலக்கியங்கள் சங்கத் தமிழர்களின் வாழ்க்கை முறைகளையும், அக்காலச் சமுதாய அமைப்பினையும், பண்பாடு, வரலாறு நாகரிகம் பழக்கவழக்கம் முதலான கூறுகளையும் எடுத்துரைப்பனவாய் அமைந்துள்ளன. மேலும், இவை பண்டைத் தமிழ் மக்களின் அகவாழ்வினையும், புற வாழ்வினையும் தெரிவிக்கும் காலக் கண்ணாடிகளாகவும் விளங்குகின்றன.

அக வாழ்க்கைக்கும், புற வாழ்க்கைக்குமான இலக்கியக் கொள்கையினைத் தொல்காப்பியர் படைத்துள்ளார். இச்செய்திகளால் சங்க இலக்கியம் குறித்த ஆய்வுகள் நீண்ட நெடுங்காலமாகவே நிகழ்த்தப்பட்டு வருகின்றன. இவை குறித்த ஆய்வுகள் இன்றும் பெரும்பான்மையாக நிகழ்த்தப்பட வேண்டிய அவசியம் உள்ளது. தமிழிலக்கியங்கள் எண்ணிறந்த அளவில் பல்கிப் பெருகி, ஒவ்வொரு காலக்கட்டத்திற்கு ஏற்ப பல்வேறு வடிவங்களில் வளர்ச்சி பெற்றுள்ளன. மனித வாழ்வியலின் சாரமாக இலக்கியங்கள் திகழ்கின்றன. தமிழ்மொழியின் தொன்மைச் சிறப்புக்கும், பழமைக்கும் பெருமைக்கும் செவ்வியல் தன்மைக்கும் சான்று பகர்வனவாய்ச் சங்க இலக்கியங்கள் விளங்குகின்றன. பல்வேறு காலங்களில் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்த புலவர்கள் தங்கள் அனுபவங்களை கண்டும், கேட்டும் உணர்ந்த செய்திகளையும் பாடல்களாகப் பதிவு செய்துள்ளனர். தமிழ் இலக்கியங்களில் காலத்தால் அழியாத சிறப்பையும், உலக இலக்கியங்களோடு ஒப்பிடத்தக்க பெருமையையும் கொண்டுள்ளது சங்க இலக்கியங்கள்.

கி.பி.இரண்டாம் நூற்றாண்டுக்கு முன் வாழ்ந்த தமிழ் மக்களின் காதலையும், வீரத்தையும், பண்பாட்டையும், நாகரிகத்தையும், பறைச்சாற்றுவனவாயும் தமிழர்கள் சாதி, சமயப் பூசலின்றி வாழ்ந்த

பெரு வாழ்வினையும், அறிவு மேம்பாடு மிக்கவர்களாய்த் திகழ்ந்தமையையும் காட்டும் சான்றுகளாகச் சங்க இலக்கியங்கள் அமைந்துள்ளன. இச்சங்க இலக்கியங்களில் காணப்படும் சமூக அமைப்பும் அவ்வமைப்பில் பெண்களுக்கான பங்கும் பல்வேறு கோணங்களில் ஆராயத்தக்கவையாகும். அவ்வகையில் அகம், புறம் இலக்கியங்களில் நிகழ்த்தப்பட்டு இருக்கும் பெண் மக்களின் சமுதாய குடும்ப நிலைகளில் காணப்படும் அக, புற ஒழுக்கங்களை எடுத்துக் கூற முனைவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு தலைப்பு

தமிழ்ச் சமுதாயம் தொடக்க காலங்களில் தாய்வழிச் சமுதாயமாக இருந்தது. தாய் தலைமைக் குடும்பமாக இருந்ததற்கும், இல்லத்தில் பெண்களின் பங்கு இன்றியமையாததாக இருந்தது என்பதற்கும் சங்க இலக்கியங்களில் பல சான்றுகள் உள்ளன. அவ்வகையில் சங்ககாலத் தமிழ் மக்களின் உயர்ந்தப் பண்பாட்டை இன்றையத் தலைமுறைக்குப் பதிவு செய்யவும், தமிழ்ப் பெண்களின் உன்னதக் கற்பு நெறியையும், வீரமிக்க மனத்துணிவையும், மனித நேயப்பண்பையும் எடுத்துரைக்கும் நோக்கத்திலும் **“சங்க இலக்கியங்களில் பெண் சமூக அமைப்பும் வாழ்வியல் அறங்களும்”** என்னும் பொருளில் இவ்ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை மற்றும் பத்துபாட்டு நூல்கள் ஆய்வு எல்லைகளாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வு நோக்கம்

பழமையும், பெருமையும் வாய்ந்த தமிழரின் பண்டைய சமூக அமைப்பில் பெண்கள் மேற்கொண்ட உயரிய பண்பாட்டினையும் அறச் செயல்களையும் இக்கால இளைய தலைமுறையினர் அறிந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கில் இவ்ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வு அணுகுமுறை

இவ்ஆய்வு விளக்கமுறைத் திறனாய்வு, பகுப்புமுறைத் திறனாய்வு, எடுத்துரைப்புத் திறனாய்வு, வரலாற்று முறைத் திறனாய்வு போன்ற திறனாய்வு அணுகுமுறைகளில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வு கருதுகோள்

சங்ககாலச் சமூகத்தில் பெண் என்னும் அடையாளம் தாய், செவிலி, தலைவி, தோழி, அன்னை, வீரத்தாய், விறலி போன்ற பதிவுகளில் வாழ்ந்து சமூக அமைப்பை மேம்படுத்த உதவியதை எடுத்துரைக்கும் உயர்ந்த எண்ணத்தில் இவ்ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வுப்பகுப்பு

**“சங்க இலக்கியங்களில் பெண் சமூக அமைப்பும் வாழ்வியல் அறங்களும்”** என்ற தலைப்பில் முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களை கொண்ட நிலைகளில் பகுக்கப்பட்டுள்ளது.

1. **சங்க காலச் சமூக அமைப்பு**
2. **சங்க கால பெண் சமூக அமைப்பும் உறவுகளும்**
3. **அக இலக்கியங்களில் பெண்களின் வாழ்வியல் அறங்கள்**
4. **புற இலக்கியங்களில் பெண்களின் வாழ்வியல் அறங்கள்**
5. **சங்க இலக்கியங்கள் காட்டும் பெண்களின் மனிதம்**

**‘சங்க காலச் சமூக அமைப்பு’** என்னும் முதல் இயலில் சங்கம் தோன்றிய வரலாறு, சங்ககாலத் தாய்வழிச் சமூகம், ஐவகை நில வரையறை போன்றவை விளக்கப்பட்டுள்ளன. ஐவகை நில மாந்தரின் ஒழுக்கங்கள், தொழில்கள், உறவுமுறைகள், பழக்க வழக்கங்கள் போன்றவை எடுத்துக்கூறப்பட்டுள்ளன. மேலும் அகத்திணை, புறத்திணை சார்ந்த ஒழுக்கங்களான காதலும், வீரமும் சங்கத் தமிழர்களின் இரு கண்களாகப் போற்றப்பட்டதை சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளது. அவ்வகையில் அகத்திணை மாந்தர்களான தலைவன், தலைவி, தோழி,

செவிலி, நற்றாய், பரத்தை முதலானவர்களின் சமூகப் பங்கினை இவ்இயல் எடுத்துரைத்துள்ளது. அதே போல புறத்திணை மாந்தர்களான அரசர், அந்தணர், வணிகர் வேளாளர் முதலானவர்களின் சமூகப் பங்களிப்பும் விவரிக்கப்பட்டுள்ளது. சங்க கால மன்னர்களின் வீரம், போர்ச்சிறப்பு, கொடைச்சிறப்பு ஆகியவற்றோடு பாணர், விறலியர் முதலான கலைஞர்களின் வாழ்வியல் நெறிகளும் குறிப்பிடப்பட்டுள்ளது. சமூகத்தில் புலவர்கள் பெற்றிருந்த சிறப்பையும், மன்னர்களும் புலவர்களும் கொண்டிருந்த நட்புணர்வும் விளக்கப்பட்டுள்ளது.

**‘சங்க கால பெண் சமூக அமைப்பும் உறவுகளும்’** என்ற இரண்டாவது இயலில் சங்க இலக்கியங்களில் மகளிர் பற்றிய சமுதாய உறவுகள் விரிவாக கூறப்பட்டுள்ளன. பொது நிலையில் மூத்த மகளிர் ‘அன்னை’ என்ற சொல்லாலும் ‘தாய்’ என்ற சொல்லாலும் விளக்கப்படுகின்றனர். ‘யாய்’ என்பது என்தாய் என்ற பொருளிலும். ‘ஞாய்’ என்பது அவன் தாய் என்ற பொருளிலும் அமைகிறது. இவ்இயலில் சங்ககால மகளிர், மகடூஉ பற்றிய விளக்கம், நற்றாய், செவிலித்தாய் போன்றோர் பற்றியும், வீரத்தாயார் சிறப்பு பற்றியும் அவர்கள் சமூகத்தில் வாழ்ந்துள்ள செய்திகள் பற்றியும் விளக்கப்பட்டுள்ளன. மேலும் பெண்டிர் அலர் தூற்றுதல், அம்பல் கூறுதல் போன்ற செயல்களுக்கு உரியவர்களாக குறிப்பிடப்பட்டுள்ளனர். ஆனால், பெண் என்ற பொருளில் மங்கை, மடவரல், அரிவை, நங்கை, தெரிவை போன்ற சொற்கள் இலக்கியங்களில் மிகுதியாக உள்ளன என்பதையும் இல்பரத்தை, காமக்கிழத்தி எனும் பெயர்களில் பரத்தையர் சுட்டப்பட்டனர் என்பதையும் இவ்வியல் ஆராய்ந்துள்ளது.

சங்க காலத்தில் ஒருவனுக்கு ஒருத்தி என்ற நிலை இருந்ததாகத் தெரியவில்லை. இருப்பினும் மகளிர் மிகுந்தப் பண்போடு வாழ்ந்தனர். ஒருவனைக் காதலித்து மற்றொருவனைத் திருமணம் செய்து கொள்ள விரும்பவில்லை. ஆதலால், தனது மனம் விரும்பியவனோடு தலைவி உடன்போக்கு சென்றாள். சங்கப் பெண் சமூக அமைப்பானது ஆண்

பெண் உறவு நிலையில், தலைவன் தலைவி எனும் சுட்டிப் பெயர் கொள்ளாதவர்களாக செயல்படுவதை சங்க அகப் பாடல்கள் மிகுதியாகப் பதிவு செய்துள்ளன. இதுமட்டுமின்றி கணவன் - மனைவி உறவு, பெற்றோர் - மக்கள் உறவு, தலைவன் - பரத்தையர் உறவு, தலைமக்களும் - பணிமக்களும் உறவு முதலான உறவுகள் சங்க இலக்கியங்களில் குறிப்பிட்டுள்ளதை இவ்இயல் ஆராய்ந்துள்ளது. மேலும் மக்கட்பேறு, மன்னர் பெண்பாற் புலவர்கள் உறவு முதலானவை விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**‘அக இலக்கியங்களில் பெண்களின் வாழ்வியல் அறங்கள்’** என்னும் மூன்றாவது இயலில் பழந்தமிழ் இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றில் பெண்களுக்கான அறச்சிந்தனைகள் மிகுந்திருக்கின்றன என்பது இவ்இயலில் சான்றுகள் மூலம் நிருபிக்கப்பட்டுள்ளது. அகவாழ்வாயினும் புறவாழ்வாயினும் நேரிய வழியினதாக இருக்க வேண்டும். முன்னோர் போற்றி வந்த வாழ்வியல் நெறிகள், அறங்கள் முதலானவற்றின் தொகுப்பாகவே சங்க இலக்கியங்கள் காட்சி அளிக்கின்றன என்பது நிறுவப்பட்டுள்ளது.

நாற்பொருள்களுள் முதலாவதாகச் சுட்டப்படும் ‘அறமே’ எல்லாவற்றுக்கும் தொடக்கமாக அமைகிறது. அறம் என்பதற்கு நல்ல செயல்களின் தொகுதி என்பது பொருள். அறம்தான் மனிதனுக்கு வாழ்வியல் உயர்வைக் கொடுக்கிறது. இலக்கியமாயினும் தனிப்பட்ட ஒருவரின் வாழ்க்கையாயினும் அனைத்தும் அறம் சார்ந்தே இயங்க வேண்டும் என்பதே விழுமிய குறிக்கோள். இளங்கோவடிகள் தனது காப்பியமான சிலப்பதிகாரத்தில் “அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாவதும்” என்று நல்லறத்தைப் பற்றி கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது. இவ்இயல் சங்க காலப் பெண்களுக்கான அக ஒழுக்க அறங்களை பல்வேறு கோணங்களில் ஆராய்ந்துள்ளது.

சங்ககால அக இலக்கியங்களில் பெண்களுக்கான வாழ்வியல் அறங்களாக எடுத்துக்கொள்ள வேண்டியது ஒரு பெண் பருவமெய்திய பிறகு வாழ்கின்ற வாழ்க்கைப் படிநிலைகளைக் குறிப்பதாகும். அவ்வகையில் அவ்வறமானது களவு வாழ்க்கை, கற்பு வாழ்க்கை என இரண்டிலும் மேற்கொள்கின்ற வாழ்வியல் அறங்களைக் குறிக்கும். களவு, அறத்தொடு நிற்றல், உடன்போக்கு வரைதல், வரைவு கடாதல், பிரிவு வகைகள், திருமண வாழ்க்கை, தாய்வழித் திருமணம், தந்தைவழித் திருமணம், மக்களைப் பேணுதல், தனிக்குடும்பம், கூட்டுக்குடும்பம் செலவழுங்கள் முதலான வாழ்வியல் படிநிலைகளில் பெண்களுக்கான பங்கை இவ்இயல் முழுமையான சான்றுகளுடன் ஆராய்ந்துள்ளது.

**'புற இலக்கியங்களில் பெண்களின் வாழ்வியல் அறங்கள்'** என்னும் தலைப்பில் நான்காவது இயலில் பெண்களின் கற்பு வாழ்க்கையில் புறச்சமூக அமைப்புகளான இல்லற நெறி, தாய்மை, ஆண்களைப் போருக்கு அனுப்புதல், போர்களத்தில் வீரத்தாய், ஈன்ற பொழுதின் பெரிதுவத்தல், மகளிர் விருந்தோம்பல் பண்பு, விருந்தோம்பல் மாண்பு, மகளிர் விளையாட்டு, மகளிர் ஆடை அணிகலன், கைம்மை, பெண்பாற் புலவர்கள் அரசியலில் பெண்கள் நிலை, கலைகளில் பெண்கள், பொருளாதாரத்தில் பெண்கள் எனும் நோக்கில் இவ்இயல் விரிவாக ஆராய்ந்துள்ளது.

அக இலக்கியங்களைக் காட்டிலும் புற இலக்கியங்களில் பெண்களுக்கான பதிவுகள் குறைவாககே காணப்படுகின்றன. ஏனெனில், திருமணத்திற்குப் பின் புறச்சமூக அமைப்பில் ஆண்களுக்கு நிகராகப் பெண்கள் பங்கு கொள்வதில்லை. பெண்களும் பெரும்பாலும் அதை விரும்புவதில்லை. இருப்பினும் ஆண்களின் செயல்களுக்குப் பின்புலமாக பெண்களின் பங்கு உள்ளதை இவ்இயல் விளக்குகிறது.

**'சங்க இலக்கியங்கள் காட்டும் பெண்களின் மனிதன்'** என்னும் ஐந்தாவது இயலில், மனிதர்கள் ஒவ்வொருவருக்கும் இடையில் நிலவும்

அன்புகலந்த உறவே மனிதநேயம் என்பது விளக்கப்பட்டுள்ளது. விலங்கினத்திலிருந்து தோன்றிய பரிணாம வளர்ச்சியே மனிதம் என்பர் உயிரியல் அறிஞர்கள். அன்பு என்பது அனைத்து உயிர்களுக்கும் பொதுவென்றாலும் அவை தத்தம் இனத்தோடு தம் அன்புப்பரப்பை நிறுத்திக்கொள்ள, மனிதன் மட்டும் உலகஉயிர்கள் அனைத்திடத்தும் அன்பு காட்டுகிறான். அதுவே அவனை மற்ற உயிர்களைவிட உயர்ந்தவனாக்குகிறது. அதுவே மனித நேயமாகிறது.

அவ்வகையில் சங்க இலக்கியங்களில் மனிதநேயத்திற்குரிய பண்பினை சங்க கால மகளிர் பெரிதும் பெற்றிருந்தனர். இவ்இயலில் காலந்தோறும் மனிதநேயம், தொல்காப்பியர் சுட்டும் மனிதநேயம், சங்க இலக்கியங்கள் மற்றும் பிற இலக்கியங்கள் கூறும் மனிதநேயம் பற்றிக் கூறப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்களில் பெண்களின் தனி மனித நேயமாகக் குறிப்பிடப்படும் நற்றாய் செயல்பாடுகள், செவிலியின் அன்பு, தோழி அறத்தொடு நிற்றல், உடன் போக்கில் செவிலி, இல்லற நெறியில் தலைவி, ஆற்றுப்படையில் மனித நேயம், பொருளீட்டலில் தலைவனுக்கு இரங்கும் தலைவி, பிற உயிர்கள் மீது கொண்ட மனித நேயம், மக்கட்பேறு நேயம் முதலான செயல்பாடுகளில் சங்ககாலப் பெண்களின் மனித நேயம் பண்பட்டு இருப்பதை இவ்இயல் விரிவாக ஆராய்ந்துள்ளது.

இவ்ஆய்வின் முடிவாக ஐந்து இயல்களின் நிறைவில் ஆய்வு முடிவுகள் தனித்தனியே கூறப்பட்டுள்ளன. இவ்ஆய்வின் மூலம் சங்க காலச் சமூகம் ஒரு பண்பட்ட சமூகமாகத் திகழ்ந்தது என்பதையும் அச்சமூகத்தில் பெண்கள் களவு, கற்பு என்னும் இருவகை நிலைகளில் தனி மதிப்புள்ளவர்களாகவும், குடும்ப நெறிகளில் உயர்ந்தவர்களாகவும் மனிதநேய மாண்பில் மதிப்புள்ளவர்களாகவும் இருந்தனர் என்பதை தற்கால இளைய தலைமுறை அறிந்து பண்படும் வகையில் இவ்ஆய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

# இயல் - 1

# சங்க காலச் சமூக அமைப்பு

### சங்க காலச் சமூக அமைப்பு

பண்டைத் தமிழர்களின் தொன்மைச் சிறப்புக்கும், பழமைக்கும் பெருமைக்கும் செவ்வியல் தன்மைக்கும் சான்று பகர்வனவாய் சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. பல்வேறு காலக்கட்டங்களில் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்த புலவர்கள் தங்கள் அனுபவங்களை கண்டும் கேட்டும் உணர்ந்த செய்திகளைப் பாடல்களாக வகுத்துள்ளனர் எனலாம். தமிழ் இலக்கியங்களில் காலத்தால் அழியாத சிறப்பையும், உலக இலக்கியங்களோடு ஒப்பிடத்தக்க பெருமையையும் கொண்டவை சங்க இலக்கியங்கள் என்றால் அது மிகையாகாது.

### சங்க இலக்கியங்கள்

கி.பி.இரண்டாம் நூற்றாண்டுக்கும் முன்வாழ்ந்த தமிழ் மக்களின் வீரத்தையும் காதலையும் பண்பாட்டையும் நாகரிகத்தையும் பறைசாற்றுவன. தமிழர்கள் சாதி சமய வேறுபாடியின்றி வாழ்ந்த பெருவாழ்வினையும் அறிவுத்திறன் மிக்கவர்களாய் திகழ்ந்தமையை காட்டும் சான்றுகளாக சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. இச்சங்க இலக்கியங்களில் காணப்படும் தமிழர்களின் வாழ்க்கை முறைகள் அக்காலச் சமுதாய அமைப்பினையும், பண்பாடு, வரலாறு நாகரீகம், பழக்கவழக்கம் முதலான கூறுகளையும் எடுத்துரைப்பனவாய் அமைந்துள்ளன. இந்த பண்பு தமிழ்மக்களின் அகவாழ்வினையும் புறவாழ்வினையும் தெரிவிக்கும் காலக்கண்ணாடிகளாய் விளங்குகின்றன. மனிதனின் புறச்செயல்களான வீரம், வெற்றி, கொடை, அறம் போன்றவற்றைப் போற்றுவதோடு அகவாழ்க்கையான களவு மற்றும் கற்பு ஆகியவற்றின் உயர்வுகளையும் தெளிவுறப் புலப்படுத்துகின்றது.

சங்கம் வைத்துத் தமிழை வளர்த்த நிலையும் முச்சங்கங்கள் தோன்றி அதன் வழி பல நூல்கள் இயற்றப்பட்டதையும், அந்நூல்களின் சிறப்புகளையும், சங்கம் பற்றிய செய்திகளையும், சங்கப் பாடல்களின் தொகுப்பினையும் சங்க இலக்கியங்களின் மூலம் தெளிவாக அறியமுடிகிறது.

**சங்க காலம்**

சங்கம் என்ற அமைப்பின் வாயிலாக தமிழ் இலக்கியங்கள் எழுதப்பட்டும், தொகுக்கப்பட்டும் வந்த காலப்பரப்பினைப் பொதுவாக சங்க காலம் என்று அழைக்கின்றனர்.

இது ஏறத்தாழ கி.மு.500 முதல் கி.பி.100 வரையுள்ள காலப்பகுதியாகும். நமக்கு கிடைத்துள்ள மிகப் பழமையான இலக்கியங்களான சங்க இலக்கியத்தில் ‘சங்கம்’ என்னும் சொல் காணப்படவில்லை. சங்கம் என்ற பெயர் இல்லையெனினும் புலவர் அவை என்ற சான்றோர் அமைப்பு ஒன்று இருந்ததை மறுப்பதற்கில்லை. இது பண்டைய கிரேக்கத்தில் நிலவிய (Academy) அமைப்புடன் ஒப்புநோக்கத்தக்கதாகும். சங்கம் என்ற அமைப்பைக் குறிக்கத் தமிழ் இலக்கியங்களில் புணர், கூட்டு, அவை, தொகை, குழு, தமிழ்நிலை என்ற சொற்கள் வழங்கப்பட்டன.

எந்த ஒரு சமுதாயமோ, இலக்கியமோ முறையான அமைப்பு இல்லாவிடில் தொடர்ந்து வளர்ச்சியைப் பெற இயலாது என்பது வரலாற்று உண்மை. சங்க காலத்தில் புலவர்கள் தங்கள் பாடல்களை அரங்கேற்றுவதற்கும், கூடி மகிழ்வதற்கும் படைப்புகளைப் பற்றிய விவாதங்கள் செய்வதற்கும் ஏதேனும் ஒரு அமைப்பு இருந்திருக்க வேண்டும்.

சங்க இலக்கியங்களில் சங்கம் என்ற சொல் காணப்படவில்லையே தவிர, புலவர் மற்றும் புலவர் அமைப்பு போன்றவற்றைப் பற்றிய குறிப்புகள் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.

**‘‘ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி**
**மாங்குடி மருதன் தலைவனாக’’**[1]

என்றும் பாடல்வரிகள் வாயிலாகத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் காலத்தில் மதுரையில் இருந்த புலவர் அமைப்பிற்கு மாங்குடி மருதனார் தலைவராக விளங்கினார் என்பது தெளிவாக விளங்குகிறது.

**“உவப்பத் தலைக்கூடி உள்ளப்பிரிதல்**
**அனைத்தே புலவர் தொழில்’’**[2]

என்று சங்கம் மருவிய நூலான திருக்குறள் கூறுகிறது. இதன்மூலம் அக்காலத்தில் புலவர் பெருமக்கள் அவ்வப்பொழுது குறிப்பிட்ட இடத்தில் கூடி இலக்கிய ஆய்வுகளை நிகழ்த்தினர் என்பதை அறிய முடிகிறது.

**“தமிழ்த்தலைமை தலைக்கொண்டான் சக்ரன்’’**[3]

என்ற பாடல் மூலம் தமிழ் அவைக்கு சக்கரன் என்ற புலவர் தலைவராக இருந்தார் என்பதை உணரலாம். கி.பி.ஐந்தாம் நூற்றாண்டில் வச்சிரந்தி என்ற சமணச் சான்றோர் மன்னர்குடியில் தமிழ்ச் சங்கத்தின் தலைவராயிருந்தார் என்பதும் அறியத்தக்கது. இவ்வாறு தொல்காப்பியத்திற்கு முன்னரே தமிழ்ச் சங்கத்தைப் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது.

பனம்பாரனாரின் தொல்காப்பிய பாயிரம்,

**“நிலந்தரு திருவின் பாண்டியன் அவையத்து’’**[4]

என்று சங்கத்தை அவை என்ற சொல்லால் குறிப்பிடுகின்றது.

சங்கம் என்ற சொல் முதன்முதலாக கி.பி.ஐந்தாம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட மணிமேகலை காப்பியத்தில் இடம் பெற்றுள்ளது.

**“புலம்பரிச் சங்கம் பொருளொடு முழங்க’’**[5]

என்று அதில் குறிபிடப்பட்டுள்ளது. மணிமேகலையில் குறிப்பிடப்பட்டுள்ள இச்சங்கம் பௌத்ததுறவிகளின் அமைப்பாகும். இதற்குப் பிறகே தமிழ் இலக்கியங்களில் சங்கம் என்ற பெயர் பெருவழக்கிற்கு வந்தது. பண்டைய புலவர் அமைப்புகளும் இதனை அடியொற்றிச் சங்கம் என்று பிற்காலத்தோரால் குறிப்பிடப்பட்டிருக்கக் கூடும்.

**முத்தமிழ்ச் சங்கம்**

பண்டைய காலத்தில் மூன்று சங்கங்கள் இருந்தன என்ற குறிப்பினைக் கி.பி ஒன்பதாம் நூற்றாண்டில் வரி வடிவம் பெற்ற இறையனார் களவியல் உரை நூல் மூலம் அறியமுடிகின்றது. இதுவே இலக்கிய வரலாற்றில் தமிழ்ச்சங்கங்களைப் பற்றிக் காணப்படும் முதற்குறிப்பாகும். முதற்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் பற்றிய குறிப்பினை இறையனார் களவியல் உரை கூறுகிறது. இக்குறிப்பின்படி இடைச்சங்க காலத்தில் இயற்றப்பட்டது தொல்காப்பியம் என்றும், கடைச்சங்க காலத்து நூல்கள் சங்க இலக்கியங்கள் என்றும் அறிகிறோம்.

**முதற்சங்கம்**

கடல் கொண்ட தென்மதுரையில் தலைச்சங்கம் தோன்றி வளர்ந்தது. 549 புலவர்கள் அதன்கண் அமர்ந்து தமிழ் வளர்த்தார்கள். இச்சங்கத்தோடு தொடர்பு கொண்டிருந்த புலவர்களின் எண்ணிக்கை 4449. முதற்சங்கம் 4440 ஆண்டுகள் இருந்ததாகக் கூறுகின்றனர். இச்சங்கத்தை 89 பாண்டிய மன்னர்கள் ஆதரித்ததாகக் கூறப்படுகிறது. எனினும் இச்சங்க நூல்கள் எதுவும் இன்று இருப்பதாகத் தெரியவில்லை.

**இடைச்சங்கம்**

கடலுள் மறைந்த கபாடபுரத்தில் இடைச்சங்கம் தோன்றி வளர்ந்தது. இச்சங்கத்தை 59 பாண்டிய மன்னர்கள் ஆதரித்தனர். அகத்தியர், தொல்காப்பியர் முதலிய 59 புலவர்கள் இடைச்சங்கத்தில் தமிழை ஆராய்ந்தனர். இவர்களோடு தொடர்பிலிருந்த புலவர்களின்

எண்ணிக்கை 3700 ஆகும். இடைச்சங்கம் சுமார் 3000 ஆண்டுகள் வரை இருந்ததாகக் கருதப்படுகிறது. தொல்காப்பியம் தவிர இச்சங்க நூல்கள் எதுவும் கிடைக்கவில்லை.

**கடைச்சங்கம்**

கடைச்சங்கம் மதுரையில் வளர்ந்தது. இச்சங்கத்தை சான்றாண்மை மிக்கப் சான்ற புலவர்கள் 49 பேர் வளர்த்தனர். இவர்களுள் மூவர் பாண்டிய மன்னர்கள். இதில் 499 புலவர்கள் பல நூல்களை இயற்றியுள்ளனர். இதில் கூத்து, வரி, சிற்றிசை, பேரிசை போன்ற நூல்கள் கிடைக்கப்பெறவில்லை.

**சங்கம் பற்றிய அறிஞர்கள் கருத்து**

முச்சங்கங்களும் முத்தமிழை வளர்த்த வரலாற்றுக்கு இறையனார் களவியல் உரையைத் தவிர வேறு சான்றுகள் எதுவும் கிடைக்கவில்லை. எனவே, மூன்று சங்கங்கள் இருந்தனவா இல்லையா என்பது பற்றி. அறிஞர்களிடையே பல்வேறு கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன.

தொல்காப்பியர் எழுத்ததிகாரத்தில் ‘ச’ என்ற எழுத்து அகரத்துடன் சேர்ந்து மொழிக்கு முதலில் வராது என்று குறிப்பிட்டுள்ளார். இதனைக் கருத்தில் கொண்டு பார்க்கும் போது ‘சங்கம்’ என்ற சொல் தமிழ்ச் சொல்லாக இருக்க வாய்ப்பில்லை என்பதனை,

**“சகரக் கிளவியும் அவற்றோரற்றே**

**அ ஐ ஔ எனும் மூன்றலங் கடையே”**[6]

என்ற தொல்காப்பிய மொழி மரபு நூற்பாவில் குறிப்பிட்டுள்ளதன் மூலம் அறியலாம்.

இதனை தெளிவுப்படுத்தும் வகையில் பின்வரும் அறிஞர்கள் கருத்துக்கள் கூறுகின்றன. அதாவது,

"சங்கங்களில் சிவன், முருகன், குபேரன் போன்ற கடவுள்களும் கலந்து கொண்டனர் என்று கூறுவது கற்பனையேயன்றி வரலாற்று உண்மையாகாது என்பதன் மூலம் முச்சங்கம் இருந்தகதை செயற்கையாகப் புனையப்பட்டது என்பதைத்தான் எடுத்துக்காட்டுகின்றன என்று பி.டி.சீனிவாச ஐயங்கார் கூறுகின்றார். மேலும் சங்கம் இருந்ததாகக் கூறப்படுவதற்கு எவ்வித அடிப்படை ஆதாரமும் இல்லை என்பதற்கு பல்வேறு காரணங்களைச் சுட்டி, முச்சங்கம் என்ற செய்தி முழுப்பொய்யாகும் என்று கே.என்.சிவராசப்பிள்ளை தம்முடைய 'தமிழ் வரலாறு' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். எனினும் முதற்சங்கமும் இடைச்சங்கமும் இருந்திருக்க வாய்ப்பில்லை என்றும் கடைச்சங்கம் மட்டுமே இருந்தது என்றும் சே'கிரி சாஸ்திரியாரும், இராமச்சந்திர தீட்சிதரும் கூறுகின்றனர். மேலும், முதலிரண்டு சங்கங்கள் இருந்தன என்பது நம்பமுடியாத, அற்புதமான கற்பனையாகும் என்பதும் அவர்களுடைய வாதமாகும். இதனை, முதல் சங்கமும் இடைச்சங்கமும் வாய்ப்பில்லை"[7]

என்ற கூற்று தெளிவுபடுத்துகிறது. என்ற தகவல்கள் ஹரி.விஜயலட்சுமியின் இலக்கியவரலாறு என்ற நூலில் பதிவு செய்யப்பட்டுள்ளது. குறிப்பிடத்தக்கதாகும்.

சங்கம் பற்றிய செய்திகள்

இலக்கியங்களும் செப்பேடுகளும் தமிழ்ச் சங்கம் குறித்த செய்திகளை விளக்குவனவாக அமைந்துள்ளன. தமிழ் வீற்றிருந்த மனமகிழ்ச்சியை தோற்றுவிக்கும் தெருக்களைக் கொண்ட மதுரையில் பெறும் பரிசு கூட, இத்தலைவன் நல்கும் பரிசை விடச் சிறியதாகவே இருக்கும் என்று கூறியுள்ளதன் மூலம் மதுரையில் தமிழ்ச்சங்கம் நிலை பெற்றிருந்தது எனக் கருத முடிகிறது. இதனை,

**“தமிழ்நிலை பெற்ற தாங்கரும் மரபின்**

**மகிழ்நனை மறுகின் மதுரை”**[8]

என்ற சிறுபாணாற்றுப்படை வரிகளின் மூலம் அறியலாம்.

மேலும், மருத நில நாகனார் தம் கலித்தொகைப் பாடலில் மதுரை நகரத்தின் சிறப்பினை விளக்குகிறார். இதனை,

**“மதிமொழி யிடன் மாலை வினைவர் போல் நல்லவர்**

**செதுமொழி சீத்த செவி செறுவாக**

**முதுமொழி நீரப் புலனா வுழவர்**

**புதுமொழி கூட்டுண்ணும் புரிசை சூழ் புனலூர்”**[9]

என்ற பாடல்வரிகள் மூலம் நூல்வல்ல ஆசிரியரால் பொல்லாத சொற்கள் இடையில் புகாமல் விளக்கிய தம் காதுகள் வாயிலாக, முன் உள்ள சான்றோர் உரைத்த செய்யுட்கள் தம் சொல்லை வளர்க்கும் நீராய், அறிவுடைய நா எனும் ஏரால் உழுது உண்ணும் மதில் சூழ்ந்த நீரையுடைய மதுரை நகரத்தை உடையவனே என்று மதுரை நகரத்தின் சிறப்புகளைக் கூறும் வரிகளின் மூலம் அக்கால இலக்கியங்கள் சங்கம் என்ற சொல்லின் பொருளை உணர்ந்த புணர், கூட்டு, அவை, குழு முதலான சொற்களைப் பயன்படுத்தியுள்ளமையை அறிய முடிகின்றது.

**கல்வெட்டுச் சான்றுகள்**

இலக்கியங்கள் மட்டுமல்லாது சங்கம் பற்றிய குறிப்புகளைக் கல்வெட்டுச் சான்றுகளும் வெளிப்படுத்துகின்றன. கல்வெட்டுகள் காட்டும் சங்கம் பற்றிய கருத்தை,

**“மன்னெதிரா வகைவென்று தென்மதுரா புரஞ்செய்ததும்**

**அங்கதனிலருந் தமிழ்நற்சங்கம் இரிஇத்தமிழ் வளர்த்தும்”**[10]

என்ற பராந்தக வீர நாராயணின் தளவாய்ப்புரச் செப்பேடு மூலம் அறிய முடிகிறது. மேலும் சங்க காலத்தில் தமிழை வளர்க்கச் சங்கம் போன்ற ஒரு அமைப்பு இருந்ததனை,

**“மகாபாரதம் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்”**[11]

எனும் சின்னமனூர்ச் செப்பேடுகள் போன்ற கல்வெட்டுச் சான்றுகளின் மூலம் தெரியவருகின்றது.

**பிற சான்றுகள்**

**"தொல்காப்பிய மரபியல் உரையில்,**
**மூன்று வகை சங்கத்து நான்கு வருணத்**
**தொடுபட்ட சான்றோரும்"**[12]

என்று முச்சங்கத்தைப் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது. இதுவரை எடுத்துரைக்கப்பட்டுள்ள சான்றுகள் மூலம் பண்டைய காலத் தமிழகத்தில் சங்கம் அமைத்துத் தமிழ்மொழியானது சிறப்போடு பாதுகாத்து வளர்க்கப்பட்டது என்பது தெளிவாகிறது. எனவே, பண்டைய தமிழகத்தில் முந்நாடு, மூவேந்தர், மும்முரசு, முத்தமிழ் போன்றவை இருந்ததாகக் கூறப்படுவது எந்தளவிற்கு உண்மையோ, அதுபோலவே முச்சங்கம் இருந்ததும் உண்மைதான் என்று நிறுவப்பட்டுள்ளது.

**இலக்கியம் விளக்கம்**

இலக்கியம் என்பது அழகுணர்ச்சி ததும்ப எழுதப்பட்ட நூல்களையே குறிக்கும். இலக்கியம் மொழியின் அழகிய செயற்பாடு. இது மக்களின் வாழ்வோடு நேரடித் தொடர்புடையது.

**"வாழ்ந்து காட்டும் வாழ்க்கையைச்**
**சொற்களால் கூறுவதே இலக்கியம்"**[13]

என்று இலக்கியம் பற்றி வரையறுக்கப்பட்டாலும், மனித வாழ்க்கையை உள்ளது உள்ளபடி கூறினால் அதில் எவ்வித சுவையோ பயனோ இல்லாது போய்விடும், எனவேதான்,

**"வாழ்க்கையைச் சுவைபட அமையுமாறு விழுமிய மொழியின் வாயிலாக எடுத்துக்கூறுவது இலக்கியம்"**[14]

சங்க காலத்தில் மொழி வளர்ச்சிக்காக உருவாக்கப்பட்ட தமிழ்ச்சங்கங்கள் பல நல்ல இலக்கிய நூல்கள் படைக்கப்படுவதற்கு அடித்தளமாக அமைந்தன. குறிப்பாக இடைச்சங்கம், கடைச்சங்க காலத்தில் தோன்றிய இலக்கியங்களையே சங்க இலக்கியங்கள்

என்கிறோம். அத்தொகுப்பில் காணப்பெறும் பாடல்கள் ஓரே காலத்தில் பாடப்பெற்றவை அல்ல. பல புலவர்களால் நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் வெவ்வேறு காலகட்டங்களில் பாடப்பெற்றவை ஆகும்.

### சங்கப் பாடல்களின் தோற்றம்

சங்க காலத்திற்குப் பலநூறு ஆண்டுகளுக்கு முன்னரே பாணர்கள் வாய்மொழியாகப் பல பாடல்களைப் பாடி வந்தனர். அரசர்களையும் வள்ளல்களையும் நாடிச்சென்று பல்வேறு இசைக் கருவிகளை இட்டியும் பாடியும், ஆடியும், அவர்களை மகிழ்வித்தும் பரிசில்கள் பெற்றனர். பாணர்களின் வாய்மொழிப் பாடல்கள் காலப்போக்கில் புலவர்களால் மெருகேற்றப்பெற்று, செவ்வியல் தன்மைகள் ஊட்டப்பெற்று இலக்கணச் செறிவடைந்து சங்க இலக்கியம் எனும் தகுதியைப் பெற்றன. சங்க இலக்கியப் பாடல்கள் என்பவை புலவர்களுக்கு மட்டுமே உரியன என்று எண்ணுதல் கூடாது. அவற்றின் உருவாக்கத்தில் பாணர்களுக்கும் பங்குண்டு என்பதை அறிய முடிகிறது. இதனை,

> **“மக்கள் இலக்கியத்திலிருந்து உருவானதே சங்க இலக்கியம்”**[15]

என்ற கூற்றின் வாயிலாக அறியலாம். இவ்வாறு பாணர்களாலும் புலவர்களாலும் பாடப்பெற்ற சங்கப்பாடல்களின் சிறப்பினை,

> **“ஒரு சிறு சொல்லேனும் வறிதே விரிவாமல்**
> **உய்த்துணருந்தோறும் நவில் தொறும் நூல்நயம் போலும்**
> **என்னும் முதுமொழிக்கிணங்க இன்பம் செய்வன**
> **சங்கப் பாடல்களேயாகும்”**[16]

என்று பண்டிதமணி வியந்து போற்றுகின்றார்.

### சங்க இலக்கிய மாண்பு

தமிழ்மொழிக்கு அணியாய் விளங்குவன தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகிய சங்க நூல்களே ஆகும். காலந்தோறும் தோன்றி வளரும் இலக்கியச் செல்வங்கள் தமிழில் மிகுதியாகக்குவிந்து கிடந்தாலும், அக்காலத்தவரையும் தம்பால் ஈர்த்துத்

தம்முள் மூழ்கச் செய்கின்ற திறன் சங்க நூல்களுக்கு மட்டுமே அமைந்துள்ளது. காலத்துக்கேற்ற கருத்துக்களைக் காலச் சூழ்நிலையிலிருந்து மாறுபடாமல் இயற்கையோடு இயைந்து இனிதியம்புகின்ற பன்மையால் ஏற்பட்டிருக்கிறது என்று கூறுவது மிகப் பொருத்தமுடையதாக அமையும்.

பண்டிதமணி மு.கதிரேசனார் சென்னையில் கூடிய குறுந்தொகை மாநாட்டில் நிகழ்த்திய தலைமையுரையில்,

> **"மொழி வளரும், பொருள்களின் இயற்கையை உள்ளபடி எடுத்து விளக்கும் ஆற்றலும், உவமையழகும், ஊன்றி படிப்போர்க்கும் உணர்ச்சியின்பம் ததும்பச் செய்யும் ஒருங்கமைத்து விளக்குவன சங்க இலக்கியங்களேயாகும்"**[17]

என்று குறிப்பிட்டுள்ளார். முத்தாய்ப்பாக, சங்க மொழியிலேயே கூற வேண்டுமாயின், சங்க இலக்கியத்தின் மாண்பு நிலத்தினும் பெரிது வானினும் உயர்ந்தது கடலினும் ஆழம் மிக்கது! என்பார். பண்டிதமணியின் கூற்று சங்க இலக்கியத்தின் மாண்பினை தெளிவுற உணர்த்துகின்றது.

கற்பனைக்கு முதலிடம் அளித்து, அணிநயம் அமைய வேண்டும் என்பதற்காக உணர்ச்சியின் அடிப்படையில் இயற்கைச் சூழலின் விளக்கங்களோடு இயற்றப்பெற்றவையே சங்கப்பாடல்கள் ஆகும். சங்ககால மாந்தர்கள் தனிப்பட்ட விருப்பு வெறுப்புகளுக்கு ஆளாகாமல் சாதி, சமய வேறுபாடுகள் தோன்றாநிலையில் உயரிய வாழ்வை மேற்கொண்டவர்கள் ஆவர். எனவே, அவர்கள் தங்கள் வாழ்வுக்கு மனமகிழ்ச்சியும் பயனும் நல்குகின்ற இயற்கையினை மரபுகளோடு இயைத்து, இலக்கியமாகப் படைத்துத் தந்துள்ளனர். வாழ்க்கை நெறியினை இயற்கை முறையில் ஆராய்வதே சங்க இலக்கியம் என்பது இதன் மூலம் தெளிவாக விளங்குகின்றது.

சங்க இலக்கியங்கள் காலம் கடந்து நிலைத்து நிற்பதற்கும் சிறந்து விளங்குவதற்கும் காரணமாக கீழ்க்காணும் கூற்றை கூறலாம்.

> **“சங்க இலக்கியங்கள் அன்றைய தமிழ்ச் சமுதாயத்தின்**
> **அருமையான நன்கொடை, சின்னஞ்சிறுபாக்களின்**
> **உண்டான செம்மையான பேரிலக்கியப் பெரும்படைப்பு,**
> **வாழ்வாங்கு வாழ்ந்த மக்களின் செம்மையான சிந்தனை**
> **ஓட்டத்தில் பிறந்த செவ்வியல் இலக்கியங்கள்”**[18]

என்னும் அறிஞர் அகத்தியலிங்கத்தின் கருத்து சங்க இலக்கியங்களின் தனிச்சிறப்பை உணர்த்துகின்றது.

## காதல் இலக்கியம்

சங்க இலக்கியம் சங்க காலத் தமிழர்களது வீரம், கொடை, அறம் போன்ற பண்புகளோடு அவர்களது சிறப்பான காதல் வாழ்வினையும் விளக்குகிறது. காதலின் நுண்ணிய உணர்வுகளை எல்லாம் உளவியல் பாங்கோடும், பண்போடும் வெளிப்படுத்தும் பாடல்களைச் சங்க இலக்கியம் கொண்டுள்ளது.

> **“சங்க இலக்கியம் 1862 அகப்பாடல்களைக் கொண்ட**
> **காதல் இலக்கியம் ஒவ்வொரு பாடலிலும் ஆண், பெண்**
> **உள்ளங்கள் உள்ளன. இப்பாடல்களைக் கற்பவர்**
> **காதல் உள்ளங்களைப் பற்றிய அறிவு பெறுவர்”**[19]

என்னும் முனைவர் வ.சுப.மாணிக்கனாரின் கருத்து இங்கே நினைவு கூறத்தக்கதாகும்.

## திணை வகைப்பாடு

சங்க இலக்கியம் அகம், புறம் என இரு பெரும் பிரிவுகளில் அடங்கும். அகம் என்பது தலைவன், தலைவியரிடையே நிகழும் ஐந்திணை ஒழுக்கம் பற்றியது. ஐந்திணை ஒழுக்கமாவது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய நில ஒழுக்கமாகும். புறம் என்பது தலைவனின் வெளியுலக வாழ்வு பற்றியது. அதில் வீரமும் அறமும் பெரிதும் பேசப்படும்.

சங்கப்புலவர்கள் மற்றும் சங்கப்பாடல்கள் குறித்து சில வகைப்பாடுகள் உள்ளன. 2381 பாக்களை 473 சான்றோர்கள் பாடியுள்ளனர். இப்பாடல்கள் அகத்திணையையும், புறத்திணையையும் பற்றியவை. இவற்றுள் அகம் மட்டும் பாடியவர்களின் எண்ணிக்கை 378 பேர். இவருள் பெண்பாற் புலவர்கள் 23 பேர். அகம்பாடாது புறம் மட்டும் பாடியவர்கள் 95 பேர். அகமும் புறமும் என இருதிணையையும் பாடிய புலவர்களின் எண்ணிக்கை 71 பேர் ஆகும்.

சங்க காலப் புலவர்களிடம் இலக்கிய வன்மை மற்றும் மென்மைகளைப் பாட்டின் எண்ணிக்கைக் கொண்டு அளவிட முடியாது. நூறு பாடல் பாடியோர் பாவின் வனப்பும், ஒரு பாடல் மட்டுமே பாடியோரின் பாவின் வனப்பும் சங்கத் தன்மை உடையனவே ஆகும்.

> **“சங்க காலம் யாவர்க்கும் சிந்தனையை வளர்த்த காலம். சங்கக் கல்வி கற்பவர்க்கெல்லாம் சிந்தனையை ஊட்டிய கல்வி”[20]**

என்பர். அகம் பாடிய புலவருள் ஓரே பாடல் பாடியமைந்த புலவர் தொகை 249 எனின், படித்தோர் பெருக்கமும், சிந்தனைப் பரப்பும் செறிந்த தெளிந்த கல்வியும் சங்க காலத்தில் இருந்தமையை அறியலாம். மேலும்,

> **“அறிவு பெருக இன்பமும் உடன் பெருகுதல் இயல்பாதலால் உயிர்ப்பொருள் உயிரியல் பொருள்களின் நுண்ணியதாக நுழைந்தாரைந்த அழகிய கூறுகளைப்பாக்களில் சுவைபெருக அமைத்து பயில்வார்க்கு அறிவோடு இன்பத்தையும் பயக்க வல்லவர்கள் நல்லசைப் புலவர்கள்”[21]**

என்று மறைமலை அடிகள் குறிப்பிடும் வரையறைக்கு முன்னோடிகளாய் இருந்தவர்கள் சங்கப்புலவர்கள் என்று உறுதிபடக் கூறமுடியும். இதன் மூலம் சங்க இலக்கியங்கள் என்பவை பத்துப்பாட்டு,

எட்டுத்தொகை நூல்கள் ஆகிய இரண்டையும் இணைத்துக் கூறப்படுவதாகும். இதனைப் பதினெண் மேல்கணக்கு நூல்கள் என்பர்.

**சங்க இலக்கியங்கள்**

சங்க இலக்கியங்கள் என்று கூறப்படும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்ற இரண்டும் அக்கால மக்களின் வாழ்வியலை எடுத்தியம்புகின்றன. சங்க கால மக்கள் காதலையும் வீரத்தையும் இரு கண்களாகப் போற்றியவர்கள். அவர்களின் வாழ்வு வீரம், கொடை, பண்பாடு, புகழ் மிக்கதாக அமைந்திருந்தது என்பதை இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகின்றது. இதனால் சங்க இலக்கியங்கள் என்பவை அக்கால மக்களின் வாழ்வியலை அறிவதற்கான வரலாற்றுப் பெட்டகமாக அமைந்திருக்கின்றது என்பதை அறிய முடிகிறது. முற்காலத் தமிழகத்தையும் அங்கே சிறப்புற வாழ்ந்த தமிழ்கூறும் நல்லுலக மக்களையும், அவர்கள் வாழ்ந்த பெருமித வாழ்வையும் அவர்களிடையே வழங்கிய அறிவியல் செல்வம் போன்றவற்றையும் ஒளிப்படம் போலக் காட்டுவனவாக அக்காலப் புலவர் பெருமக்களின் பாடல்கள் விளங்குகின்றன. அவற்றுள் இன்று நமக்குக் காணக்கிடைப்பவை பாட்டு, தொகை நூல்களில் சேர்க்கப்பெற்ற செந்தமிழ்ப்பாக்களே.

‘பாட்டு’ என்பது பத்துப்பாட்டையும், தொகை என்பது எட்டுத்தொகை நூல்களையும் குறிப்பனவாகும். இந்தப்பாட்டு தொகை நூல்களே தமிழ் நூல்களுள் மிகப் பழமையானவை. ‘தமிழ் விடுதூது’ பாடிய புலவர் பெருமகனார், இவற்றைக் குறித்துக்கூறும் போது ‘மூத்தோர்கள் பாடியருள் பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் என்கிறார். இங்கே அவர் முற்காலத்து வாழ்ந்த புலவர்களை ‘மூத்தோர்கள்’ என்று கூறியுள்ளார். மேலே சுட்டிய பதினெட்டுச் செய்யுள் நூல்களையும் பழைய உரைக்காரர் குறிப்பிடுகின்றனர். எல்லாவற்றையும் தொகுதியாகச் சொல்லும் சில இடங்களில் ‘பாட்டு’ ‘தொகை’ என்று தொகுதிப் பெயர்களால் குறித்துள்ளனர்.

எட்டுத்தொகை

பழைய தனிப்பாடல் ஒன்று எட்டுத்தொகை நூல்களை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்றும் வரிசையில்

> **"நற்றிணை, நல்ல குறுந்தொகை ஐங்குறுநூறு**
> **ஒத்த பதிற்றுப்பத்து, ஓங்கு பரிபாடல்**
> **கற்றறிந்தோர் ஏத்தும் கலியேடு, அகம், புறம் என்று**
> **இத்திறத்த எட்டுதொகை"**[22]

என்றும் வெண்பா எட்டுத்தொகை நூல்கள் இன்னவென்பதைக் கூறுகின்றது. இத்தொகை நூல்களில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு முதலியன அகம் சார்ந்தது. புறநானூறும், பதிற்றுப்பத்தும் புறம் சார்ந்தது. அகமும், புறமும் கலந்து அமைந்தது பரிபாடல் ஆகும்.

> **"தொகை நூல்களின் காலமுறை' குறித்து எஸ்.வையாபுரிப்பிள்ளை அவர்கள் எழுதிய இலக்கியதீபம் கட்டுரையில் பதிற்றுப்பத்து, புறநானூறு, கலித்தொகை, பரிபாடல் என்ற வரிசை முறையில் தொகை நூல்கள் தோன்றியிருத்தல் கூடும் என்று குறிப்பிட்டுள்ளார். உரை எழுதியவர் காட்டிய முறைவைப்பில் நானூற்றுத் தொகை நூல்களை முன்னரும், பா வகையில் வேறுபட்ட கலித்தொகை பரிபாடல்களை ஈற்றிலும் வைத்து நூறு நூறு பாடல்களைக் கொண்ட ஐங்குறுநூற்றையும், பத்துப்பத்துப் பாடல்கள் கொண்ட பதிற்றுப்பத்தையும் இடையே கொண்டுள்ளமை புலனாகிறது. இதுவே பழமையாக வழங்கிய எட்டுத்தொகை நூல்களின் வரிசை முறையாகும் எனக் கருதப்படுகிறது."**[23]

என்ற கருத்தினை மு.சண்முகம்பிள்ளை பதிவுயிட்டு இருப்பது அக்கருத்தினை வலுசேர்ப்பதாக உள்ளது.

பத்துப்பாட்டு

திருமுருகு ஆற்றுப்படை முதல் மலைபடுகடாம் ஈறாக உள்ள பாடல்கள் பத்தும் பத்துப்பாட்டு எனப்படும். இவற்றின் அடைவு முறையைச் சுவடிகளில் கண்ட தனிப்பாடல் ஒன்று பின்வருமாறு கூறுகிறது.

**"முருகு, பொருநராறு, பாண் இரண்டு, முல்லை,**
**பெருகு வளமதுரைக் காஞ்சி, மருவினிய**
**கோல நெடுநல்வாடை, கோல்குறிஞ்சி, பட்டினப்**
**பாலை, கடாத்தொடும் பத்து"**[24]

என்ற பாடலில் குறித்த முறைப்படியே பல பிரதிகளிலும் பாடல்கள் அமைந்துள்ளன. அன்றியும், முதலாவது, இரண்டாவது என எண்ணுப் பெயராலும் இவை குறிக்கப்பெற்றுள்ளன.

எனினும், பத்துப்பாட்டு எனக் குறிப்பிடும் வழக்கம் மிக முற்பட்டது என்று கொள்வதற்கு இல்லை. இளம்பூரணரும், மயிலை நாதரும் இப்பெயரை உரைகளில் குறிப்பிட்டுள்ளனர்.

எட்டுத்தொகை நூல்களைப் போல இத்தொகுதியைத் தொகுத்தார் மற்றும் தொகுப்பித்தார் பற்றிய குறிப்புகள் எதுவும் கிடைக்கப்பெறவில்லை. கடைச்சங்க வரலாறு கூறுமிடத்து, எட்டுத்தொகை நூல்களை முறையாக எடுத்து விளக்கும் இறையனார் அகப்பொருளுரையில் பத்துப்பாட்டைப் பற்றிய செய்தி எதுவும் காணப்பெறவில்லை.

பத்துப்பாட்டு நூல்களில் ஆற்றுப்படை நூல்கள் ஐந்து, முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை ஆகிய அகம் சார்ந்த நூல்களும், மதுரை காஞ்சி என்ற புறம்சார்ந்த நூலும் இடம் பெற்றுள்ளன. நெடுநல்வாடை அகமும், புறமும் சார்ந்து வருவதாகும்.

பத்துப்பாட்டு நூல் பத்துப்பாடல்களைக் கொண்ட ஒரு கோவையாயினும், ‘குறுந்தொகை’ ‘புறநானூறு’ போன்ற நூற்கோவை அன்று. இவை ஒன்றுக்கு ஒன்று தொடர்பு இன்றி, வெவ்வேறு சூழ்நிலையில், வெவ்வேறு காலத்தில், எழுதப்பட்ட பாட்டுகள் ஆகும். இவற்றுள் சரிபாதி ஆற்றுப்படைகள் ஆகும். அவை, திருமுருகு ஆற்றுப்படை, பொருநர் ஆற்றுப்படை, சிறுபாண் ஆற்றுப்படை, பெரும்பாண்ஆற்றுப்படை, மலைபடுகடாம் ஆகியனவாம். திருமுருகு ஆற்றுப்படைக்குப் ‘புலவராற்றுப்படை’ எனவும், மலைபடுகடாம் ‘கூத்தராற்றுப்படை’ எனவும் வழங்கப்படுகின்றன.

பத்துப்பாட்டுள் சிறியது முல்லைப்பாட்டு. இதில் 103 அடிகள் உள்ளன. மிகப்பெரிய பாடல் மதுரைக்காஞ்சி. இதில் 782 அடிகள் இடம்பெற்றுள்ளன. ஒவ்வொரு பாடலையும் இயற்றிய புலவர் பெயரும், அவரால் பாடப்பெற்ற பாட்டுடைத் தலைவர் பெயரும், அந்தந்தப் பாடல்களின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ள என்பதை, பழைய வாக்கியங்களால் புலனாகின்றது. பட்டினப்பாலை, மலைபடுகடாம் ஆகிய நூல்களைப் பாடியோர் அவற்றின் பாட்டுடைத் தலைவர்கள் பற்றிய செய்திகள் பிற்கால இலக்கியங்களிலிருந்தும் கல்வெட்டுகளிலிருந்தும் தெரிய வருகின்றன.

பத்துப்பாட்டு நூல்கள் ஒரு காலத்தன்றிப் பல்வேறு காலத்தில் பல்வேறு இடத்தினராகிய புலவர்களால் இயற்றப்பட்டவை. இவை ஒவ்வொன்றும் தனித்தனி இலக்கியங்களாகப் போற்றப்படுவதால், இவற்றின் அமைப்பினையும் சிறப்பினையும் அறியலாம்.

இந்நூல்களைத் தொகுத்துப் பார்க்குமிடத்து ஒன்றிக்கொன்று தொடர்புடைய நூல்களாகவே உள்ளன. பொருநராற்றுப்படையும் பட்டினப்பாலையும் கரிகால் பெருவளத்தானைப் பற்றியவை. பட்டினப்பாலை இயற்றிய கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியதே பெரும்பாணாற்றுப்படையும் ஆகும். மதுரைக் காஞ்சியும்

நெடுநல்வாடையும் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைத் தலைவனாகக் கொண்டவை. நெடுநல்வாடை இயற்றியவர் நக்கீரர். இவரே திருமுருகாற்றுப்படையையும் பாடியவராகிறார். மலைபடுகடாத்தின் பாட்டுடைத் தலைவனாகிய நன்னன் மதுரைக்காஞ்சியிலும் குறிப்பிடப்பட்டுள்ளான். குறிஞ்சிப்பாட்டின் ஆசிரியர் கபிலர் குறித்து நக்கீரர் தாம் பாடிய பாடல் ஒன்றில் சுட்டியுள்ளார். குறிஞ்சிப்பாட்டு போன்ற பொருளமைதி கொண்டதே முல்லைப்பாட்டு. சிறுபாணாற்றுப்படை கடையேழு வள்ளல்களின் வரலாற்றை உரைக்கின்றது.

> **“இக்கருத்துகளை பல இயைபுகளைக் கொண்டு வரும் பத்துப்பாடல்களும், பொருநராற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, வலியுறுத்தும் வகையில் மலைபடுகடாம், மதுரைக்காஞ்சி, நெடுநெல்வாடை, முருகாற்றுப்படை, முல்லைப்பாட்டு, சிறுபாணாற்றுப்படை என்னும் வரிசையில் அமைந்திருக்கக்கூடும் எனக் கூறுகிறார் பேராசிரியர் எஸ்.வையாபுரிப்பிள்ளை.”**[25]

என்ற செய்தியை சங்கத்தமிழர் வாழ்வியல் என்னும் நூல் எடுத்துரைக்கிறது.

நமக்கு இன்று முழுமையாகக் கிடைத்துள்ள பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் யாவும் நம்மால் போற்றிப்பாதுகாக்கப்பட்டு வருகின்றன. இவ்விலக்கியங்கள் பல்லோராலும் பாராட்டப்பட்டு வந்த போதிலும் அவை எந்தக் காலத்தில் யாக்கப்பட்டன என்பதற்குக் காலக்கணிப்புக் குறித்த ஆய்வுகள் போதிய அளவு மேற்கொள்ளப்பட்டுள்ளதாகத் தெரியவில்லை. ஆனாலும் இவை கி.பி. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாக இருக்கலாம் என்று சொல்லப்பட்டு வருகின்றன.

டாக்டர் உ.வே.சாமிநாதய்யர் உள்ளிட்ட தமிழறிஞர்கள் பலர் ஒன்று கூடி திருவள்ளுவர் கி.மு.31இல் பிறந்தவர் என்று அறிவித்ததன்

பயனாகச் சங்க இலக்கிய காலம் தோராயமாக கி.மு.இரண்டாம் நூற்றாண்டிலிருந்து கி.பி.இரண்டாம் நூற்றாண்டு வரை என்று கொள்ளப்படுகின்றது.

கனகசபைப்பிள்ளையவர்கள் தாம் எழுதிய ஆங்கில நூலில் சிலப்பதிகாரத்தில் பத்தினிக்கடவுளான கண்ணகிக்கு, சேரன், செங்குட்டுவன் சிலை எடுத்துக் கோட்டம் அமைக்கும் போதிலும், இலங்கை நாட்டின் அரசனான கயவாகு நேரில் வந்திருந்தான் என்னும் செய்தியினைக் கொண்டு கயவாகுவின் காலமானது மஹாவம்சம் என்ற நூலின்படி கி.பி இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என்ற முடிவுக்கு வந்தனர். வித்துவான் மு.இராகவயையங்காரும் தமது ஆராய்ச்சித் தொகுதி' என்ற நூலில் சேரன் செங்குட்டுவன் காலம் குறித்து இதே நிலையினைக் கொண்டுள்ளார்.

கல்வெட்டுக்களைக் கொண்டு இது குறித்து அறியலாம் என்றால் அதுவரை தமிழ்நாட்டில் எந்தவிதக் கல்வெட்டும் கிடைக்கப் பெறவில்லை. இந்நிலையில் வடஇந்தியாவில் அசோகச் சக்கரவர்த்தியின் 14 பாறைக் கல்வெட்டுகள் பல்வேறு இடங்களில் கிடைக்கப்பெற்றன. திரு.டி.ஆர்.பண்டார்கர் என்பார் ஆய்வு மேற்கொண்டு, மற்ற ஆய்வாளர்களின் கருத்துக்களையும் கொண்டு தமது நூலான ‘அசோகா’வில் குறிப்பிடுவதாவது. அசோகர் கி.மு.326லிருந்து கி.மு.272 வரை சக்கரவர்த்தியாக இருந்தவர் கி.மு.262இல் தமது இரண்டாவது கல்வெட்டும் கி.மு.260இல் 13வது கல்வெட்டும் செய்தார். தமது பேரரசை, ஒட்டியுள்ள மற்ற மன்னர்களுக்கு மரியாதை தெரிவிக்கும் வகையில் மேற்கே கிரேக்க அரசர்கட்கும், தெற்கே சோழர், பாண்டியர், சேரன் மற்றும் ‘சத்யபுதோ’ என்ற அரசர்கட்கும் கல்வெட்டுகளைப் பொறித்துள்ளார்.

அதியமானைப் புகழ்ந்து பாடியவர்களில் தலையானவர் ஔவையார். புறநானூற்று 367ஆம் பாடலின்படி உக்கிரப்பெருவழுதி,

மாரிவெண்கோ, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி ஆகிய மூவரும் ஒருசேரவிருந்தபோது அவர்களை ஒற்றுமையுடன் இருக்கும்படி கூறியுள்ளார். அகநானூறு என்னும் தொகை நூலானது உக்கிரப்பெருவழுதியின் ஆணைப்படி உருத்திர சன்மனால் தொகுக்கப்பெற்றது. ஆகையால் அகநானூற்றில் காணப்பெறும் அரசர்கள், புலவர்கள் யாவரும் உக்கிரப்பெருவழுதியின் சமகாலத்தவர் அல்லது முற்பட்டவர்களெனக் கொள்ளுதல் வேண்டும். கி.மு.க்கும் முன்னரே அகநானூறு தொகுக்கப்பெற்றது எனக் கொள்ளுதல் சரியாகும்.

இந்தக் குறிப்பினைக்கொண்டு காணில் பதிற்றுப்பத்தில் அதியமானை வென்ற பெருஞ்சேரல் இரும்பொறையும் பாடப்பெற்றுள்ளான் என்பதால் பதிற்றுப்பத்தும் இந்தக்காலத்தைச் சேர்ந்ததே என்பதை அறிய முடிகிறது.

இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியால் பிணைக்கப்பட்டிருந்த யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையின் ஆணைக்கிணங்க புலத்துறை முற்றிய கூடலூர் கிழாரால் ஐங்குறுநூறு தொகுக்கப்பட்டுள்ளது.

அடிவரையறையை ஒட்டியே குறுந்தொகையைத் தொகுப்பித்தார் பூரிக்கோ என்னும் குறுநில மன்னன். நற்றிணை மற்றும் பிற தொகை நூல்களிலும் பல பாடல்களை அகநானூற்றுப் பாடலாசிரியர்களே பாடியுள்ளனர்.

மேலே கூறியுள்ள செய்திகளின் படி சங்கத் தமிழிலக்கியம் கி.மு.மூன்றாம் நூற்றாண்டிற்கும் மற்றும் அதற்கு முற்பட்ட நூற்றாண்டுகளைச் சேர்ந்தவை என்பது தெள்ளத் தெளிவாக விளங்குகிறது.

அதுமுதல், தமிழிலக்கியங்கள் ஒவ்வொரு காலகட்டத்திலும் ஒவ்வொரு வடிவத்தைப் பெற்று எண்ணிறந்த அளவில் பல்கிப்பெருகி வந்துள்ளன. தமிழ் மொழியின் தொன்மைச் சிறப்புக்கும், பழமைக்கும் பெருமைக்கும் செவ்வியல் தன்மைக்கும் சான்று பகர்வனவாய்ச் சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. இவை, காலத்தால் அழியாத சிறப்பையும், உலக இலக்கியங்களோடு ஒப்பிடத்தக்க பெருமையையும் கொண்டவையாக விளங்குகின்ற தமிழர்கள் சாதி, சமய பூசலின்றி வாழ்ந்த பெருவாழ்வினையும், அறிவு மேம்பாடு மிக்கவர்களாய் திகழ்ந்தமையையும் காட்டும் சான்றுகளாக சங்கத் தமிழிலக்கியங்கள் உள்ளன. தமிழர்களின் அகவாழ்வையும் புறவாழ்வையும் செறிவுறப் புனைந்து காட்டுவன. கருத்து வளமும், கற்பனை சிறப்பும் மிக்கன. பல நூற்றாண்டுகள் ஆயினும் அக்காலத்தமிழ் மக்களின் வாழ்க்கைச் சித்தரிப்புகளை இன்றும் நமக்கு எடுத்துக்காட்டும் காலக்கண்ணாடியாகவும் சங்கத் தமிழ் இலக்கியங்கள் திகழ்கின்றன. இவை தற்கால மக்களின் வாழ்க்கை நெறிகளுக்கும் பெரிதும் துணைபுரியும் வகையில் விளங்குவது சிறப்புடையதாகும்.

**சமூக அமைப்பு**

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ் மக்களின் சமூக வாழ்வையே சங்க இலக்கியங்கள் பிரதிபலிக்கின்றன. பண்டைய தமிழக மக்களின் சமூக அமைப்பு, உணவு வேட்டை, அகபுறவாழ்க்கை நெறிகள், சமூகநீதி, கல்வி, போர்கள் போன்ற பல செய்திகள் அவற்றில் கூறப்பட்டுள்ளன.

தமிழகத்தில் ஆதிகுலங்களின் வேட்டைச்சமூக வாழ்வு, பின்பு மேய்ச்சல் சமூக வாழ்வு, விவசாயச் சமூகவாழ்வு, தாய்வழி மற்றும் தந்தை வழிச் சமூகங்கள் குறித்து சங்க இலக்கியங்களில் விரிவாக விளக்கப்பட்டுள்ளன. தமிழக மக்களின் வாழ்வில் ஆதிப் பொதுவுடைமைச் சமூகம், அடிமைச் சமூகம், நிலப்பிரப்புத்துவச் சமூகம் உருவாகித் திகழ்ந்த விதம் பற்றியும் கூறப்பட்டுள்ளது.

சங்க இலக்கியத் தமிழ்ச் சமூகம் இனக்குழு சமுதாய அமைப்பிலிருந்து நிலைத்த வேளாண் அமைப்புக்கு மாறிச் சென்றது. தமிழகம் ஐவகை இயற்கை நிலப்பிரிவுகளாக மலை, காடு, மேய்ச்சல் நிலம், வயலும் வயல் சார்ந்த நிலம், வெப்பம் மிகுந்த பாலை நிலம் முதலான நிலப்பகுதிகளாகப் பிரிந்ததையும், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகை நிலங்களாகக் கரு, உரிப்பொருள்களுடன் சார்ந்து பொருளாதார அடிப்படையில் அமைந்திருந்ததையும், அவை ஒவ்வொன்றும் தனித்தனியே பறவைகளும், விலங்குகளும், தாவரங்களும் இசைப்பண்களும் கருப்பொருள்களாகப் பெற்றிருந்ததையும் மக்களுடைய ஒழுகலாறுகளும் அவர்களுடைய அன்றாடத் தொழில்களும் சமூக அமைப்புகளும் பழக்க வழக்கங்களும் வெவ்வேறாக இருந்தன. மருதம் சார்ந்த வயல் வெளிகளில் மக்கள் நிலைபேறான வாழ்வு (Settled life) பெற்றனர். நிலங்களை வேளாண்மைக்கு உகந்த வகையில் விளைநிலங்களாக மாற்றியமைத்தனர். இயற்கை வழங்கிய மழையுடன் குளம், கிணறு, ஏரி போன்ற நீர்நிலைகளிலிருந்தும் ஆற்றிலிருந்தும் நீர்ப்பாசன வசதி கிடைத்ததனால் பயிர்கள் செழித்தன. இவ்வாறு பல்வேறு வழிகளில் வேளாண்மைக்கு ஆதாரமான நீர் கிடைத்தனால் உற்பத்தி பெருகிச் செழிந்திருந்ததை சங்க இலக்கியம் காட்டுகிறது. நிலைபெற்ற தொடர் வேளாண்தொழில் மக்கள் தொகை பெருக்கத்திற்கு வழிவகுத்தது. புதிய வர்க்கங்கள் உருவாயின. சமூகப்பிரிவுகள் மேன்மேலும் தோன்றின. செல்வச் செழிப்புடன் வாழ்ந்தனர்.

இது வடபுலத்திலிருந்து ஆரியர்கள் தமிழகம் நாடிவந்து பல்வேறு இடங்களில் குடியமர்வதற்கு வழிவகுத்தது. கலாநிதி கைலாசபதி அவர்கள் ஐவகை நிலங்களை இயற்பியல் புவியியல் சார்நிலங்கள் (Physiographical regions) என்பார்.

கடல்சார்ந்த நெய்தல் நிலமக்கள் மீன் பிடித்தும் உப்பு உற்பத்தி செய்தும் வாழ்ந்தனர். வாணிபம், உள்நாட்டு வாணிபம், வெளிநாட்டு வாணிபம் என இருவகைப்பட்டிருந்தது. உள்நாட்டில் நெய்தல் உப்புக்கு ஈடாக மருத நில நெல்லும் முல்லை நில பால் பொருட்களும் பண்டமாற்றாகப் பரிமாறிக் கொள்ளப்பட்டன. உள்நாட்டு வாணிபம் பெருவளர்ச்சி பெற்று உள்நாட்டு சந்தையை வெளிநாட்டு வாணிபத்தோடு இணைத்தது. புதிய நகரங்கள் தோன்றி அமைவதற்கு உந்து சக்தியாகவும் பின்புலமாகவும் இவ்வாணிபம் அமைந்தது. அந்நிய நாட்டு வாணிப வளர்ச்சி, தமிழகம் நகர்மயமாதல் அரசு உருவாக்க அதிகார வர்க்க எழுச்சி ஆகியவை சங்க இலக்கியத்தில் பிரதிபலிப்பதைக் காணலாம்.

**சமூக அடிப்படைகள்**

தமிழ் இலக்கியத்திற்கு மட்டுமே உரித்தான உயரிய கோட்பாடு திணைக்கோட்பாட்டின் சமூக அடிப்படைகள் ஆகும். இதுகுறித்து பேராசிரியர் ஆர்.எஸ்.சர்மா குறிப்பிடுகையில்,

> **“சமூக அமைப்பு உருவானது பற்றி மெல்ல மெல்லவே அறிந்து கொள்ள முடிகிறது. நிதானமாகவே வெளிப்படுகிறது என்பதனாலேயே சமூக உருவாக்கம் நிகழவில்லை எனத் தீர்மானிப்பது ஏற்றதன்று. மீளுவாக்குதல் என்னும் கருத்தமைவின் அடிப்படையில் நோக்கு வோமானால் சமுதாயத்தில் நிகழும் மாற்றத்தைத் தூய்மை பாரம்பரியம் ஆகியவற்றின் அடிப்படையில் நோக்குவதை விடுத்துப் புவியியல் தொல்லியல் கோணத்திலிருந்து பரவலாகக் காண்போமானால் உண்மை புலனாகும்”**[26]

என்று கூறுகிறார்.

தமிழறிஞர்கள் பலர் தமிழகத்தில் இயற்கையிலமைந்த ஐவகை நிலப்பாகுபாட்டை ஆராய்ந்துள்ளனர். குறிப்பாக பி.டி.சீனிவாச ஐயங்கார், வி.ஆர்.இராமச்சந்திர தீட்சிதர், கமில் சுவலபில், சேவியர் தனிநாயக

அடிகளார் போன்றோர் இத்தகைய நிலப்பாகுபாடு புலவர் கற்பனையில் உதித்தது என்றும் தமிழகத்தில் நாம் கண்டுணரும் வகையில் அமைந்த சமூகப்படி நிலைகள் எனக் கருதுகின்றனர்.

முனைவர் கே.கே.பிள்ளை

> **"ஐவகை நிலப்பாகுபாடு உண்மையே, கற்பனையன்று**
> **தொல்காப்பியத்தில் காணப்படுவது போலவே**
> **வளர்ச்சி இருந்தது"**[27]

என்பார். பல்வேறு நிலங்களில் வாழ்ந்த மக்கள் உருவாக்கிய பொருளாதா அமைப்புகள் ஈடுபட்ட செயல்பாட்டின் விளைவாகத் தோன்றிய வாழ்க்கை நிலைமைகளில் மாற்றங்கள் ஏற்பட்டன. முல்லை நிலமான மேய்ச்சல் நிலத்தில் ஆநிரைகள் வளர்ந்து பெருக இருந்த வாய்ப்பு மருதநில வேளாண் வாழ்க்கைக்கு வித்திட்டது. வேளாண்மை செழிக்க மழைநீர் மட்டுமல்லாமல், சமவெளிகளில் பாய்ந்தோடிய சிற்றாறுகளும், ஓடைகளும் உதவின. பேராறுகளின் கரைகளையொட்டி வேளாண்மை செழித்தது. இதுபுதிய அரசியல் மற்றும் பொருளாதார மாற்றத்தைக் கொணர்வித்ததால் நிலப்பிரிவுகளும் அதிகமாயின.

வடநாட்டிலிருந்து ஆரியர் புலம் பெயர்ந்து வந்து தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் குடியேறியதால் சமூக வாழ்க்கை ஆரிய கலாச்சாரத்துடன் கலந்திடும் சூழல் உருவாயிற்று. தனித்தனியாக உருவான சமூகப்பிரிவுகள் எல்லாம் தனித்தனிச் சாதிக்குழுக்களாக மாறின. ஒவ்வொரு குழுவினரின் காலாச்சாரங்கள் வேறுபடத் துவங்கின. இவை சாதிப்பிரிவுகளை ஆழப்படுத்தின. வேற்று இனமக்கள் புலம் பெயர்ந்து வந்தாலும், அவ்வந்நிலத்துக்குரிய சுதந்திரமான மக்கள் கலப்பு ஏற்பட வாய்ப்பில்லாமல் போயிற்று. இதனால் பல்வேறு சாதிகளும் துணைச் சாதிகளும் உருவாகிப் பலவிடங்களுக்கும் பரவின என்பது பேராசிரியர் சிவத்தம்பியின் கருத்தாகும்.

## ஐவகை நில மாந்தர்

ஐவகை நிலங்களான குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகியவற்றில் வாழ்ந்த மனிதர்களின் தனித்தன்மை, தொழில், உணவுப்பழக்கம், வாழ்விடம், வழிபாடு போன்றவை வேறுபட்டுக் காணப்படுகின்றன. ஒவ்வொரு நிலமாந்தரும் அந்நிலத்திற்குத் தக்க வண்ணம் வாழ்ந்த முறைகளை அறியமுடிகிறது. அந்தந்த நிலப்பகுதியில் வசித்த மக்களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது குறிஞ்சிக்கு வேட்டுவரும், முல்லைக்கு ஆயரும், மருதத்துக்கு உழவரும், நெய்தலுக்குப் பரதவரும், பாலைக்கு எயினரும் என குறிக்கப்பட்டுள்ளது.

## குறிஞ்சி நில மக்கள்

மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சி நிலமாகும். இந்நிலப் பகுதியின் குறிஞ்சிச் செடி மிகுதியாகக் காணப்பட்டதால் இவ்வகை நிலம் குறிஞ்சி என்றழைக்கப்பட்டது. மலைகளில் விலங்குகளை வேட்டையாடித் தினை முதலியன பயிரிட்டு வாழ்ந்தவர் குறிஞ்சி நில மக்கள் இவர்கள் குறவர் என்றும் கானவர் என்றும் வழங்கப் பெறுவார்கள். இவர்கள் மலைப்பகுதிகளில் வாழ்ந்த வீரப்பெருமக்களாவர். மலை வாழ்க்கைக்கேற்ற திண்ணிய உடல் வலிமையுடன் வாழ்ந்தவர்கள். இவர்களுடைய வீடுகள் சிறிய குடிசைகளாய் இருந்தன. அவை புற்களால் வேயப்பட்டிருக்கும். இவர்களுடைய குடிசைகளின் முன்புள்ள முற்றங்களில் வேங்கை முதலிய காட்டுமரங்கள் வளர்ந்தோங்கிக் காட்சி அளிக்கும். இம்மலை வாழ்மக்களின் குடிசைகள் உள்ள பகுதியைச் சிறுகுடி என்றும் பாக்கம் என்றும் வழங்கப்பட்டன.

குறிஞ்சி நில மக்கள் காட்டில் வாழும் விலங்குகளோடு போரிட்டு வெல்லும் வில்லாற்றல் உடையராய் விளங்கினார். விற்பயிற்சி பெறுதலினாலே இவர்கள் தோள் வலிமை வாய்ந்திருந்தனர். வேட்டையாடுதல் இவர்களது முக்கியத் தொழில். வில்லும் அம்பும் இவர்தம் ஆயுதங்கள். வேட்டையாடச் செல்லும்போது உதவிக்கு வேட்டை நாயையும் உடனழைத்துச் செல்வர். இந்நாய்களும்

மிருகங்களைக் கொன்று இவர்தம் வேட்டைக்கு உதவுகின்றன. பகை மன்னருடைய பசுக்களைக் கவர்ந்து வருதலையும் செய்தனர்.

அகில், சந்தனம் முதலிய மரங்களை அழித்து நிலத்தைத் திருத்தி தினைப் பயிரிடுவர். தினையுடன் அவரையும் பயிரிடுதல் உண்டு. தினை அறுத்தபின் அவரைகள் பூத்துப்பயன் தந்தன. தினைக்கதிர் முற்றும் காலங்களில் அதனைக் கொத்தவரும் கிளி போன்ற பறவைகளைக் குறவர் மகளிர் பரண்மேலிருந்து கவண் எரிந்து காவல் புரிவர். இரவில் யானைகள் வந்து புனத்தை அழித்து விடாதபடி பரணிலிரந்து குறவர் காவல்புரிவர். இரவில் தீப்பந்தங்களை எறிந்து இவர்கள் யானைகளை ஓட்டுவர். பலர்கூடி அம்பு எய்து பறைமுழக்கி, கவண் எறிந்து அவற்றை விரட்டுவர். இதனை,

**“துணையின் தீர்ந்த கருங்கண் யானை**
**அணையக் கண்ட அம்குடிக்குறவர்**
**கணையர் கிணையர் கைபுனை கவணர்**
**விளியர் புறக்குடி ஆர்க்கு் நாட”**[28]

என வரும் பகுதியில் குறவர் யானையை ஓட்டிய வகை கூறப்பட்டுள்ளது. மலைமீதுள்ள தேன் அடைகளை எடுத்து வந்து தேன் சேகரிப்பர். ஒரு சில கிழங்குகளை தோண்டி எடுத்துப் பயன்படுத்துவர்.

**உணவு**

இவர்கள் மிருகங்களின் தசையையும், தினை முதலிய மலை தானியங்களையும், கிழங்கு, பழம், தேன் முதலியவற்றை உணவாகக் கொண்டனர். கள்ளும் பருகுவர். மதுவை மூங்கிற் குழாய்களில் சேமித்து வைத்து அவை பக்குவம் வந்தபின் பருகுவர். மான் முதலிய மிருகங்களின் தசையோடு முள்ளம் பன்றியின் தசையையும் இவர்கள் விரும்பி உண்ணும் உணவாகும்.

மலையில் கிடைக்கும் மான் தசை, யானைக்கோடு, அகில், சந்தனம் முதலியவற்றை இவர்கள் நாட்டில் வாழ்வோருக்கு விற்று, நெல் பெற்றுச் செல்லுதல் இவர்தம் வணிக வாழ்க்கையாகும்.

**முல்லைநில மக்கள்**

காடும் காடு சார்ந்த நிலப்பகுதி முல்லை நிலமாகும். முல்லைக்கொடி பெருகிவுளதால் இந்நிலம் முல்லையென்று வழங்கப்பட்டது. காடட ர்ந்த நிலப்பகுதிகளில் ஆநிரைகளை மேய்த்து வரகு முதலிய புன்புலப் பயிர் செய்து வாழ்ந்தவர்கள் முல்லை நிலமக்கள். ஆடு, மாடுகளை வளர்த்து அவற்றால் கிடைக்கும் பால் முதலிய பயன்களைப் பெற்று வாழ்க்ககை நடத்தினர். இவர்கள் கோவலர், ஆயர், இடையர் என்னும் பெயர்களால் அழைக்கப்பட்டனர். இவர்கள் வாழ்ந்த இடங்கள் சிறுசிறு ஊர்களாக இருந்தன. முல்லை நிலத்து ஊர்களைக்

**“கோவலர் பெருந்தண் நிலைய பாக்கம்”**[29]

என ஐங்குறு நூற்றுப்பாடல் குறிப்பிடுகிறது.

இவர்கள் வாழ்ந்த குடிசைகள் குறுகிய கால்களை உடையனவாயிருந்தன. அந்தக் கால்களில் ஆட்டுமறிகள் தின்னுவதற்குரிய தழைகளைக் கட்டி வைத்திருப்பர். அக்குடிசையின் வாயில் சிறு தூறுக்களைக் கொண்டு அமைக்கப்பட்டிருக்கும். கழிகளினால் கட்டப்பட்ட கதவுகளையே அக்குடிசைகள் கொண்டிருந்தன. வரகுத்தாள்களினாலான இருக்கையும் ஆட்டுக்கிடாயின் தோலாலாகிய படுக்கையும் அமைத்திருந்தனர். அக்குடிசை வீடுகளின் முற்றங்கள் மாடுகளைக் கட்டி வைப்பதற்குரிய தாம்புகள் கட்டப்பெற்ற சிறிய முளைகளைக் கொண்டிருந்தன. வெள்ளாடும் செம்மறியாடும் அடைவதற்குரியதாகக் காட்டுமுள்ளாலாகிய வேலி சூழ்ந்த கிடைகளும் காணப்படும்.

ஆயர்கள் ஆநிரைகளை ஓட்டுவதற்குரிய தடியை கையினால் ஊன்றிக் கொண்டிருப்பர். தழைகளை இழுத்து பறிப்பதற்கு ஏற்ற கவையான கோலை வைத்திருப்பர். மரங்களை வெட்டுவதற்கு ஏற்ற கருவியான கோடரியைத் தாங்கியதனால் அவர்களது கைகள் தழும்புகளுடன் வலிமை வாய்ந்திருந்தது. இவர்களின் கை, கால்களில் தழும்புபட்டிருப்பது போலவே தோள்கட்டும் உறிக்காவினால் தழும்புடன் காணப்பெற்றது. இரண்டு பக்கங்களிலும் உறியினைக் கொண்ட கைத்தண்டினால் பொருட்களைச் சுமந்து செல்வர். இவர் அணிந்துள்ள ஒற்றை ஆடையும் அழுக்கடைந்து காணப்படும். காட்டிடத்துள்ள கொம்புகளிலும் கொடிகளிலும் பூக்கும் பலவகைப் பூக்களால் ஆகிய கதம்ப மாலையினை இவர் சூடுவர். தழைகளாலான மாலையும் அணிவர்.

**“பாசிலை தொடுத்த உவலைக் கண்ணி**

**மாசு உண் உடுக்கை, மடிவாய், இடையன்”**[30]

எனவரும் பாடலடிகள் இடையரின் உடுக்கையின் தன்மையையும் அவர் சூடும் மலர் மாலைகளையும் விளக்குவதாய் அமைந்துள்ளன.

### மருதநில மக்கள்

மலைக்கும் கடலுக்கும் இடைப்பட்ட நாட்டுப்பகுதியே மருதம். பல்வகைப்பயிர்களும் பயிரிடப்படுவதற்கு ஏற்ற நில வளமும் நீர்வளமும் கொண்டது. எனவே, மக்கள் மிகுதியாக வாழும் நிலப்பகுதியாக மருதம் விளங்குகிறது. இதன் மண்வளம் கருதி இதனை மென்புலம் என்றழைப்பர். இங்கு மக்கள் சேர்ந்து வாழும் இருப்பிடங்கள் ஊர் எனப்படும். அவற்றின் சிறுமை, பெருமை கருதி சிற்றூர் மற்றும் பேரூர் என வழங்கப்பட்டன. பேரூரின் பகுதிகளாகப் பற்பல சேரிகளும் இருக்கும். இந்த ஊர்கள் செல்வம் நிரம்பித் திகழ்ந்தமையால் இவற்றை மல்லல் பேரூர் என்றழைத்தனர்.

### ஊர் அமைப்பு

மருதநில ஊர்களைச் சுற்றிலும் குளிர்ந்த வயல்வெளிகள் காணப்பட்டன. இங்குள்ள இல்லங்கள் ஏணிக்கும் எட்டாத உயர்ந்த

வடிவுடன் அமைந்திருந்தன. செந்நெல், வெண்ணெல் முதலிய பல்வகை உணவுப்பொருட்களும் கொண்ட குதிர்கள் எனப்படும் நெற்கூடுகள் அவற்றில் இருந்தன. அந்த இல்லங்களின் பக்கங்களில் உழவர்க்கு இன்றியமையா செல்வங்களான கால்நடைகள் தொழுவங்களில் இருந்தன. சிறுவர் அழகுடன் அமைந்த சிறுதேர்களை உருட்டி விளையாடித் திரிந்தனர். தளர்நடை பயிலும் சிறுகுழந்தைகள் அவ்வருத்தம் தீரத் தாய்மாரைத் தழுவிப் பாலை நிறைய உண்டு. தூளிகளில் துயின்றன. மக்கள் வாழ்க்கைக்குத் தேவைப்படும் அனைத்துப் பொருள்களும் நிரம்பியிருந்தலினாலே இவ்வூரார் பசியின் கொடுமையை அறியார். எனவே, மருதநிலத்து ஊர்களை,

**"தொல்பசி அறியாத் துளங்கா இருக்கை மல்லல் பேர் ஊர்"**[31]

என்கிறார் கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

### நீர்வளம்

மருதநிலத்து ஊர்களில் மக்கள் பருகுவதற்கேற்ற நல்நீர்க் குளங்கள் இருந்தன. இக்குளங்கள் பாசி படர்ந்தும் காணப்படும். இதனை,

**"ஊர்உண்கேணி உண் துறை**

**தொக்க பாசி அற்றே பசலை"**[32]

என்று இப்பொய்கையின் பாசியைப் பசலைக்கு உவமையாகக் கூறுகிறார் பரணர். இவ்வகைச் சிறு குளங்களை 'ஊருணி' என்று வழங்கப்படுகின்றன. இதனை 'ஊருணி நீர் நிறைந்தற்றே' என்று குறிப்பிடுகிறார் வள்ளுவர்.

இதனைத்தவிர மருதநில ஊர்களை அடுத்து பெரிய நீர்நிலைகளாகிய பொய்கைகளும் ஆங்காங்கு காணப்படும். ஆறு, குளங்கள் உழவர்களின் உழவுத் தொழிலுக்குத் தேவையான நீரை வழங்குவன.

உழுதொழில்

மருதநிலத்தில் வாழ்ந்த மக்கள் உழவர், களமர் என்றழைக்கப்பட்டனர். இவர்கள் வயலில் உழுதொழில் புரிதலினால் கழனி உழவர் எனவும் சிறப்பிக்கப்படுவர். வயல்களில் நெல், கரும்பு முதலிய பயிர்களைப் பயிரிட்டனர். வயல் ஓரங்களில் கோரைகள் வளர்ந்து காணப்படும். வயலையடுத்த நீர்ப்பகுதிகளில் நண்டுகள் ஊரும். வாளை, வரால் மீன்கள் துள்ளும். இவர்கள் உழுவதற்குக் கருவியாகக் கொள்ளும் கலப்பையானது பெண்யானையின் வாயைப் போல் வளைந்தும் அதன் நுனியிலுள்ள கொழு உடும்பினது முகத்தைப் போல் கூராகவும் அமைந்திருக்கும். உழவுத்தொழிலில் பயிற்சி பெற்ற நல்ல எருதுகளை ஏர்களில் பூட்டி உழுவர். உழவர் எருதுகளைத்

**“ஈரத் செவ்வி உதவின ஆயினும்**
**பல் எழுத்துள்ளும் நல்எருது நோக்கி,**
**வீறு வீறு ஆயும் உழவன் போலப்”**[33]

எனும் புறப்பாட்டுப் பகுதியால் அறியலாம்.

வயல்களில் விதைகளை விதைத்தும், நாற்றாக வளர்த்துப்பின் பெயர்த்து நட்டும் என இருவகைகளில் பயிர் செய்தனர். பயிர் வளரும்போது அவற்றிடையே களைகளாக வளர்ந்தவற்றை உழத்தியர் பறித்து எறிவர் காவிரி நாட்டில் ஒரு வேலி நிலம் ஆயிரங்கலம் செந்நெல்லை விளைவித்த செய்தியை,

**“சாலி நெல்லின் சிறை கொள் வேலி**
**ஆயிரம் விளையுட்டு ஆக**
**காவிரி புரக்கும் நாடு கிழவோனே”**[34]

என்ற பொருநராற்றுப்படை பாடல் வழி அறியமுடிகிறது.

விளைந்த நெற்கதிர்களை உழவர்கள் அரிந்து தெய்வமுறையும் களத்து மேடுகளிலே அடுக்குகின்றனர். அடுக்கிய அரிகளைக் கலைத்துப் பரப்பி அவற்றின் மேல் கடாவிட்டு நெல்லைத் தனியாகப் பிரிக்கின்றனர்.

பிரித்துத் திரட்டி வைத்திருக்கும் நெற்குவியலை பொங்கழி என வழங்குவர். களத்தின்கண் வரும் இரவலர் முதலியவருக்கு நெல்லை வாரி வழங்குவர். இதனை,

**"பெருங்களம் தொகுத்த உழவர் போல**
**இரந்தோர் வறுங்கலம் மல்கவீசி"**[35]

எனவரும் அகப்பாட்டுப்பகுதி உழவர்களின் கொடைத்தன்மையைத் தெரிவிக்கிறது.

### நெய்தல் நிலமக்கள்

கடலோரத்தில் குடிசையமைத்துக் கொண்டு கடலில் படகுகளைச் செலுத்தி வலைவீசி மீன்பிடித்தும், உப்பு விளைவித்து விலைப்படுத்தி வாழ்தலையே தொழிலாகக் கொண்டவர்கள் நெய்தல் நிலமக்களாவர். கடலும் கடல்சார்ந்த நிலப்பகுதியுமே நெய்தல் நிலம் என்று குறிப்பிடப்படுகிறது. இங்கு வாழும் மக்கள் 'பரதவர்' எனப்படுவர்.

கடற்கரையை அடுத்த பெருமணற்பகுதியில் கடல் வளத்தை நம்பி வாழும் மக்கள் இருந்தனர். இங்குள்ள ஊர்கள் கடலையடுத்தும் உப்பங்கழியையடுத்தும் தாழை வேலிகளுடன் காணப்பட்டன. இந்த ஊர்களைப் 'பாக்கம்' என்பர். இவர்கள் வாழும் குடிசைகள் தாழைநாரால் கட்டித் தருப்பைப் புல்லால் கூரை வேயப்பட்டிருக்கும். குடிசைகளின் முற்றத்தில் மீன்பிடிக்கும் வலைகள் இருக்கும். அவ்வலைகளை வெய்யலில் உலர்த்துவர். புன்னைக் கிளைகளால் பந்தல் அமைத்திருப்பர்.

### தொழில்

நெய்தல் நில வாழ்மக்களான பரதவர்கள் கடலிலும், குளங்கள் முதலிய நீர்நிலைகளிலும் உள்ள மீன்களைப் பிடிப்பார்கள். உப்பெடுத்தல் தொழிலும் இவர்கள் மேற்கொண்டமையால் உமணர் என்றும் கூறப்படுவர். பரதவர்களின் முக்கியத்தொழில் மீன்பிடித்தலும்

அவற்றை உலர்த்துதலும் உப்பு எடுத்தலும் ஆகும். இவர்கள் தூண்டிலை இட்டும் வலைவீசியும் மீன்பிடிப்பர். இவர்கள் மீன்பிடிக்கும் படகுகளாகிய திமிலில் ஏறி, கழியையும் கடலையும் துழாவி மீன்பிடித்து வருவர். சுறாமீன் பிடித்தலைச் சுறாமீன் வேட்டம் என்பர். இதனை

**"கொள்வினைப் பொலிந்த கூர்வா யெறியுளி**
**முகம்பட மடுத்த முளிவெதிர் நோன்காழ்**
**தாங்கரு நீர்ச் சுரத்தெ றிந்து வாங்குவிசைக்**
**கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீனெறிய"**[36]

என வரும் பாடற்பகுதிகளால் பரதவர் சுறாமீனையும் பிடிப்பர் என்ற செய்தி விளங்குகிறது.

பரதவதவருடைய உணவு அரிசிக்கூழ், மீன்சூட்டுகள் முதலியவனவாகும். கூழைப் பரந்த பாத்திரங்களில் ஊற்றி ஆறியதும் உண்பர். சுறாமீனின் எலும்பை நட்டு அதில் கடவுள் உறைவதாக நம்பி வழிபட்டனர். தாழைமலர், புன்னை மலரைப் பயன்படுத்துவர். நெய்தல் நிலத்தலைவன் துறைவன் என்று வழங்கப்பட்டான்.

இவ்வாறு கடற்பரப்பிலே கட்டுமரங்களையும் படகுகளையும் செலுத்திச் சென்று மீன்களைப் பிடித்து அவற்றை உணவாகப் பயன்படுத்தி, உப்பினை விளைவித்துக் கடல் கடந்து பண்டமாற்றும் வாணிபத் தொழிலை வளர்த்தது நெய்தல் நிலவாழ்வாகும்.

மீன்பிடிக்க கடலுக்கு காலையில் சென்றவர்கள் மாலையிலும், இரவில் சென்றவர்கள் காலையிலும் மீன்களுடன் கரைக்குத் திரும்புகிறார்கள். கொண்டு வந்த மீன்களைக் கடற்கரையிலே குவித்துவிட்டு, புன்னை நிழலில் அமர்ந்து கள்ளைக் குடித்துவிட்டு தம் பிள்ளைகளோடு குலாவி பரதவர் மகிழ்வர்.

நெய்தல் நில மகளிர் பரத்தியர் என்றழைக்கப்படுவர். பரத்தியர் மீன்களை வெய்யிலில் உலர்த்துவர். அப்பொழுது அதைக் கவரவரும்

பறவைகளை ஓட்டுவர். பரதவ மகளிர் மீன்களை வட்டிகளில் சுமந்து சென்று அடுத்துள்ள மருதநிலத்து ஊர்களில் விற்று நெல் முதலிய பொருட்களாக மாற்றி வருவர்.

கடலில் சங்குகளைத் தொகுத்து முத்தெடுத்தலும் அந்தச் சங்குகளை வளையல்களாக அறுத்து எடுத்தலும் இவர்கள் செய்யும் வேறு தொழில்களாகும். உப்பு விளைவித்தலும் இவர்களது முக்கியத் தொழில்களில் ஒன்றாகும். உழாமலேயே உவர் நீரைப் பாத்தி கட்டி உப்பை விளைவிப்பர். விளைவித்த உப்பை வண்டிகளில் ஏற்றிச்சென்று மருத நிலத்து ஊர்களில் விற்றுவருவர்.

**பாலைநில மக்கள்**

மேற்கூறிய நான்கு நிலங்களிலிருந்தும் மாறுபட்ட நிலப்பகுதி, நீரும் நிழலும் அற்ற பாலை நிலமாகும். பாலை என்பது ஒரு தனிநிலம் அல்ல என்றும், இயற்கை மாறுபாடுகளால் குறிஞ்சி, முல்லை நிலங்கள் மழையின்றி வெப்பம் மிகுந்து வளமிழந்து நிற்கும் போது அந்நிலப்பகுதி பாலை என்று குறிப்பிடப்படுகிறது. பாலையில் வெப்பம் மிகுதியால் மரம், செடி, கொடிகள் கருகி, விலங்குகள் உணவும் நீரும் வேண்டும் அளவு பெறாது வளமிழந்து காய்ந்து காணப்படும். இதனைச் சுரம் என்றழைப்பர். எல்லாப் பருவத்திலும் பாலையாகவே விளங்கும் நிலப்பகுதி தமிழகத்தில் இல்லை. ஆதலால் பாலை நிலம் எனத் தனியே ஒரு பிரிவினைப் பண்டைத் தமிழர் வகுத்து கொள்ளவில்லை. தமிழ்மக்கள் இதனைத் தமிழ்நிலமாக எண்ணுவதில்லை. நீரும் நிழலுமில்லாது வெதும்பிய சுரத்தில் எந்த உணவுப்பொருளும் விளைவதில்லை. வளமிழந்து காணப்படும் இந்நிலத்தைப் புன்நிலம் என்பர்.

இங்கு வாழும் மக்கள் மறவர், எயினர் எனப்படுவர். இவர்கள் வாழும் ஊர் குறும்பு எனப்படும். இவர்களது குடிசை ஈந்தின் இலையால் வேயப்பட்டிருக்கும். நாணைக் கோத்து அமைத்த வில்லும், அம்பும்

இவ்வீடுகளில் இருக்கும். நாய்களைச் சங்கிலியால் கட்டி வைத்திருப்பர். இதனால் இவ்வீடுகளை பிறர் எளிதில் நெருங்க இயலாதபடி இருக்கும்.

இங்கு வாழும் மறவர் உடல்வலிமை மிக்கவர். புலி போன்ற பார்வையும் அஞ்சா நெஞ்சமும் கொண்டவர். இவர் மரத்தால் செய்த வில்லினைத் தாங்கியிருப்பர். இவரது ஆடை செந்நிறம் வாய்ந்தது. காலில் தோற்செருப்பு அணிந்திருப்பர்.

### தொழில்

நீரும் நிழலுமில்லாது வெதும்பிய சுரத்தில் எந்த உணவுப் பொருட்களும் விளைவதில்லை. எனவே இங்கு வாழ்பவர் உழவுத்தொழில், ஆநிரை மேய்த்தல் போன்ற வேறு தொழில்கள் செய்வதற்கு வாய்ப்பில்லாததான் காரணமாக இவ்வழிச்செல்வோரை வருத்தி அவர்தம் பொருள்களைக் கொள்ளையடித்தலையும் தொழிலாகக் கொண்டிருந்தனர்.

இவர்தம் மகளிர் எயிற்றியர் எனப்படுவர். இவர் கரம்புகளில் எறும்பு சேர்த்து வைத்திருக்கும் புல்லரிசி எடுத்து வந்து நிலவுரலில் போட்டு உலக்கையால் குத்துவர். பழைய பானையிலே வார்த்துச் சோறாக்குவர். சிலர் மேட்டு நிலங்களில் விளைந்த நெற்சோற்றுடன் உடும்பின் தசைக்கறியுடன் உணவு கொள்வர்.

### ஊர் அமைப்பு

சங்க கால நானில மக்கள் தாம் வாழ்ந்த நிலத்தின் இயற்கையோடு பொருந்திச் சூழ்நிலைக்கேற்ற தொழில்களையுடையராய் ஒருவொருக்கொருவர் வணிகமுறையில் பண்டமாற்று செய்து கொண்டு வாழ்க்கை நடத்தினர். இவர்கள் வாழ்ந்த ஊர்கள் அவர்கள் தொழில்புரிந்த நிலங்களுக்கு அருகாமையிலேயே அமைந்திருந்தன. நீர் வசதியைப் பொறுத்தும் காட்டுச் சுனைகளை அடுத்தும், ஆற்றோரங்களிலும், வயலோரங்களிலும், கடற்கரைகளிலும் வாழ்ந்தனர். இவர்கள் வாழ்ந்த வீடுகள் சிறுகுடிசைகளாாக இருந்தன. சிறு நாட்டுத்

தலைவர்களாயும் சிறந்த நல்வாழ்க்கை வாழ்ந்தனர். இவ்வகை ஊர்கள் நானிலத்திலும் சிறியனவும் பெரியனவுமாக அமைந்திருந்தன.

சிற்றூர்களும் பேரூர்களும் பல்வேறு வகையான தொழில் புரியும் மக்களும் ஒருங்கே கூடி வாழத்தக்க பேரமைப்புடன் கூடிய நிலையில் விளங்கின. பொதுவாக எல்லா ஊர்களுமே காவல் அரண்களைப் பெற்றிருந்தன. காடுகளிலும் குன்றுகளிலும் அமைந்திருந்த சிற்றூர்களும் கூட முள்வேலி அரணுடன் இருந்ததாகக் கூறப்பட்டுள்ளது. இந்த காவல் அமைப்பு பேரூர்களில் மதில் சூழ்ந்த அகழியைச் சுற்றி அமைக்கப்பட்டிருந்தது. பேரூர்களில் ஊரைச்சுற்றி பெரும் மதில்களும், அதைச் சுற்றிலும் குறுங்காடும் அமைந்திருந்தன. அகழியில் முதலைகள் வளர்க்கப்பட்டன. இதனை,

**“நிலவரை இறந்த குண்டு கண் அகழி**
**வான் தோய்வு அன்ன புரிசை, விசும்பின்**
**மீன் பூத்தன்ன உருவ ஞாயில்**
**கதிர் நுழைகல்லா மரம்பயில் கடி மிளை**
**அருங்குறும்பு உடுத்த கானப்பேர் எயில்”**[37]

எனும் பாடல் வரிகள் மூலம் பேரூர்களில் மதில், அரண் போன்ற காவல் அமைப்புகள் அமைக்கப்பட்டு இருந்ததை அறியமுடிகிறது. மதில், அரண் சூழ்ந்த பேரூர்களுக்கு உள்ளே செல்ல மிகப்பெரிய வாயில் அமைக்கப்பட்டிருந்தது. மக்களும், யானை, குதிரை போன்றவைகளும், தேர் போன்ற வாகனங்களும் எப்பொழுதும் அவ்வழியே சென்று வந்து கொண்டிருந்த காரணத்தால் அது உயிர்ப்புடன் விளங்கியது. இவ்வாறு இடைவிடாது செயல்பட்டுக் கொண்டிருந்த மதுரை வாயிலை

**“வையை யன்ன வழக்குடை வாயில்”**[38]

என்று இடையறாது ஓடும் வையை ஆற்றுக்கு ஒப்பிட்டுக் கூறியுள்ளார் மாங்குடி மருதனார்.

நகரமைப்பு

நகரின் உள்ளமைப்பு அரசன் இருக்கையை மையமாகக் கொண்டு அந்தணர், வணிகர், வேளாளர் என்னும் நாற்பெருங்குடிமக்கள் வீதிகளும், போர்மறவர், கொல்லர், குயவர் முதலிய பல்வேறு தொழில்புரியும் மாந்தரும் வாழும் வீதிகளும் வரிசையாக அமைந்திருந்தன. இவ்வகைப்பானது தாமரைப்பூவின் நடுவிலுள்ள கொட்டையை அடுத்து இதழ்கள் அமைந்திருப்பதைப் போல் உள்ளது என்று மதுரை நகரையும், கச்சி நகரையும் குறிப்பதிலிருந்து சங்ககாலத்தில் நிர்மாணிக்கப்பட்ட நகரங்கள் ஒருவகை நியதியின்படியே அமைக்கப்பட்டு இருந்ததை அறியலாம். இதனை,

**“மாயோன் கொப்பூழ் மலர்ந்த தாமரைப்**
**பூவோடு புரையும், சீர் ஊர் பூவின்**
**இதழகத்து தனைய தெருவம் இதழகத்து**
**தரும்பொகுட் டனைத்தே அண்ணல் கோயில்**
**தாதின் அனையர் தண்தமிழ்க் குடிகள்”**[39]

என மதுரை நகரின் கட்டமைப்பினைப் பரிபாடல் கூறுகிறது. இது போன்றே.

**“நீல நிற உருவின் நெடியோன் கொப்பூழ்**
**நான்முக ஒருவற் பயந்த பல் இதழ்த்**
**தாமரைப் பொகுட்டின் காண்வரத்தோன்றி**
**........................................................**
**மலர்தலை உலகத்துள்ளம் பலர் தொழ**
**விழவு மேம்பட்ட பழ விறல் மூதூர்”**[40]

எனக் கச்சி நகரின் அமைப்பும் உள்ளமையை பெரும் பாணாற்றுப்படை பாடல் மூலம் அறியமுடிகிறது.

அரண்மனை

கோபுரவாயில்களும் பெரியமுற்றமும், முன்வாயிலும் உடையவனாய் அரண்மனை அமைந்திருந்தது. பெரியதொரு குன்றைக் குடைந்து வாயிலில் அமைந்ததைப் போன்ற தோற்றத்துடன் கோபுரம்

இருந்தது. வெற்றிக்கொடியோடு யானை நடந்து செல்லும்படியான உயரமான வாயிலைக் கொண்டிருந்தது. வாயில் நிலையிலே பொருத்தப்பட்டிருந்த இரண்டு கதவுகளும் புகையும் உட்புகாதவாறு இடைவெளி இன்றி நன்றாகப் பொருத்தி அமைக்கப்பட்டிருந்தன.

இம்மாளிகையில் இரவில் நிலவினை ரசிப்பதற்காக நீண்ட மேல்மாட முற்றங்கள் காணப்பட்டன. அரசனைத் தவிர வேறெந்த ஆடவரும் நுழைய முடியாத அந்தப்புரம் அமைந்திருந்தது. அரண்மனையில் பல இடங்களில் யவனர்களால் செய்து தரப்பட்ட பாவை விளக்குகள் சுடர்விட்டு ஒளிவீசிக் கொண்டிருந்தன.

**சங்க காலத்தில் கல்வி**

கல்வியும் கலையும் சிறந்து விளங்கின. புலவர் பெருமக்களும் இருந்தனர் இவர்களால் பாடப்பெறும் நிலையை மன்னர் முதலானோர் பெரும்பேறாகக் கருதினர்.

இதனை,

**பல்கேள்வித் துறை போகிய**
**தொல் ஆணை நல் ஆசிரியர்**
**உறழ்குறித்து எடுத்த உருகெழு கொடியும்"**[41]

எனும் பட்டினப்பாலை பாடலடிகளால் உணரலாம்.

**அகசமூக அமைப்பு**

**தலைவன்**

அகப்புற வாழ்வில் தலைமை மாந்தருள் முதன்மை பெற்று விளங்குபவன் தலைவனே ஆவான். அகவாழ்வில் தலைவியின் உள்ளம் கவர்ந்தவனாகவும், புறவாழ்வில் வீரம் மிக்கவனாகவும் தலைவன் திகழ்கிறான். சங்க இலக்கியங்கள் தலைவனைத் தன்னேரில்லாத் தலைவனாக சிறப்பிக்கிறது.

**வினையே ஆடவர்க்குயிரே"**[42]

என்று குறுந்தொகை குறிப்பிடுகின்றது. பொருள் தேடிச் செல்வது ஆடவர்கழுரிய பண்பாகும். தலைமகனுக்கே உரிய பண்புகளான பழிபாவத்திற்கு அஞ்சும் நிலையையும், அறிவு நிலையையும் குறித்து தொல்காப்பியர் கூறியுள்ளார்.

தலைமகன் உயர்ந்த பண்புகளைக் கொண்டு பிறருக்கு எடுத்துக்காட்டாக விளங்குபவனாகவும், பிறரால் போற்றப்படுபவனாகவும், பிறன்மனை நோக்காதவனாகவும் இருப்பவனாக சங்க இலக்கியங்களில் கூறப்பட்டுள்ளான். தவைன் என்பவன் சொல்லிலும், செயலிலும், அறம் பொருள் இன்பங்களிலும் வழுவாதவனாகவும் இருக்க வேண்டும் என்பதை,

**"வாயினும் கையினும் வகுத்த பக்கமொடு**
**ஊதியம் கருதிய ஒருதிறத்தானும்"**[43]

என்ற தொல்காப்பிய நூற்பா சுட்டுகிறது.

**தலைவி**

சங்க இலக்கிய அகப்பாடல்களில் தலைவனுக்கு நிகராகத்தலைவியும் சிறப்பிக்கப் பெறுகிறாள். தலைவியின் களவு மற்றும் கற்பு வாழ்க்கையைச் சங்க அகப்பாடல்கள் சித்தரித்துக் காட்டுகிறது. தலைவியின் அகச்சிறப்பைக் குறுந்தொகைப் பாடல் பின்வருமாறு குறிப்பிடுகிறது.

**"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**
**கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்**
**குவளையுண் கண் குய்ப்புகை கழுமத்**
**தான்றுழந் தட்ட தீம்புளிப் பாகர்**
**இனிதெனக் கணவ னுண்டலின்**
**நுண்ணிதின் தமிழ்ந்தன் றொண்ணுதன் முகனே"**[44]

என்ற இப்பாடல் இல்லற வாழ்க்கையில் தலைவியின் பண்பினைக் குறிக்கிறது. மேலும் விருந்தோம்பல், சுற்றம் ஓம்பல், கற்புடைமை,

ஒழுக்கமுடைமை, பொறையுடைமை போன்றவற்றையும் பெண்மைக்குரிய பண்புகளாகக் கூறப்பட்டுள்ளது.

தோழி

சங்க அகப்பாடல்களில் பெரும்பாலானவை தோழிக் கூற்றாகவே அமைந்துள்ளது. இதன்மூலம் தோழியின் முக்கியத்துவத்தை அறியலாம். தலைவியின் நல்வாழ்விற்கு உற்ற துணையாக விளங்குபவளாக தோழி திகழ்கிறாள்.

களவு காலத்தில் தலைவன் தலைவியைச் சந்திக்க தோழியிடம் கூற்று நிகழ்த்துவான். தலைவியால் பெரிதும் விரும்பப்படுபவள் அவளது தோழியே என்பதை அறிந்து. அவள் வாயிலாகத் தலைவியை அடைய முயற்சி செய்வான். இவ்வாறு தலைவன் தலைவியை அடைய முயற்சி செய்யும்போது, பகற்குறி வேண்டியும் இரவுக்குறி வேண்டியும் பேசுவான்.

**“ஒண்ணுதல் மகளிர் ஓங்கு கழிக்குற்ற**
**கண்நேர் ஒப்பின் கமழ்நறு நெய்தல்**
**அகல்வரிச் சிறுமனை அணியுந்துறைவ”**[45]

என்ற பாடல் பகற்குறி வருகிற தலைவனிடம் வரைவு கடாது முகமாகத் தோழி தலைவனிடம் கூறுவதாக அமைந்துள்ளது.

தலைவின் களவு வாழ்க்கை கற்பு வாழ்க்கையாக மலர்வதற்கு எல்லா வகையிலும் தன்னை ஈடுபடுத்திக் கொள்பவளாகத் தோழியானவள் திகழ்கிறாள். தலைவன் தலைவி ஆகியோர் மனதில் தோன்றும் எண்ணங்களை அப்படியே அறியும் ஆற்றல் கொண்டவள் தோழி என்பதை,

தோழியின் பண்புகளாக சூழ்நிலைக்குத் தகுந்தபடி விழிப்புடன் இருத்தல், எளிதாகப் பழகுதல், உற்சாகத்துடனும் செயலில் துடிப்புடனும் இருத்தல், எந்த நிலையிலும் தன்னிலை அறிந்து செயல்படுதல் போன்ற ஆளுமைப் பண்புகள் கூறப்படுகின்றன. கடமையுணர்ச்சியும், உலகியல் அறிவும் கைவரப்பெற்றவள் என்று கூறப்பட்டுள்ளதன் மூலம் தோழியின்

அறிவுத்திறத்தையும், தலைவிக்கு உற்ற துணையாக அவள் விளங்கிய தன்மையையும் சங்க இலக்கியம் நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

**செவிலித்தாய்**

நற்றாயை விட தலைவியின் நல்வாழ்வில் அதிக அக்கறை காட்டுபவள் செவிலித்தாயே ஆவாள். இதனை சங்க இலக்கியங்கள் மெய்ப்பிக்கிறது. தலைவியை குழந்தைப் பருவத்திலிருந்து வளர்த்து, களவு காலத்தில் தலைவி உடன்போக்குச் சென்றபோது அவளைத் தேடிச் சென்று அவளுடைய நல்வாழ்வில் ஈடுபாடு கொண்டவளாக செவிலித்தாய் விளங்குவதை சங்க இலக்கியங்கள் விளக்குகின்றன.

செவிலி தலைவியை அரவணைத்ததோடு மட்டுமல்லாமல் தலைவியினுடைய குழந்தையையும் அரவணைத்து அன்பு காட்டி வளர்க்கிறாள். இச்செவிலிக்குரிய பண்பாக,

**"கழிவினும் வரவினும் நிகழ்வினும் வழிகொள**
**நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்**
**செவிலிக்கு உரியவாகும் என்ப"**[46]

எனத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார்.

இதன்மூலம் தலைவிக்கு நற்பண்புகளை ஊட்டி வளர்த்தவள் செவிலித்தாயே என்பதை அறியமுடிகிறது.

**பாங்கனின் பண்பு**

பாங்கர் கூட்டம் அகப்பொருள் இலக்கணங்களில் ஒன்று. பாங்கன் தலைவனை ஆற்றுப்படுத்தி அவனது வாழ்வில் உற்ற துணையாக உள்ளான். மேலும், தலைவியின் ஊடலைத் தணிக்கும் வாயிலாகத் திகழ்கிறான். தலைமகன், தலைமகள் ஆகிய இருவர்களுக்கிடையே உள்ள அன்பின் பிணைப்பு இழை அறுபடாமல் பாதுகாப்பதைத் தலையாயக் கடமையாகக் கருதி வாழ்ந்தனர் என்பதை சங்க இலக்கியங்கள் வழி அறியமுடிகின்றது.

பரத்தயர் நிலை

'ஒருவனுக்கு ஒருத்தி' என்பது சமூகத்தில் காணப்படும் கட்டுப்பாட்டு நெறி தமிழகத்தில் 'ஒருத்தி'யைக் கட்டுப்படுத்திய அளவிற்கு 'ஒருவனை'க் கட்டுப்படுத்தவில்லை என்பதை சங்க இலக்கியங்கள் உறுதிப்படுத்துகின்றது.

பரத்தையானவள் தன்னைப்புகழ்ந்து, தலைவனையும் தலைவியையும் இழித்துரைக்கும் இயல்புடையவள். மேலும் செல்வமிக்க ஆடவரின் செல்வத்தைத் தம் இளமை அழகால் கவரும் பண்புடையவள் என்பதை,

**"கிழவோள் தன்னையுங் கிழத்தி தன்னையும்**
**இகழ்தலும் தம்மைப் புகழ்தலும் நிகழ்பொருள்**
**காத்தலும் பரத்தையர் கடனென மொழிப"**[47]

என்று அகப்பொருள் விளக்கம் குறிப்பிடுகிறது.

பரத்தையுருடன் கூடுவது தவறு என்றும், வேசியர்களது நட்பு விளக்கொளிக்குச் சமம் என்றும் நாலடியார் கூறுவதை,

**"விளங்கொளியும் வேசியர் நட்பு மிரண்டுந்**
**துளக்கற்ற நாடின் வேறல்ல - விளக்கொளியும்**
**நெய்யற்றே கண்ணே யறுமே யவரன்புங்**
**கையற்ற கண்ணே யறும்"**[48]

எனும் பாடல்வழி அறியலாம். விளக்கொளி எண்ணெய் இல்லாத போது அணையும். அதுபோல பொதுமகளிரான வேசியர்களது அன்பு பொருளற்ற போது அற்றுவிடும் என்று அவர்களது அன்பின் தன்மை குறித்து கூறப்பட்டுள்ளது. அத்தடன் பணமில்லாதவர்கள் திருமாலைப் போன்ற அழகுடையவர்களாக இருந்தாலும் கூட வேசியர் அவனுக்கு இடம் அளிக்கமாட்டார் எனவும் நாலடியார் விளக்குகிறது. இதன்மூலம் பரத்தையரின் அன்பு ஆடவர் வசமுள்ள பணத்தின் மீதுதானே அன்றி ஆடவர்மீது அல்ல என்று இப்பாடல் மூலம் விளக்கப்பட்டுள்ளது.

ஏறுதழுவுதல்

சங்க இலக்கியத்தில் முல்லைக்கலியில் ஏறுதழுவுதல் என்பது சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. இந்நில மக்கள் ஏறுதழுவியவனுக்கு இவள் உரியவள் என்று கூறி ஏறுகளைத் தொழுவில் புகுத்துவா். தலைவன் தலைவிக்கிடையே காதல் ஏற்பட்டு மணம் புரிந்து கொள்ளுதல் மரபு. இம்மக்களின் மரபறிந்து, அன்பின் ஐந்திணைப்பாற்படுத்தி ஆயா் தம் மணமுறையை தோழி வாயிலாக அறிந்து ஏருதழுவித் தலைவன் தலைவியை அடைதலும் உண்டு.

பல எருதுகள் தொழுவில் திரிகின்றன. அவற்றைப் பொதுவா் அடக்கத் துணிவா் என்பதனை,

**“புரிபு, புரிவு புக்க பொதுவரைத்**

**தெரிபு, தெரிபு குத்தினை ஏறு”**[49]

என்னும் பாடலடிகள் மூலம் இதனை அறியலாம். கொம்பில் குடல் சுற்றிக் கிடக்கிறது. அதைக் கண்டஞ்சாது, கொம்பிடைச் சிக்கிய குடலை மீண்டும் தன் வயிற்றில் திணித்துக் கொள்கிறான். வேறொருவன் எருதின் கழுத்தில் மாலை போல பற்றி கொண்டு இருக்கிறான். மற்றொருவன் மலையேற்றின் மேலிருந்து விரட்டுகிறான். இவ்வாறு ஆயா்களின் வாழ்க்கை ஏறுதழுவலுடன் தொடா்பு கொண்டுள்ளது எனக் கூறப்பட்டுள்ளது. ஏரு தழுவலில் தோற்கும் தலைவனை ஆயமகள் விரும்பமாட்டாள் என்பதை,

**“கொல்லேற்றுக் கோடஞ்சுவானை மறுமையும்**

**புல்லாளே ஆய மகள்”**[50]

என்னும் பாடல் வரிகள் உணா்த்துகின்றன. சங்க காலத்தில் ஆயா்கள் ஏரு தழுவுதலைத் திருமண முறையாகக் கருதினா் என்பதையும், அக்கால மகளிா் வீரமிக்க ஆடவனையே விரும்பினா் என்பதையும், காதலிக்காக காதலா் கொண்ட பெருமுயற்சியினையும் சங்க இலக்கியம் எடுத்துக்காட்டுகிறது.

திருமணம்

சங்க காலச் சமூகத்தில் பல்வேறு முறைகளில் திருமணங்கள் நடந்ததையும், அவற்றில் காதல் திருமணங்களும் நடந்து வந்தன என்பதையும் சங்க இலக்கியங்கள் வழி அறியமுடிகிறது.

**“யாயும் ஞாயும் யாரா கியரோ**
**எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்**
**செம்புல பெயல் நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே”**[51]

என்னும் சங்கப்பாடல் காதலின் தன்மையை உணர்த்தியுள்ளது. காதல் மகத்துவமிக்கது என்பதும், காதல் சாதி மதத்தையோ பெற்றோர் சம்மதத்தையோ, உற்றார் உறவினர் ஆதரவையோ வேண்டுவதில்லை என்பதும் விளக்கப்பட்டுள்ளது. காதலின் வலிமையையும், காதலரின் காதலன்பு கொண்ட உள்ள உணர்வுகளையும் சங்கப்பாடல்கள் படம்பிடித்துக் காட்டியுள்ளன.

தமிழர் வாழ்வில் காதல் தழைத்திருந்தது. தொடக்கத்தில் களவுமணம், பிறகு கற்புவாழ்க்கை என்ற முறையில் மலர்ந்தது. காதல் வாழ்க்கையில் ஏற்பட்ட சில தவறுகளின் காரணமாக திருமணங்கள் சடங்கு சம்பிரதாயங்களுடன் நடந்தேறின. இம்முறை சான்றோர்களால் வகுக்கப்பட்டது. ஒரு பெண்ணைக் காதலித்தவன், அவளை ஏமாற்றுவதைத் தடுப்பதற்காகவே இத்தகைய மணமுறையை சான்றோர்கள் வகுத்தனர் என்பதையும் அறியமுடிகிறது.

புறசமூக அமைப்பு

சங்க காலத் தமிழர்களின் பொது வாழ்க்கையை, வேறுபாடு தெரிவதற்காக நானிலப்பகுப்பின்படி கூறப்பட்டாலும் இவர்கள் ஒருவருக்கொருவர் அறிந்து வாழ்ந்து தங்களது பொருள்களைப் பரிமாறிக்கொண்டு வாழ்ந்தனர். கானிலுறையும் வேட்டுவன் தான் வேட்டையாடிய மானின் தசையை வட்டிலில் எடுத்து வந்தும். ஆய்மகள்

தயிர் முதலியவற்றைத் தாழியில் கொண்டுவந்தும் மருதநிலத்தாருக்குக் கொடுத்துவிட்டு மாற்றாக அவர்கள் அளித்த நெல்லைப் பெற்றுச் சென்றனர். இவ்வாறே நெய்த நில மக்களாகிய பரதவர்களும் உமணர்களும் தாம் ஈட்டிய மீனையும் உப்பையும் பிறநில வாழ்மக்களுக்கு கொண்டு சென்று கொடுத்து அதற்கு ஈடாக உணவு தானியங்களைப் பெற்றனர்.

### தொழில்சார் சமூகம்

நானில மக்களைப் போன்றே அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் எனப்படும் நாற்பெரும் குலத்தாரும் தொழில்முறையால் வேறுபட்டுத் தனித்தனிக் குழுவினராய் வாழ்ந்தனர் என்று அறிய முடிகிறது. இவர்களது வாழிடங்கள் ஓரே ஊருக்குள் ஒன்றையொன்று அடுத்து தனித்தனித் தெருக்களைக் கொண்டிருந்தது.

### அந்தணர்

அந்தணர் வேதம் ஓதி, அறுதொழில் புரிந்து, முத்திப்பேணி, அரசர் பொருட்டாகவும் பிறர் பொருட்டாகவும் வேள்வி முதலியன செய்து எல்லோருடைய மரியாதைக்கும் உரியவராய் வாழ்ந்தனர். இவர்கள் மார்பில் பூணூல் தரித்திருந்தனர். நெருப்பினை வழிபட்டனர். இவர் வாழ்ந்த இல்லம் சாணத்தால் மெழுகப்பட்டிருக்கும் வழிபடும் தெய்வங்களை அங்கு வைத்திருப்பர். இவர் வாழ்ந்த தவச்சாலைகள் அந்தணர் பள்ளி என்றழைக்கப்பட்டன.

இல்லத்தை ஒட்டிய குறுங்கால் பந்தரில் பசுங்கன்றுகள் கட்டப்பட்டிருக்கும். இவர்கள் வளர்த்த கிளிகள் கூட வேதஒலி எழுப்புமாம். இவர்கள் நெற்சோற்றை மாதுளையின் பசுங்காயோடு மிளகுப்பொடி சேர்த்தும், மாவடு ஊறுகாயோடும் மற்றும் பசுவின் மோரோடும் உண்டனர். இவர்களைக் கொண்டு பேரரசர்களும், குறுநில மன்னர்களும், செல்வந்தர்களும் யாகங்களைச் செய்வித்தனர். இவர்களுக்கு நிலமும் பொன்னும், பிறபொருள்களையும் தானமாக

அளித்தனர். நிலப்பகுதிகளும் மானியமாகத் தரப்பட்டன. பொதுவாக அந்தணர்கள் சமூகத்தில் சிறந்த ஒழுக்கம் உடையவராக மதிக்கப்பட்டனர். இவர்கள் வருந்தும்படியான எச்செயலையும் மன்னர்கள் செய்வதில்லை.

**அரசர்**

அரசின் தலைமைப் பொறுப்பில் இருந்தவர்கள் அரசர்கள் ஆவர். அரசனுக்கு உதவியாக இருந்து, தக்க அறிவுரைகளைக் கூறி வழிநடத்துபவரே அமைச்சர் எனப்படுவார். நாட்டில் அரசன் தன் பணிகளை நிறைவேற்ற உதவியாக இருப்பவரே அரசாங்க அலுவலர் எனப்படுவார். நாட்டையும் நாட்டு மக்களின் நலன்களையும் பாதுகாப்பதில் அரசருக்கு உதவியாக இவர்கள் இருவரும் செயல்படுவர்.

சங்க காலச் சமூகம் ஆண் தலைமையத்துவம் பெற்றதாக இருந்தது. எதனையும் தீர்மானிக்கும் சக்தி பெற்றவனாக ஆண் இருந்துள்ளான். எனவே தான் சங்கப்பாடல்கள் குறிப்பிடும் மன்னர்களுள் ஒருவர் கூடப்பெண்ணாக இல்லை என்பதை அறியலாம்.

அரசனே அந்நாட்டில் நடைபெறும் அனைத்து நிகழ்வுகளுக்கும் பொறுப்பானவன். எனவே நாட்டிற்கு அவனே உயிர் அதனால் மன்னனில்லாத நாடு உயிரற்ற உடம்பு போன்றதாகும். இதனை,

**"நெல்லும் உயிர்அன்றே நீரும் உயிர் அன்றே**
**மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்**
**அதனால், யான் உயிர் என்பது அறிகை**
**வேன் மிக தானை வேந்தர்க்குக் கடனே"**[52]

என்னும் புறநானூற்றுப் பாடல் விளக்குகிறது. உலக உயிர்களைக் காப்பது நெல்லும் நீரும் மட்டுமன்று. பரந்த இவ்வுலகம் வேந்தனின் முறையான காவல் சிறப்பினாலேயே எப்பொழுதும் நிலைத்து நிற்பதால் அரசனே உலகுக்கு உண்மையான உயிர் ஆவான். அதனால் வேலால் மிக்க படையுடைய வேந்தனுக்குத் 'தானே உலகின் நல்வாழ்வின்

உயிர்ப்பாக விளங்க வேண்டுபவன்' என உணர்ந்து அதற்கேற்ப மக்களைப் பேணி நடப்பது கடமையாகும் என்பதை ஒவ்வொரு மன்னனும் தனது கடமையாக எண்ணி நடக்க வேண்டும்.

புறநானூற்றுப்பாடலில் பாண்டியன் நெடுஞ்செழியன் 'என் நிழல் வாழ்நர்' எனக்கூறுவது. மன்னின் ஆட்சிச் சிறப்பாலேயே திறம்பட்ட அரசியலும், பயனுடைய திட்டங்களும், மக்கள் நலனுக்காக வகுக்கப்படும் என்பதை அறிய முடிகிறது.

**வணிகர்**

வணிகத் தொழில் செய்பவரே வணிகர் எனப்படுவர். இவர் உயர்ந்த இல்லங்களில் வசித்தனர். இவர்கள் பலவகைத் தொழில்மாட்சிகள் பெற்று இருந்தனர். அறநெறி சிறிதும் பிறழாது இல்லத்திற்குரிய நல்வழிகளிலேயே வாழ்க்கை நடத்தினர். பல்வகைப் பண்டங்களும் பல்வகை உணவுகளும் இவர்கள் இல்லங்களில் நிரம்பியிருந்தன.

மலை, நீர், நிலம் இவைகளிலிருந்து தோன்றும் பல்வகைப் பண்டங்களும் விற்றனர். இதில் முத்து, மணி, பொன் முதலிய சிறந்த பொருட்களும் இடம்பெற்றன. இப்பொருட்களில் உண்பன. பூசுவன, பூனைவான், உடுப்பன போன்றவற்றிற்குத் தேவைப்பட்ட பொருள்கள் எல்லாம் இவர்களிடம் கிடைத்தன. தேவர்களை வழிபட வேள்வி செய்தனர். பசுக்களையும் எருதுகளையும் போற்றி வாழ்ந்தனர். மறையோர்க்குத் தானமும், உணவு முதலியனவும் கொடுத்தனர். நடுநிலையோடு வாழ்பவர். கொடுப்பதிலும் கொள்வதிலும் குறைவின்றி நேர்மையாக வாணிகத்தைப் போற்றினர். சங்க கால சமூகம் வெளிநாடுகளுடனும் வாணிபத் தொடர்பு கொண்டிருந்ததை சங்க இலக்கியங்கள் கூறியுள்ளன.

**வேளாளர்**

உழவுத்தொழிலால் நெல் முதலிய பொருள்களை விளைவிக்கும் உழவர், நாட்டின் உயிர்நாடியாகக் கருதப்பட்டனர். மென்புலத்தில் தாம் விளைவிக்கும் உணவுப்பொருள்களை வன்புலத்து வாழும் ஏனைய மக்களுக்குக் கொடுத்துதவினர். ‘‘விளைக வயலே, வருக இரவலர்’’ என்னும் கோட்பாட்டோடு, வருவார்க்கு வரையாது வழங்கினர். அரசர்கள் வெற்றிமாலை சூடுவதும் இவர் செய்யும் நற்தொழிலினால் தான் என்பது மிகையல்ல.

**“பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை**
**ஊன்றுகால் மருங்கின் ஈன்றதன் பயனே”**[53]

என இவ்வுண்மையை வெள்ளைக்குடி நாகனார் என்னும் புலவர் கிள்ளிவளவன் என்ற மன்னனுக்கு எடுத்தியம்புகின்றார். இதிலிருந்து வேளாளர்களின் பெருமை நன்கு புலனாகிறது.

**கலைஞர்களின் சமூகம்**

சங்கத் தொகை நூல்களுள் ஒன்றான புறநானூறு துடியன், பாணன், பறையன், கடம்பன் என்னும் நால்வரையும் பழங்குடி மக்களாகக் கூறுகிறது. இவை தொழில் வயப்பட்ட பிரிவுகள் என்று குறிப்பிடுவோரும் உள்ளனர். மக்களின் தகுதிகள் பிறப்பினடிப்படையில் தீர்மானிக்கப்பட்டன. புறநானூறில் பாண்டிய மன்னன் நெடுஞ்செழியனால் பாடப்பட்ட பாடல்

**“வேற்றுடை தெரிந்த நாற் பாலுள்ளும்**
**கீழ்ப்பால் ஒருவன் கற்பின்**
**மேற்பால் ஒருவனும் அவன்கண்படுமே”**[54]

எனக் குறிக்கின்றது. எனவே அங்கு வேற்றுமை தோற்றம் பெற்றது சாதி அடிப்படையினால் ஆனதே என்பது விளங்கும்.

பாணன் என்பான் யாழிசையில் வல்லவனாய் செல்வர்களின் போற்றுதலுக்கு உரியவனாய் உள்ளான். தலைமகனுக்காகத் தலைவியிடம் தூது செல்லும் தொழிலும் இவனுக்குண்டு. துடியன்,

பறையன் என்னும் பெயர்கள் ‘துடி’ ‘பறை’ என்னும் கருவிகளை இயக்குவதால் உண்டான பெயர்கள் ஆகும். இந்நால்வரும் இழிபிறப்பாளர் என்றும் இழிசினர் என்றும் கூறப்படுகின்றனர். இவர்களைப் ‘புலையன்’ என்றும் குறிப்பதுண்டு.

பொருநர் மற்றொரு பிரிவினர். இவர்கள் போர்பற்றிய பாடகர்கள் போர்ப்படையில் இவர்கள் துடிமுழக்கியும் வீரர்களுக்கு ஆயுதங்கள் முதலியவற்றைக் கொடுத்தும் உதவி புரிந்தனர். போருக்கு பூக்கொள்ளுமாறு வீரர்களை அழைத்து பறையை இசைக்கும் தொழிலும் செய்வர். இதனை,

**“மலையன் மா ஊர்ந்து போகி புலையன்**
**பெருந்துடி கலங்கப் பிறநலம் புக்கு”**[55]

எனும் பாடல் வரிகள் இவர்கள் போர்ப்பறை கொட்டும் தொழிலும் செய்வர் என்பதைத் தெரிவிக்கிறது.

ஆடல் பாடல்களில் வல்லவர்களுக்கு, கூத்தும் பாட்டும் தொழிலாகி விடுகிறது. இந்நிலையிலேயே பாணர், கூத்தர், பொருநர், விறலியர் போன்ற ஆடல் பாடல் கலையைத் தொழிலாகக் கொண்டவர்களான ஒரு சமூகப்பிரிவு தோன்றியது. நாளடைவில் இவர்கள் கலையை வளர்த்தனர்.

**கூத்தர்கள்**

தொல்காப்பியம் குறிப்பிடும் நால்வகைக் கலைஞருள் கூத்தரும் ஆவர். சங்க காலத்தில் வெற்றியின் போதும், மகிழ்ச்சியின் போதும், திருவிழாக்காலங்களின் போதும் ஆண்களும், பெண்களும் சேர்ந்து பெருங்கூட்டத்துடன் ஆடிப்பாடினர். கூத்தர் மற்ற கலைஞர்களைப் போலவே மன்னர்களையும் மக்களையும் நாடிச்சென்று கலையை வெளிப்படுத்தினர். ஊரில் பொது இடத்தில் கூத்தை நிகழ்த்தியதால் பொதுமக்களிடம் நெருக்கமான உறவைக் கொண்டிருந்தனர். இவர்கள் கலைகளை வெளிப்படுத்தும் இடத்தை மன்றம் அல்லது மன்று என அழைத்தனர்.

இவர்கள் தொழில் கூத்தாடுதல் ஆகும். கூத்தில் இருவகை உண்டு. ஒன்று ஏதேனும் ஒரு கதையை நடித்துக் காட்டுவது. மற்றொன்று ஒரு பாடலைப் பொருள் விளங்கும்படி அபிநயத்துடன் குதிப்பது. கதையின்றி அபிநயம் பிடித்தாடும் கூத்துக்குத்தான் நடனம், நாட்டியம் என்று கூறுகிறோம். கதை தழுவிய கூத்தை நாடகம் என்றும் கூறுகின்றோம். இத்தகைய கூத்தாடிகளைத்தான் பண்டைய காலத்தில் கூத்தர் என்று குறிப்பிடுகின்றனர். இதனை, கூத்து எண்வகை உணர்ச்சிகளையும் அனைத்து மனக்குறிப்புகளையும் வெளிக் காட்டுகின்றது என்று நச்சினார்க்கினியர் கூற்றின் மூலம் அறியப்படுகிறது.

### விறலியர்

பொருநர், கூத்தர் வகுப்பைச் சார்ந்த பெண்களே விறலியர் என அழைக்கப்பட்டனர் விறலிகள் வள்ளல்களை நாடிச்சென்று பாடல்கள் பாடி அவர்களிடமிருந்து பரிசில் வாங்கும் இயல்பினை உடையவர்கள் என்று கபிலர் விறலியர்களைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளனர். அன்றைய கலைஞர்கள் சமூகம் வறுமையில் வாடியதையும், அவர்களின் வறுமையை போக்க அரசர்கள் அவர்களுக்கு ஆதரவளித்த நிலையினையும் சங்க இலக்கியங்கள் வழி உணர முடிகிறது.

மதுரையிலுள்ள பாணர்சேரி நகரின் புறஞ்சேரியை அடுத்துள்ளது என மதுரைக்காஞ்சி ஏனைய சத்தாயத்தாரைவிட இழிந்தவராயும் ஊரின் ஒதுக்குப் புறங்களில் வாழும் மக்களாகவும் கருதப்பட்டனர். சங்க இலக்கியத்தில் விறலி இசையோடும் ஆடலோடும் தொடர்புடையவர் என்று 42 இடங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

### வேற்றுநாட்டு மக்கள்

பண்டையத் தமிழர் வாணிகத்தின் பொருட்டு வேங்கடத்திற்கு அப்பால் உள்ள பிறமொழி வழங்கும் தேசங்களுக்கும், இமயத்திற்கும் அப்பாலும், கடல் வழியாக ஈழம், கடாரம் முதலிய கடல் கடந்த

நாடுகளுக்குச் சென்றது போலவே, பிற நாட்டாரும் தமிழகத்திற்கு வருவர். யவனர் எனப்படும் மேலை நாட்டினர் வணிக நிமித்தம் வந்ததோடு, தமிழக மன்னர்களின் காவற்படையிலும் கலந்து பணியாற்றினர் என்பது தெரியவருகிறது. இதனை முல்லைப்பாட்டின் வழி அறியலாம்.

மேலைநாட்டு யவனர்கள் அரசர்களின் மெய்காப்பாளராய்ப் பணியிலிருந்ததை விடவும் வியாபார நோக்கோடு வந்தவர்களே மிகுதியாவர். இல்லங்களில் ஏற்றப்படும் அன்ன விளக்கு, பாவை விளக்கு போன்றவை இவர்களால் அழகுறச் செய்யப்பட்டு கொண்டு வரப்பட்டன. அவர்கள் தம் கலங்களில் தங்கமும் மதுவகைகளும் ஏற்றிவந்து தமிழகத் துறைகளில் விற்று மிளகு பெற்றுக் சென்றனர்.

மேலைகடற்கரையில் உள்ள முசிறியை மிளகுத்துறை என்றே கூறப்பட்டது.

**“சுள்ளிஅம் பேரியாற்று வெண்நுரை கலங்க,**
**யவனர் தந்த வினைமான் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியோடு பெயரும்**
**வளம் கெழு முசிறி”**[56]

என்று யவனர் பொன்னைத்தந்து அதற்கீடாக மிளகினைப் பெற்றுச் சென்றமை விவரிக்கப்பட்டுள்ளது.

**ஆரியர்கள்**

வேற்றுநாட்டார் வந்தது ஒருபுறமிருக்க, வடநாட்டிலிருந்து வந்த ஆரியர் கலப்பினால் தமிழரது வாழ்க்கையில் ஆரியப்பண்பாடுகளும் கலந்தது. அவரது மொழியாகிய ஆரியமும் தமிழ்மொழியுடன் தமிழகத்தில் குடியேறியகாலத்தை சங்க நூல்களைக் கொண்டு வரையறுக்க இயலாது போயினம், அக்காலத்தில் ஆரியத் தொடர்பு காலூன்றி வளரத் தொடங்கி விட்டமையை அறியமுடிகிறது.

ஆரியர்கள் தமிழனத்திலிருந்து வேறுபட்டவர்கள் என்பதும் வடக்கே இமயம் சார்ந்து வாழ்ந்த இனத்தவர் என்பதும், இவ்வினத்தினர்க்கும் தமிழ் மன்னர்களுக்கும் போர்கள் நிகழ்ந்தன என்பதற்கும் சான்றுகள் உள்ளன. ஆரியர் கலாச்சாரக் கலப்பு தமிழகத்தில் நேர்ந்தது என்பதும் சங்க இலக்கியத்தில் காணப்படும் சில குறிப்புகளைக் கொண்டு அறியலாம். ஆரியர்கள் இமயத்தை அடுத்து வாழ்ந்தவர் என்பதற்கு

ஆரியத் தலைவர்களுக்கும் தமிழக மன்னர்களுக்கும் அவ்வப்போது போர் நிகழ்ந்திருத்தல் வேண்டும் என்பதற்கும் பின்வரும் பாடலை சான்றாகக் கூறலாம்.

**“ஆரியர் அலறத் தாக்கிப் பேர் இசைத்**
**தொன்று முதிர் வட வரை வணங்கு வில் பொறித்து,**
**வெஞ் சின வேந்தரைப் பிணித்தோன்**
**வஞ்சி அன்ன, என் நலம் தந்து சென்மே”**[57]

என்ற பாடல் விளக்குகிறது.

புறநானூற்றில் 183ம் புறப்பாடலைப் பாடியவன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் ஆவான். பாண்டியர்களுள் ஆரியப்படையை வென்றவர்களில் பெருவெற்றி கொண்டவன் இவனே என்பர். மேலும் பதிற்றுப்பத்தில் கூறப்படும் இமயவரம்பன், நெடுஞ்சேரலாதன் வடகே சென்று வெற்றி போற்றுவனாகவும் கூறப்படுகிறது. இவைகளால் மூவேந்தர்களில் ஒரு சிலர் இமயம் வரை படையெடுத்துச் சென்று ஆரிய மன்னர்களை வெற்றி கொண்டு தங்கள் வீரத்தை நிலைநாட்டினர் என்பது புலனாகும்.

**போர்**

தமிழில் போர் என்னும் சொல் ‘பொரு’ என்னும் வேர்ச்சொல் அடியாகப் பிறந்த சொல்லாகும். பொரு அல்லது பொருதல் என்பதற்கு ஒப்புதல் அல்லது ஒத்திருத்தல் என்பது பொருளாகும். ஒத்த வீரமும் ஆற்றலும் உடைய இரு வீரரோ அல்லது இரு படையினரோ மோதி வெற்றி பெறுவதே வீரம் எனப் போற்றப்பட்டது. வேந்தனின் ஏவலை

பெற்று மத்தி என்னும் குறுநில மன்னன் எழலி என்னும் மன்னனைப் போரில் வென்று அவனது பல்லைப் பறித்துத் தனது வெற்றிக்கு அடையளமாக அதனை வெண்மணி வாயிலில் பதித்த செய்தியை, அகநானூறு அழகுற எடுத்துரைக்கிறது.

தொடக்கத்தில் மக்களைக் கவர்வதற்காக நடைபெற்ற போர்களின் நிலைமாறி பின்னர் மண்ணுக்காவும், பெண்ணுக்காகவும் போர்கள் நிகழ்ந்ததை அறிய முடிகிறது. தன் நாட்டின் எல்லையை விரிவுபடுத்த வேண்டும் என்ற பேராசையின் காரணமாக மன்னர்கள் போர் செய்தனர் என்பதை,

**“எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்தன்**
**அஞ்சுதகத் தலைச் சென்று அடல்குறித்தன்றே”**[58]

என்ற நூற்பா விளக்குகிறது. பெண்ணுக்காகப் போர் நிகழ்ந்ததை புறநானூற்று மகட்பாற் காஞ்சித்துறைப்பாடல்கள் மூலம் தெரியவருகிறது. இதன் மூலம் அக்காலச் சமூகத்தில் போர் பல காரணங்களுக்காக நிகழ்ந்தது என்பதனை அறிய முடிகிறது.

**வீரம்**

சங்ககாலத் தமிழ் மறவர்கள் வீரம்மிக்கவர்களாகத் திகழ்ந்தனர். முன்வைத்த அடியினை பின்வைக்காத பிறப்பண்புடையவர்கள். போரில் தனது உடல் முழுவதும் பகைவர்களது வேல் பாய்ந்திருந்தாலும் கூட அதனால் சோர்வடையாது தொடர்ந்து போரிடக்கூடிய திறன் வாய்ந்தவர்கள் என்று சங்க கால வீரர்களின் மறப்பண்பு விளக்கப் பட்டுள்ளது.

சங்க காலத்தில் மகளிரும் வீரத்துடன் திகழ்ந்தனர் என்பதை புறநானூற்றுப்பாடல் மூலம் தெளிவாக அறியமுடிகிறது.

போரில் புறங்கொடாது இறந்துபட்ட மகனின் சிதைந்த உடலைக் கண்டு வாடியமுலை ஊறிச்சுறந்த தாயின் நிலையிலிருந்தும் சங்ககாலப் பெண்களின் வீரத்தை அறியலாம்.

கொடை சிறப்பு

பொருள் இல்லாத போதும் தம்மால் இயன்ற அளவு பொருள் உள்ளது போல் மகிழ்த்து இயல்பாகக் கொடுக்கும் குணமுள்ள மக்களுக்கு மறுமை உலகக் கதவுகள் எப்போதும் திறந்தே இருக்கும் என்று கொடையால் எய்தும் மறுமைப் பயனையும் மற்றும் அதன் முக்கியத்துவத்தையும்,

**“இல்லா இடத்தும் இயைந்த அளவினால்**
**உள்ள இடம் போல் பெரிது வந்து - மெல்லக்**
**கொடையொடு பட்ட குணனுடைய மாந்தர்க்கு**
**அடையாவாம் ஆண்டைக் கதவு”**[59]

என்ற பாடல் பறைசாற்றுகிறது.

சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன், பெருவிறற் கிள்ளியோடு போரிட்டு வீழ்ந்து கிடக்கிறான். அப்போது போர்க்களத்தைக் காண வந்த கழாத்தலையாருக்கு, தன் உயிர் போகும் நிலையிலும் கூட தன் கழுத்தில் கிடந்த முத்தாரத்தை எடுத்துக் கொள்ளுமாறு குறிப்பால் உணர்த்தினான் என்பதை,

**“தொடரித் தெண்கண் தெளிர்ப்ப வொற்றிப்**
**பாடி வந்த தெல்லாம் கோடியர்**
**முடிவு மருள் திருமணி மிடைந்தநின்**
**அரவுறழ் ஆரம் முகக்குவ மெனவே**”[60]

என்ற பாடல் வரிகள் மூலம் அறியமுடிகிறது.

மன்னர்-புலவர் நட்பு

பண்டைய தமிழகத்தை ஆண்ட வேந்தர்களுடன் புலவர்கள் நட்பு பாராட்டினர். அவர்களுக்கிடையே விளங்கிய உறவு புரவலர், இரவலர் என்ற நிலையில் அமையாது உணர்வுபூர்வமான உயரிய நட்புறவாக அமைந்திருந்தது. சங்க காலப் பாடலான புறநானூற்றில் வேந்தர் - புலவர் இடையிலான நட்புணர்வு சிறப்பாக கூறப்பட்டுள்ளது.

புறநானூற்றில் கோப்பெருஞ்சோழன் - பிசிராந்தையார், பாரி-கபிலர், அதியமான் - ஔவையார், தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை - மோசிகீரனார் போன்ற பல மன்னர்களுக்கும், புலவர்களுக்குமான உறவுமுறைகள் சிறப்பாகக் போற்றப்படுகிறது. புலவர்கள் மன்னர்கள் வழங்கும் பொன், பொருள் போன்ற பரிசில்களுக்காக மட்டுமே அவர்களிடம் நட்பு கொள்ளாமல், மன்னர்கள் மீது அவர்கள் மனதில் கொண்டுள்ள உண்மையான அன்பினாலேயே நட்பு கொண்டனர் என்பதை தெளிவாக அறியமுடிகிறது.

## ஆய்வு தொகுப்புரை

சங்க கால சமூக அமைப்பு என்னும் இவ்வியலில் முச்சங்கங்கள் பற்றிய செய்திகளும், அவை குறித்த சான்றுகளும் கூறப்பட்டுள்ளது.

சங்க இலக்கியங்கள் உருவான காலமும், பத்துப்பாட்டு எட்டுத்தொகை என தொகுக்கப்பட்ட பதினெட்டு நூல்களைக் கொண்ட சங்க இலக்கியங்கள், பல்வேறு காலகட்டங்களில் வாழ்ந்த புலவர்களால் பாடப்பெற்ற பாடல்களின் தொகுப்பாக அமையப் பெற்றுள்ளதை விளக்கப்பட்டுள்ளது.

அக இலக்கியங்கள் சுட்டும் தோழி, பாங்கன், செவிலி, பரத்தை ஆகியோரின் பண்புகள் விளக்கப்பட்டுள்ளன.

காதலிக்காக காதலர் கொண்ட பெருமுயற்சியாக ஏறுதழுவுதலைக் கொண்டார் என்பதையும், அக்கால மகளிர் வீரமிக்க ஆடவரையே விரும்பியதையும், அன்புடைய நெஞ்சங்களின் இணைவாக களவு வழி கற்பு வாழ்க்கை வாழ்ந்தோர்கள் என்பதையும் அறியமுடிகிறது.

சங்ககால புறச்சமூக அமைப்பில் தொழில்சார் சமூகமான அந்தணர், அரசர். வணிகர், வேளாளர் குறித்த செய்திகளும் கலைஞர்களான பாணர், பொருநர், கூத்தர், விறலியர் ஆகியோரின் வாழ்க்கை நிலை குறித்த செய்திகள் மன்னர்களும் புலவர்களும் கொண்டிருந்த நட்பு முறையினையும் இவ்வியல் வழி விளக்கப்பட்டுள்ளது.

**சாண்றென் விளக்கம்**

| | |
|---|---|
| 1) புறநானூறு, | பா.72 : 13-14 |
| 2) குறள், | 394 |
| 3) ஜெ.ஸ்ரீசந்திரன், தமிழ் இலக்கிய வரலாறு, | ப.18 |
| 4) தொல்காப்பியம், சிறப்பு பாயிரம் | ப.4 |
| 5) மணிமேகலை, துயிலெழுப்பிய காதலி, | பா.144 |
| 6) தொல்காப்பியம், எழுத்ததிகாரம், | நூ.62 |
| 7) ஹிரி.விஜயலெட்சுமி, தமிழ் இலக்கிய வரலாறு, | ப.29 |
| 8) சிறுபாணாற்றுப்படை, | வரி.66-67 |
| 9) கலித்தொகை, | ப.68 |
| 10) ஜெ.ஸ்ரீசந்திரன், கல்வெட்டுப் படைப்பு | மு.நூ.ப.22 |
| 11) மேலது, | ப.22 |
| 12) தொல்காப்பியம், பேராசிரியர் உரை, முன்னுரை | ப.3 |
| 13) அ.ச.ஞானசம்பந்தன், இலக்கியக்கலை, | ப.13 |
| 14) மேலது, | ப.133 |
| 15) பெ.சுயம்பு, தமிழ் இலக்கிய அறிமுகம், | ப.19 |
| 16) இரா.மோகன், இலக்கியச்சால்பு, | ப.1 |
| 17) உரைநடைக்கோவை, இரண்டாம் பாகம், | ப.95 |
| 18) ச.அகத்தியலிங்கம், சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே, | ப.92 |
| 19) வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், | ப.469 |
| 20) மேலது, | ப.3 |
| 21) அரங்க.மு.முருகையன், சங்க இலக்கிய ஆய்வுகள், | ப.3 |
| 22) சு.ஆனந்தன், தமிழ் இலக்கிய வரலாறு, | ப.24 |
| 23) மு.சண்முகம்பிள்ளை, சங்கத்தமிழ் வாழ்வியல் | ப.14 |
| 24) சு.ஆனந்தன் தமிழ் இலக்கிய வரலாறு, | ப.36 |
| 25) மு.சண்முகம்பிள்ளை, சங்கத்தமிழ் வாழ்வியல் | ப.16 |
| 26) ஆர்.எஸ்.சர்மா, தொடக்க கால இந்தியாவில் சமூக பொருளாதார வரலாற்றுக் காட்சிகள், | ப.28 |

27) கே.கே.பிள்ளை, தமிழர்களின் சமூக வரலாறு, பகுதி.1, ப.78
28) நற்றிணை, பா.108
29) ஐங்குறுநூறு, பா.439
30) புறநானூறு, பா.54:10-11
31) பெரும்பாணாற்றுப்படை, வரி242-254
32) குறுந்தொகை. பா.399
33) புறநானூறு, பா.289:1-3
34) பொருநராற்றுப்படை, வரி246-248
35) அகம், பா.30:8-9
36) குறுந்தொகை, பா.304:1-4
37) புறநானூறு, பா.21:2-7
38) மதுரைக்காஞ்சி, வரி.356
39) பரிபாடல் திரட்டு பா.7
40) பெரும்பாணாற்றுப்படை, வரி.402-411
41) பட்டினப்பாலை, வரி.168-170
42) குறுந்தொகை, பா.135:1
43) தொல்.பொருள். நூ.41
44) குறுந்தொகை பா.167
45) நற்றினை பா.283
46) தொல்.பொருள். நூ.-5
47) அகம்பொருள் விளக்கம், நூ.106
48) நாலடியார், பா.371
49) கலி.நெற்தற்கலி பா.103:22-23
50) மேலது. பா.103:63-64
51) குறுந்தொகை, பா.40
52) புறநானூறு, பா.186
53) புறநானூறு, பா.35: 25-26
54) மேலது, பா.183
55) நற்றிணை, பா.77:1-2
56) அகநானூறு, பா.149:7-11

| | |
|---|---|
| 57) அகநானூறு, | பா.396:16-19 |
| 58) தொல்காப்பியம் புறம் | நூ.1011 |
| 59) நாலடியார், | பா.91 |
| 60) புறநானூறு, | பா.368:15-18 |

# இயல் -2

# சங்க கால பெண் சமூக அமைப்பும் உறவுகளும்

### சங்ககால மகளிர் அறிமுகம்

சங்க இலக்கியத்தில் மகளிர் பற்றிய குறிப்புகள் மிகுதியாக உள்ளன. தாயார் மட்டும் அறுவர் காணப்படுகின்றனர். பொது நிலையில் அன்னை என்ற சொல்லும், தாய் என்ற சொல்லும் அமைகின்றன. யாய் என்பது என் தாய் என்ற பொருளும் ஞாய் என்பது அவன் தாய் என்ற பொருளும் அமைகிறது. இவைபோக, நற்றாய், செவிலித்தாய் போன்றோரும் உள்ளனர். வீரத்தாயார் பலர் வாழ்ந்துள்ளனர். பெண்டிர், பெண் என்ற பொருளில் மங்கை, மடவரல், அரிவை, நங்கை, தையல் போன்ற சொற்கள் மிகுதியாக உள்ளன.

பரத்தையரில் இயல்பாக இல்பரத்தை, காமக்கிழத்தி போன்றவர்கள் உள்ளனர். சங்க காலத்தில் ஒருவனுக்கு ஒருத்தி என்ற நிலை இருப்பதாகத் தெரியவில்லை. இருப்பினும் மகளிர் மிகுந்த பண்போடு வாழ்ந்தனர். ஒருவனைக் காதலித்து, மற்றொருவனைத் திருமணம் செய்து கொள்ள விரும்பவில்லை. அதனால் தான் காதலித்தவனோடு தலைமகள் உடன் போக்கு செல்வாள். இதனால் தலைவியை வளர்த்த செவிலித்தாயும், பெற்ற நற்றாயும் மிகவும் துன்புறுவதை பல பாடல்கள் வழி அறியலாம். தலைவியைத் தேடி பாலைநில வழியில் செல்வர். உடன் போக்கிலிருந்து தலைமக்கள் திரும்பிய பின்பு திருமணம் செய்து வைக்கின்றனர். தலைவி தோழிக்கும், தோழி செவிலிக்கும் உண்மையை உணர்த்துவது அறத்தொடு நிற்றல் ஆகும். அறத்தொடு நிற்றல் உயர்ந்த பண்பாட்டைக்காட்டுகிறது.

### மகடூஉ

தொல்காப்பியர் காலத்திற்கு முன்பு பெண்ணைக் குறிப்பதற்கு மகடூஉ என்ற சொல்லைப் பயன்படுத்தினர் என்பதை அறிய முடிகின்றது.

தொல்காப்பியத்தில் ஆண்மகனைக் குறிப்பதற்கு ஆடூஉ என்றும், பெண்ணைக் குறிப்பதற்கு மகடூஉ என்றும் வழங்கி வந்தனர். தொல்காப்பியத்தில் ஆடூஉ என்ற சொல் 7 இடங்களில் வருகிறது. மகடூஉ என்ற சொல் 10 இடங்களில் வருகிறது. இதன் தொடர்ச்சியாக சங்க இலக்கியத்தில் மகடூஉ என்ற சொல் 7 இடங்களில் வருகிறது.

“தகரம் நாறும் தண்நறுங் கதுப்பின்
புதுமணை மகடூஉ அயினிய கடிநகர்ப்
பல்கோட்டு அடுப்பில் பால்உலை இரீஇ”[1]

“ஆடூஉச் சென்னித் தகைப்ப மகடூஉ
முளரித் தீயின் முழங்க அழல் விளக்கத்துக்”[2]

“தொடிக் கை மகடூஉ மக முறை தடுப்ப
இருங் காழ் உலக்கை இரும்பு முகம் தேய்ந்த
அவைப்புமாண் அரிசி அமலை வெண் சோறு
கவைத் தாள் அலவன் கலவையொரு பெறுகுவிர்”[3]

“இற்பொலி மகடூஉப் போலச் சிற்சில”[4]

“கழிகலம் மகடூஉப் போல”[5]

கழிகல மகளிர் போல (விதவைகள்)”[6]

தொடிகழி மகளிர்”[7]

“மகவுடை மகடூஉப் பகடு புறம் துரப்பக்”[8]

“பெரு நல் வானத்து வடவயின் விளங்கும்
சிறுமீன் புரையும் கற்பின் நறு நுதல்
வளைக் கை மகடூஉ வயின் அறிந்து அட்ட”[9]

என்ற மேற்கூறிய சங்க இலக்கியப் பாடல்கள் மகடூஉ எனும் சொல்லை மகளிர் என்பதற்காக பொதுமையில் பயன்படுத்தியதை அறிய முடிகிறது.

மகளிர்

சங்க இலக்கியத் தொகை நூல்களுள் ஒன்றான பரிபாடலில் வையை ஆற்றின் சிறப்பைக் கூறுமிடத்து அலைகள் மிகுந்த நீரின்

தன்மை கரையின் மதில்களில் மோதுகின்ற போது அதன் ஓசையைக் கேட்டு மதுரை நகரில் வாழ்ந்த அழகு மகளிர் தங்களை பல்வேறு விதங்களில் ஒப்பனை செய்து கொண்டு மாலை நேரத்தை இன்முகத்துடன் வரவேற்ற விதம் சிறப்பிற்குரியது. அவ்வகையில் மகளிர் பலரும் பொன் தகட்டாலான பூவை அணிந்துகொண்டனர். சந்தனச் சாந்தை மாற்றி அகில் சாந்தைப் பூசிக்கொண்டனர். சிலர் தம் கூந்தலைக் குழலாக முடித்தனர். சிலர் அக்கூந்தலின்கண்ணே வெட்டிவேரொடு தொகுத்த மலர்மாலையை அணிந்தனர். சிலர் நீராடுவதற்குரிய சேலைகளை உடுத்தினர். சிலர் முத்துவடங்களைப் பூண்டனர். சிலர் வாசனைத் தைலங்களைப் பூசிக் கண்ணாடியை விளக்கித் தமது அழகைப் பார்த்தனர். சிலர் பஞ்சவாசம் கலந்த தாம்பூலத்தை மென்றனர். சிலர் கையிலும் தோளிலும் வளைகளையும் தொடிகளையும் அணிந்தனர்.

சிலர் தேன் ஒழுகும் மாலையைப் பூண்டனர். சிலர் நீண்ட தூரம் வரை கமழும் வாசனைப் பொருட்களை உடம்பில் பூசினர். இவ்வாறு மகளிர் தம்மைப் புனைந்து கொண்டு மென்நடையை உடைய குதிரைமேல் ஏறினர். சிலர் பெண் யானைகளின் மேல் அன்னைப் பறவைகளைப் போன்று ஏறிவந்தனர். இம்மகளிரின் நிகழ்வுகளை,

**வந்து மதுரை மதில் பெரூம்உம் வான் மலர் தாஅய்**
**அம் தண் புணல் வையை யாறுஎனக் கேட்டு**
**மின் அவிர் ஒளி இழை வேயு மோரும்**
**பொன் அடர்ப் பூம் புனை திருத்துவோரும்**
**அகில்கெழு சாந்தம் மாற்றி ஆற்றப்**
**புகைகெழு சாந்தம் பூசுவோரும்**
**கார் கொள் கூந்தல் கதுப்பு அமைப்போரும்**
**வேர்பிணி பல் மலர் வேயுமோரும்**
**புட்டகம் பொருந்துவ புனைகு வோரும்**
**கட்டிய கயில் அணி காழ் கொள்வோரும்**
**வாச நறு நெய் ஆடி, வான் துகள்**

மாசு அறக் கண்ணாடி வயக்கி, வண்ணமும்
தேசும் ஒளியும் திகழ நோக்கி
வாச மணத் துவர் வாய்க்கொள்ளுவோரும்
இடு புணர் வளையொடு தொடு தோள்வளையர்
கட்டுவடக் கழலினர் மட்டு மாலையர்
ஓசனை கமழும் வாச மேனியர்”[10]

என்ற பரிபாடல் வரிகள் படம்பிடித்து காட்டுகின்றன.

தாய்

சங்க காலத்தில் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கொள்கை இல்லை. பரத்தையர் பலர் இருந்தனர். காதற்பரத்தை என்றும், இல் பரத்தை என்றும், காமக்கிழத்தி என்றும் பல நிலைகளில் பெண்டிர் அமைந்தனர்.

நீர் நாய்கள் வாழும் ஆழமான குளத்தில் மலர்ந்த தாமரை அல்லி போன்ற இதழ்களின் சிவந்த நிறம் போன்ற உள்ளங்கைகளையும் சிவந்த வாயையும் உடைய மழலைபேசிப் பிறரைச் சிரிக்கச் செய்யும் அழகிய சொற்களையும், யார் பார்த்தாலும் விரும்பும் அழகுடைய பொன் மாலை அணிந்த புதல்வனைத் தேர் ஓடுகின்ற வீதியில் யாரும் பார்க்காததை அறிந்து அவன் அருகே சென்று அவனைத் தூக்கித் தன் தலைவன் போன்று இருக்கின்றதை எண்ணி பரத்தை அம்மகனைத் தூக்கிக் கொஞ்சினாள். இச்செயலை தலைவி பார்த்தாள். தலைவி பார்த்ததைக் கண்டு பரத்தை சிறிது மருண்டாள். அதற்குத் தலைவி, நீயேன் மயங்குகிறாய், நீயும் இக்குழந்தைக்குத் தாய்தான் என்று கூறுகிறாள்.

அப்போது அப்பெண் களவாட வந்த ஒருவன் களவாடிய பொருளோடு அகப்பட்டு நிற்பதைப் போன்று முகம் கவிழ்ந்து நாணத்துடன் நின்றாள். அவளைத் தலைவனின் பரத்தை என்று உணர்ந்து கொண்டாள். அவள் வருத்தும் தெய்வம் போன்று அழகாக இருந்தாள். அதனால் அவளும் தன் மகனுக்குத் தாயாதல் பொருத்தம் தான் எனத் தலைவி கூறுவதை,

**"யாவரும் விழையும், பொலந்தொழிப் புதல்வனைத்**
**தேர்வழங்கு தெருவில், தமியோற் கண்டே**
**கூர் எயிற்று அரி**
**… … … … … …**
**மாசு இல் குறுமகள் எவன்பே துற்றனை?**
**நீயும் தாயை இவற்கு? என யான்தன்"**[11]

என்ற அகநானூற்று பாடல் மூலம் தாயின் வரையறையையும் பரத்தையின் வரையறையையும் அறிய முடிகிறது.

**அன்னை**

அன்னை, தலைவி, தோழி இவர்கள் மூவரும் பொது நிலையில் இரவில் ஒரே அறையில்படுக்கின்றனர். இரவுக்குறியில் தலைவன் வருவதற்காக அவர்களுடன் படுத்திருக்கும் அன்னை தூங்கிவிட்டாளா? என்று பார்ப்பதற்குத் தோழி பேசுவாள். அன்னை தூங்கிய பின்புதான் இரவுக்குறி நடைபெறுவதற்குரிய வாய்ப்பு அமையும். அதனால், அன்னையிடம் தோழி பேச்சுக் கொடுப்பாள்.

தலைவன் பல துன்பங்களையும் கடந்து வந்துள்ளான். தாயும் ஆழ்ந்து தூங்குகிறாள். தலைவனைச் சந்திக்க நல்ல தருணம் இது. தாய் விழித்து இருக்கின்றாளா? தூங்குகின்றாளா? என்று தோழி நோட்டம் பார்க்கிறாள்.

தாயே, நம் தோட்டத்தில் உள்ள கூதளஞ் செடியின் மேல்விழுகின்ற அருவி நீரின் சத்தத்தைக் கேட்டாயோ? அரக்குப் போலச் சிவந்த அசோக மரக்கிளையில் கட்டியுள்ள ஊசல் கயிற்றைப் பாம்பெனக் கருதி, அம்மரம் பிளக்குமாறு விழுந்த இடியின் ஓசையைக் கேட்டாயோ? என்றேன் அதற்கு விடை இல்லை. அதனால் தாய் என் கூற்றினை அறியாது உறங்குகின்றாள் என்பதாலும், உலகமே ஆழ்ந்து உறங்குகிறது என்பதாலும் தலைவனைச் சந்திக்கும் நேரம் இது என்கிறாள் தோழி.

மேகம் இடைவிடாது பெய்தமையால் ஏற்பட்ட வெள்ள நீர் வேகத்தில் யானைக் கன்றின் கால்கள் இழுக்கவும், நீர்ச் சுழியில் பெண் யானை அகப்பட்டு ஆரவாரித்து ஆண் யானையை அழைக்கும் அச்சமான ஒலியும், பாம்பும் செடிகளும் உடைய நடுக்கம் தரும் காட்டு வழியில் தலைவன் வந்துள்ளான்.

**"அன்னாய் வாழி வேண்டு அன்னை நம்படப்பைத்**
**தண் அயத்து அமன்ற கூதளம் குழைய**
**இன்இசை அருவி பாடும் என்னதூஉம்"**[12]

இந்தப்பாடல் மூலம் அன்னை என்பவள் தலைவியின் இரவுக்குறிக்குத் தடையாக இருந்தாள் என்பது மட்டுமின்றி தன் மகளோடு இரவிலும் பகலிலும் பாதுகாப்பாக இருந்தாள் என்பதை அறியமுடிகிறது..

செவிலித்தாய்

சங்க இலக்கியங்களில் நற்றாயின் கூற்றுகளைவிட, செவிலித் தாயின் கூற்றுகள் மிகுதியாக உள்ளன. அடிப்படைக் காரணம் தலைவியை வளர்த்தவள் செவிலித்தாய் தான். கூடவே இருந்து, தலைவியின் செயல்கள் அனைத்தையும் கூர்ந்து பார்த்து உணர்ந்தவள் செவிலித்தாய். அதனால் தான் செவிலித்தாய் பற்றிய கூற்றுகள் அதிகமாக உள்ளன.

சிறுவயதில் தலைவி கழங்கு, பந்து இவற்றை வைத்து விளையாடிக் கொண்டிருந்தாள். வயதாக வயதாக அருள், அன்பு, மென்மை ஆகியவை மேம்படும் நிலையில் வளர்ந்து கொண்டிருந்தாள். அவளுடைய வளர்ச்சி நிலையில் காதலும் அமைந்தது. காதலனோடு உடன்போக்கு சென்று விட்டாள். அச்செயலை மிகுதியான வருத்தத்தோடு நினைப்பவள் செவிலித்தாய்.

கிளி, கழங்கு, பந்து முதலிய விளையாட்டுப் பொருட்களை விரும்பியவள் இப்போது அருள், அன்பு, மென்மை, சாயல்

முதலியவற்றால் வேறுபட்டவளாகக் காணப்படுகின்றாள். அவளின் செயலை அறிந்து கொள்ளாதவளாக இருந்துவிட்டேன் என்று செவிலி வருந்துகின்றாள்.

இதனை,

**“கிளியும் பந்தும் கழங்கும் வெய்யோள்**
**அளியும் அன்பும் சாயலும் இயல்பும்**
**முன்நாள் போலாள் இறீஇயர் என் உயிர் என**
**…. …. ….. … …. …. ….”**[13]

என அகநானூற்றுப் பாடல் விரிவாக விளக்குகிறது.

தலைவன், தலைவியின் அன்பொழுக்கத்தில் நற்றாய்க்கு அடுத்த நிலையில் நின்று உதவுபவள் செவிலித்தாயாவாள். இவளது அருமையைத் தொல்காப்பியர்,

**“ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்**
**தாயெனப் படுவாள் செவிலியாகும்”**[14]

என்று குறிப்பிட்டுள்ளதால் அறிய முடிகின்றது.

நற்றாய்க்குத் தோழியாகவும் தலைவிக்குச் செவிலியாகவும், தோழிக்குத் தாயாகவும் சங்கப்பாடலில் செவிலி திகழ்கிறாள். நற்றாயைப் போலவே செவிலியும் தலைவி மாட்டு மாறா அன்பு கொண்டவளாவாள். தோழி, செவிலி இருவருமே தலைவியின் களவு, கற்பொழுக்கங்களில் பங்கு கொள்கின்றனர்.

ஒரு குடும்பத்தில் பிறந்த இரு தலைமுறையினராகிய செவிலியும் தோழியும் தலைமக்களின் வாழ்வில் பெரும்பங்கு கொண்டு அவர்களுக்காகத் தொண்டாற்றும் சிறப்பைப் பெறுகின்றனர்.

**செவிலியின் மாறா அன்பு**

களவில் ஈடுபட்ட தலைவியொருத்தியைச் செவிலி அணைத்தாள். அதனைத் தலைவி விரும்பாது வியர்த்தனென் என்றனள். அதைக்கண்ட

செவிலிக்கு ஒன்றும் புரியவில்லை அவளது மாற்றத்திற்கான காரணம் தெரியவில்லை. ஆனால் தலைவியின் உடன்போக்கிற்குப் பின்னரே இதன் உண்மை செவிலி உணர்ந்தாள். மற்றொரு தலைவியோ உடன்போக்கை மனத்திற்கொண்டு அன்னையை அடிக்கடித் தழுவினாள். அன்பு மகளின் அணைப்பில் மகிழ்ந்த அன்னை பின்னரே அதன் பொருளுணர்ந்து புலம்புகிறாள். இதனை,

**“குறுகவந்து குவவுநுதல் நீவி,**
**மெல்லெனத் தழீஇயினேனாக, என் மகள்**
**நன்னார் ஆகத்து இடைமுலை வியர்ப்ப**
**பல்கால் முயங்கினள் மன்னே”**[15]

என்று அகநானூறும்,

**“பெயர்த்தனென் முயங்க, யான் வியர்த்தனென் என்றனள்**
**இனி அறிந்தேன்”**[16]

என்று குறுந்தொகையும் இக்காட்சிகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றன.

தலைவி

தலைமக்கள் தாமே எதிர்ப்பட்டுத் தங்கள் வாழ்வை அமைக்க விரும்பும் முயற்சிக்கு எதிராகச் சமூகம் நிற்கக்கூடாது. ஒத்த தலை மக்கள் உவந்து வாழ உரிமைகள் ஏற்கப்படவேண்டும். இவ்வழியில் காதலானது குடும்ப, சமூக, நாட்டு அன்பினை வளர்த்தெடுக்கும். அது தொலைநோக்குடன் மனிதகுல அமைதியை வழங்கும் என்பதை ஐந்திணைப் படைப்பாளர்கள் நம்பினர். இத்தகு உயரிய நோக்கம் அகத்திணைக்கு உண்டென்பதை,

**“அகத்திணை என்பது அன்பு வரலாறு,…. அன்பை வளர்த்து உலகோடு ஒட்ட ஒழுகி ஒன்றாய் விடுவதே நீக்கமற நிறைகின்ற பெருவாழ்வாகும். “யாதும் ஊரே, யாவரும் கேளிர்” என வாழ்வதே இந்த முறையில் தான்”**[17]

என்று தெ.பொ.மீனாட்சி சுந்தரம் குறிப்பிடுவதால் அறியலாம். ஐந்திணைக்கு அடிப்படையில் நின்று தலைமைப் பாத்திரமாய்த் திகழ்பவள் தலைவி. தலைவியின் காதல் தூயதாக விளங்க சங்கப்பாடல்கள் வழிமுறைகளைக் காட்டுகின்றன.

**களவு வாழ்வில் தலைவி**

தலைவியின் பெண்மைக்குரிய இயல்பான நாணத்தை தொல்காப்பியர் கூறுகிறார். இதனை,

**"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டொரு**
**உருவு நிறுத்த காமவாயில்**
**நிறையே அருளே உணர்வொடு திருவென**
**முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே"**[18]

என ஒத்த தலைவன் தலைவியின் இயல்புகளைக் கூறுகிறார். தொல்காப்பியர் இயற்கைப் புணர்ச்சியில் தலைவன் தலைவி இருவரும் தம்முள் அன்பு கொள்கின்றனர். தலைவன் தன் காதலைத் துணிவுடன் வெளிப்படுத்த, தலைவி அவன் காதலை அறிந்தும் அறியாதவளைப் போன்று பெண்மைக்குரிய நாணத்தால் தன் காதலை மறைக்கிறாள். இக்காட்சியைத் தோழி,

**"உருவ வல்விற் பற்றியம்பு தெரிந்து**
**செருச் செய் யானை செல் னெறிவினா அய்ப்**
**புலர் குரல் ஏனற் புழையுடை யொருசிறை**
**மலர் தார் மார்பன் நின்றோற் கண்டோர்**
**பலர்தில், வாழி! தோழி! யவருள்**
**ஆர்இருட் கங்குல் ஆணையொரு பொருந்தி,**
**ஓர் யான் ஆகுவது எவன்கொல்,**
**நீர் வார் கண்ணொடு, நெகிழ் தோ ளேனே?"**[19]

எனக் கூறுவது கவனிக்கத்தக்கது.

இதேபோன்று தன் சுற்றத்தாரோடு சிற்றில், கட்டி விளையாடிய ஆயமகள் ஒருத்தியிடமும் சென்றுரையாடிய தலைவனிடத்தே தன்மனம் சென்றதைத் தோழிக்குரைத்தாள் தலைவி,

**"………………………. தையலாய்**
**சொல்லிய வாறெல்லாம் மாறு மாறு யான் பெயர்ப்ப**
**அல்லாந்தான் போலப் பெயர்ந்தான் அவனை நீ**
**ஆயர்மகளிர் இயல்புரைத் தெந்தையும்**
**யாயும் அறிய உரைத்தீயின் யானுற்ற**
**நோயுங் களைகுவைமன்"**[20]

எனும் பாடல் மூலம் இயற்கைப் புணர்ச்சியால் தலைவனை கண்ட மனமானது தன்னுள் தோன்றிய காதலை எப்போதும் தன்னுடன் பழகும் ஆருயிர்த்தோழி அறியா வண்ணம் மறைக்கின்றாள். இது பெண்மைக்குரிய நாணினால் நிகழ்ந்த செய்கையாகும். இதனை எவ்வாறோ அறிந்த தோழி தான் ஒருவனிடத்துக் காதலுற்றதைப் போல் பொய்யுரையாடித் தலைவியின் காதலை வெளிக் கொணர்கிறாள். தன் தோழியிடமே தன் உள்ளக்காதலை வெளியிட நாணும் தலைவி, தன் இதயம் கவர்ந்த தலைவனிடம் தன்னுள்ளக் கிடக்கையைக் குறிப்பினால் அன்றி சொல்லினால் வெளிப்படுத்தல் இயலாததாகும். அவ்வாறு உணர்த்துவதுதான் மரபென்பதை,

**"காமத்தி ணையிற் கண்நின்று வரூஉம்**
**நாணும் மடனும் பெண்மைய ஆகலின்**
**குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை**
**நெறிப்படவாரா அவள் வயின் ஆன"**[21]

என்ற தொல்காப்பிய நூற்பாவின் படி சங்க இலக்கிய தலைவியின் பண்புகள் தமிழ்ப் பெண்களின் பண்பாட்டுச் சிறப்பை உணர்த்துவதாக அமைகிறது.

நட்பு நேயம்

தலைவனோடு ஒத்த அன்புடைய தலைவி இயற்கைப் புணர்ச்சிக்குப் பிறகு தலைவனோடு கொண்ட காதலை தன்னுடனேயே

பழகிக் கொண்டிருக்கும் தோழியிடத்தில் தான் கொண்ட உயர்ந்த காதலையும் மாறா அன்பினையும் வெளிப்படுத்தும் போது குறுந்தொகைப் பாடல் ஒன்றில்,

**"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆர்அள வின்றே – சாரல்**
**கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"**[22]

என்று சிறந்த உவமை நயத்தோடு கூறியிருப்பது தலைவியின் உயர்ந்த பண்பிற்கு இலக்கணமாகும். இப்பாடல் மூலம் தான் கொண்ட புனிதமான காதலை சிறந்த நட்பென்று உலகத்தின் சிறந்த பொருட்களை எல்லாம் காட்டி, தலைவன் மீது தனக்கேற்பட்ட நட்பின் சிறப்பைக் காட்ட இதனைவிட வேறு எந்த வழியும் தலைவிக்குத் தேவையில்லை. உலகத்துப் பொருட்கள் அனைத்திலும் சிறந்து நின்று இவ்வுலகை இயக்க வல்லது காதல் என்றும், காதலால் உள்ளம் பெருமையுறுகிறது; உயர்வடைகின்றது; விரிவெய்துகின்றது. உள்ளத்தின் இப்பயன் பிறவியின் பயனாகும். காதலுக்குக், கருவியே ஆண் பெண் நட்பாகும், இந்நட்பு நிலம் நீர் வான் முதலிய பருப்பொருள்களின் ஆற்றலினுஞ் சிறந்து அவற்றை இயக்கவும் வல்லது என்பதை அறியலாம்.

### தோழி

தலைமக்களிடம் அன்பொழுக்கத்தை வளர்ப்பவள் தோழி தோழி இல்லையென்றால், ஒத்தக்காதல் வளர்ச்சியடைய வாய்ப்பில்லை. இவ்வரிய பாத்திரமாகத் தலைமக்களிடத்து அன்புப் பாலமாக விளங்குபவள் தோழி. இவள் செவிவித்தாயின் மகள் என்பதை,

**"தோழிதானே செவிலி மகளே"**[23]

என்ற நூற்பா மூலம் அறியலாம். தலைவிக்குத் தோழியர் பலர் இருப்பினும் தலைவியின் நன்மையைக் கருத்திற்கொண்டு அவளைவிட்டு நீங்காது உறைபவளே தோழியாவாள். இதனை,

**"பயின்றா ரெல்லாருந் தோழியாராகார்**
**அருமறை கிளக்கப் படுதலான் உடன்**

முலையுண்டு வளர்ந்த செவிலி மகளே

தோழி எனப்படுவாள் என்றவாறு"[24]

என்று இளம்பூரணர் உரையில் குறிப்பிடுகிறார்.

தோழி கூற்றாக வரும் இடங்களில்தான் அவர்கள்தம் கருத்தை மறைமுகமாக அறிவுறுத்துவது எளிதாயிற்று. புலவர்கள் தங்கள் கருத்துக்களைத் தோழி வாயிலாகவே புலப்படுத்துகின்றனர். அம்முறையில் கபிலர் காட்டும் தோழி கபிலரின் மறுபதிப்பாகக் காணப்படுகிறாள் எனலாம். இவற்றால் தோழி எனும் பாத்திரப்படைப்பின் முக்கியத்துவம் புலனாகும்.

**நேயமிக்க தோழி**

பெண்மைக்குரிய இயல்பான நாணத்தால் இயற்கைப் புணர்ச்சி ஏற்பட்ட பின்னும் தன் காதலைத் தோழியிடமே மறைக்கும் தலைவியின் உள்ளக்கிடக்கையைத் தோழி தானே முயன்று அறிகிறாள். ஆயினும் தான் அறிந்து கொண்டமையை வெளிப்படையாய்க் கேட்டால் தலைவி அஞ்சுவாளோ எனக் கருதித் தலைவி கொண்ட காதலை அறியாதவள் போன்று தான் ஒரு தலைவனிடத்தே காதல் கொண்டு மயங்கியதாகக் கூறுவதன் மூலம் தலைவியை ஒப்புச் செய்கிறாள்.

"சுயமலர் உண்கணாய்! காணாய்"[25]

என்ற கலித்தொகைப்பாடலில் தன் மீது காதல் கொண்ட தலைவன் அதைக் கூறாது மறைக்க, தன் காதலை வெளிப்படுத்த எண்ணி, ஒரு நாள் அத்தலைவனை அழைத்து "ஊசல் ஆட" விரும்புவாள் போன்று 'ஐயனே! சிறிது என்னை ஊக்கி, என அழைத்தாள். அதற்கிசைந்து அவன் ஊசல் ஆட்டும்போது மயங்கியவள் போல் அவன் மார்பில் சாய்ந்து சற்றுநேரம் அப்படியே கிடந்தாளாம். பின்னர் தன் செய்கைக்காக நாணியபொழுது தலைவன் பண்பாடு மிக்கவன் என்பதனால் அவளைத் தொடாது தன்னை எழுந்து செல் என விடுத்தனன் எனத் தலைவியிடம் கூறுகிறாள்.

தோழியின் இக்கூற்றைக் கேட்ட தலைவி தன் செயலுக்காய் நாணி தோழியிடத்தே தன் காதலை ஒழியாது உரைத்திருப்பாள் என்பது புலனாகும். இது தோழியின் அறிவுத் திறனுக்கு நற்சான்றாகும்.

தலைவியின் காதலை அறிந்தாயிற்று, தலைவனின் நிலை என்ன? அவன் பண்புகள் எவ்வகையன! அவன் தன் தலைவிக்குத் தகுந்தவனா? என அனைத்தும் அறிய முனைகிறாள். தோழி தலைவியிடத்துக் கொண்ட பேரன்பு, தலைவியின் நல்வாழ்வில் அவள் கொண்ட அக்கறை இதனை ஆய்ந்தறிய அவளைத் தூண்டுகிறது.

தலைவனைக் கண்டவுடன் காதல் கொண்டு விடாது பல நாட்களும் தலைவனது குணங்களை ஆய்ந்த பிறகே தலைவியை அவனிடம் ஒப்படைக்கிறாள். தலைவனது குணச்சிறப்புகளை நன்கு ஆராய முனைந்த தோழி, அவனைப் பல நாட்கள் அலைக்கழிக்கிறாள். இதனை,

**"ஒரு நாள் வாரலன் இருநாள் வாரலான்**
**பன்னாள் வந்து பணிமொழி பயிற்றி என்**
**நன்னர் நெஞ்சம் நெகிழ்த்த பின்னற**
**வரைமுதிர் தேனிற் போகி யோனே"**[26]

என்ற குறுந்தொகைப் பாடலால் தெளியலாம். இங்ஙனம் பலநாட்கள் அவனை வரச்செய்து தன் தலைவியிடத்தே அவன் கொண்ட உண்மையான நேயத்தை அறிந்த பின்னர் அவனை ஏற்குமாறு அவளிடம் கூற முனைகிறாள்.

இங்ஙனம் தலைவன் தலைவி இருவரையும் ஆய்ந்து தெளிந்து கூட்டுவித்த பின்னரும் தலைவனுக்குக் குறியிடம் கூறி அவர்கள் நட்பு வளர உதவுகிறாள். பகற்குறியில் தலைவன் வருவதையறிந்து தலைவிக்கு ஏற்படும் இன்னல்களை அழகாக எடுத்துரைத்துத் தலைவியை மணம்புரிய வேண்டுமெனத் தலைவனை வேண்டுகிறாள். இவ்வாறு அக இலக்கியங்களில் தோழியின் பாத்திரம் மற்றவர்களைக்

காட்டிலும் மதிநுட்பம் வாய்ந்ததாகப் படைத்திருப்பது போற்றுதற் குரியதாகும்.

**விறலி**

விறல் என்ற சொல்லுக்கு வெற்றி, பெருமை, சிறப்பு, வலிமை, வீரம், உடல் வேறுபாடு, பல கோலம் கொண்டு நடிக்கும் ஆற்றல் எனப் பல பொருள் உண்டு.

விறலி என்பதற்கு உள்ளக்குறிப்பைப் புறத்து வெளிப்பட ஆடுபவள், பாணர்குலப் பெண், இளவயது உடையவள் எனப் பொருள் வழங்கப்படுகிறது.

விறலியரின் வருணனையையும் அவர்களின் அழகுத்தன்மையையும் சிறுபாணாற்றுப்படை கூறுகிறது.

**“ஐதுவீழ் இருபெயல் அழகு கொண்டு அருளி**
**நெய் கனிந்து இருளிய கதுப்பின் கதுப்பு என**
**மணிவயின் கலாபம் பரப்பிப் பலவுடன்**
**………………… நல்மென் சீறடி**
**கல்லா இளையர் மெல்லத் தைவரப்”**[27]

என்ற பாடலின் மூலம் விறலியின் எண்ணெய் பூசப்பெற்ற கருமை உடைய மென்மையான கூந்தலானது மழைபெய்யும் மேகம் போன்ற அழகைக் கொண்டிருந்தது. அக்கூந்தல் போன்ற கருந்தோகைகளைப் பரப்பி ஆடும் ஆண்மயில்கள் விறலியர் சாயலுக்குத் தாம் ஒப்பாகவில்லையே எனக்கருதிப் பெண் மயில்களின் நிழலில் மறையும். ஓடி இளைத்த நாயின் நாக்குப் போன்ற அழகிய மென்மையான அணிகள் இல்லாத பாதங்கள் என விறலியின் அழகுக்கு உவமை கூறப்பட்டது.

விறலியாற்றுப்படையை நெடும்பல்லியத்தனார் எனும் புலவர் பாண்டியன் பல்யாக சாலை முது குடுமிப் பெருவழுதியைத் தலைவனாகக் கொண்டு பாடியதாகும்.

பரத்தை

தொன்மைத்தமிழகத்தில் பரத்தமையும் பரத்தமை நாட்டமும் மிகுந்து விளங்கின என்பதற்கான இலக்கியச் சான்றுகள் நிறைய கிடைக்கின்றன. தந்தை வழிச் சமுதாயம் உருவாகிய காலக்கட்டத்தில் கற்பு வலியுறுத்தப்பெற, பரத்தமை உருவாகியது. இன்றைய ஆய்வு நிலையில் சங்க இலக்கியங்கள் தரும் பரத்தமை பற்றிய தகவல்கள், "சங்க இலக்கியத்தில் பரத்தமை" என்ற ச.சிதம்பரம் பிள்ளையின் ஆய்வினை அடியொற்றி, அதில் கூறப்பட்டுள்ள சமூகவியலார் கருத்துக்களை விடுத்து புதிய கருத்துக்களின் அடிப்படையில் வரையறுக்கப்படுகின்றன.

பரத்தை பற்றிய சமூகவியலார் கருத்துக்கள்

> **"பரத்தை என்பது ஓர் உலகளாவிய கலாச்சாரமாக இன்று வரை இல்லை. பாலுறவை அங்கீகரிக்கும் சமுதாயத்தில் இது தேவையென்பதால் அங்கு பரத்தமையென்பது அரிதாகவே உள்ளது. பிற சமுதாயங்களில் இது மிக அழுத்தப்பட்டுள்ளது"**[28]

என்ற பால்ராக் ராய்ஸ், பெர்னாண்டோ, ரால்பீ போன்றோர் உரைக்கின்றனர் என்பதை முனைவர் அழகம்மை விளக்குகிறார்.

> **"மத்தியதரக் குடும்பத்தையும் அதன் பெண்களையும் மாசுபடுத்தாமல் தூய்மையாகப் பாதுகாப்பதற்குப் பரத்தமை தேவைப்பட்டது."**[29]

என்பார் செரிஸ்க்ராமர்.

> **"பெரிய வீட்டுப் பெண்களின் ஒழுக்கம் மிகவும் முக்கியம் என்று கருதப்படும் வரையில் திருமணம் என்னும் சடங்குடன் வேறொருவர் ஏற்பாடும் அவசியமாகும். அந்த ஏற்பாடுதான் விலை மாதரை அமர்த்திக் கொள்ளல்"**[30]

என்ற மேலைநாட்டு அறிஞரின் கருத்தை அழகம்மை பதிவு செய்துள்ளார்.

**சங்க இலக்கியத்தில் பரத்தை**

சங்க இலக்கியப் பாடல்களில் பரத்தையரைப் பற்றி முழுமையாக அறிந்து கொள்ளும் வகையில் செய்திகள் நமக்கு அதிகம் கிடைக்கவில்லை. சங்க இலக்கியப் பரத்தையர் தலைவன், தலைவியரின் ஊடலுக்குப் பின்னணியாகவே சித்தரிக்கப்பட்டுள்ளனர். பரத்தை என்ற சொல் 13 இடங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது. பரத்தை பற்றிய செய்திகள் பாடல்களில் இடம் பெற்றுள்ள வழியும், பரத்தை தொடர்பான அடிக்குறிப்பு வழியுமே பெறப்படுகின்றன.

**வரையறை மற்றும் கட்டுப்பாடு இல்லாதவர் பரத்தையர்**

தந்தைவழிக் குடும்ப அமைப்பின் கற்புக் கோட்பாட்டுக்கு பரத்தையர் அவர்கள் குடும்பப் பெண்களின் ஒழுக்கத்தைக் காக்க உதவும் சாதனம் என்று குறிக்கப்படுவதால் பரத்தையர்க்கு அவ்வொழுக்கம் தேவையற்றது என்பது உறுதியாகிறது. அதனால் வரையறை, கட்டுப்பாடு என்பன இல்லாதவர்களாகின்றனர். சங்க இலக்கியப் பரத்தையர் சமூக வாழ்வில் தங்கு தடையின்றி ஈடுபடுவர். சங்க இலக்கியத் தலைவி ஆடல், பாடல் அறிந்தவளாக அதன்மூலம் தலைவனை மகிழ்விப்பவளாகப் படைக்கப்படவில்லை. பரத்தையர் ஆடல் பாடல்களில் ஈடுபட்டிருக்கின்றனர். ஆனால் கலைத்துறையோடு தொடர்பில்லை பலரும் அறியத் தலைவனுடன் புனலாடலில் ஈடுபட்டனர் என்பதற்குச் சான்றுகள் உள்ளன.

தலைவி கற்பொழுக்கம் உடையவள் அதனால் தன் கணவனைக்காக்கும் முயற்சியில் ஈடுபடுகிறாள். தலைவியின் அச்சத்திற்கு பரத்தையரின் வரையறை, கட்டுப்பாடு இல்லாத தன்மையே காரணமாகும். பிறர் கணவனை நாடக்கூடாது என்ற கட்டுப்பாடு பரத்தைக்கு இல்லாததால்தான் தலைவி செயல்பட நினைக்கிறாள்.

எனவே சங்க இலக்கியப் பரத்தையர் வரையறை கட்டுப்பாடு இல்லாதவர் என்பது புலனாகிறது.

சங்ககால சமுதாயத்தில் ஒருவனுக்கு ஒருத்தி என்ற கொள்கை இருந்ததாகத் தோன்றவில்லை. பரத்தையரிலும் இல்பரத்தை, காதற்பரத்தை, காமக்கிழத்தி போன்றவர்கள் காட்சியளிக்கின்றனர்.

தலைவன் பரத்தையோடு இணைந்ததை அவனது உடலில் புறநிலைகள் வேறுபாடாகத் தோன்றுவதால், அத்தோற்றத்தோடு வீட்டிற்குவராதே என்று மனைவி கூறுவது போல பாடல் அமைந்துள்ளது. இவ்வாறு சங்க காலத்தில் பரத்தையர்கள் செல்வந்தர்களை மகிழ்விக்க வாழ்ந்திருந்தனர் என்பது புலனாகிறது.

**காதலனும் காதலியும் உறவு**

உயிர்த்தொகுதியின் பெருக்கம் நிலைபெறும் பாலுணர்ச்சியைச் சார்ந்து அமைந்துள்ளன. பாலின்ப நாட்டம் மனித இனத்திற்கு மட்டும் உரியதன்று. நிலம் முழுவதற்கும் பொதுவானதாகும். இதனாலேயே தமிழ்த்தொல்லிலக்கணப் புலவர் தொல்காப்பியர்,

**"எல்லா வுயிர்க்கும் இன்ப மென்பது**
**தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும்"**[31]

என்று சிறப்பித்தார். காதலடைதல் உயிரியற்கை என்று பாரதிதாசனும் பாலுணர்ச்சியின் பொதுமைப் பண்பினைச் சுட்டினார். பாலுணர்ச்சியை வரையறைக்குட்படுத்திச் சமுதாய நலனுக்கு உகந்ததாக மாற்றிக் கொண்டது மனித இனம் மட்டுமேயாகும். மனித இனம் குடும்பமாகவும் சமுதாயமாகவும் கூடி உறவுகொண்டு வாழ அடிப்படையாக அமைந்தது பாலுறவேயாகும். ஒருவகைப் பற்றுதலாகிய காதல் ஆற்றல் மிக்கது. உட்சார்பும் உளச்சார்பும் கொண்டது; மனித வாழ்க்கையில் தலைமைக் கூறுகளில் ஒன்றாக விளங்குவது. இதனை இதயத்தின் பசியென்றும், ஆன்மாவின் தாகமென்றும் பாராட்டுவாருண்டு.

**"காதலென்பது உடற்பசி, உள்ளப்பசி, உயிர்ப்பசி, பிறவிப்பசி"**[32]

என்றார் வ.சுப.மாணிக்கம்.

சங்கப்புலவர் பாடிய செய்யுட்களில் பெரும்பான்மையானவை ஆண் பெண்உறவு பற்றியனவாகும். இதனால் சங்கச் சான்றோர் அதற்களித்த சிறப்பு உணரப்படுகிறது. இச்சான்றோர் ஆண் பெண்ணுறவின் சமூகக் கூறுகளையும் நன்கு உணர்ந்து பாடியுள்ளனர். இதனால் அவர்களின் செய்யுட்கள் கற்பனைப் படைப்புக்களாயினும் உண்மை மாந்தரின் உணர்வு வெளிப்பாடுகளாகவே காட்சி தருகின்றன. இச்சிறப்பினால்தான் வ.சுப.மாணிக்கம் அவர்கள்,

**"காதலையும் அதன் உணர்வையும், அதன் கல்வியையும் தெளிய வேண்டின், தெளிவுக்கு வேறிடமில்லை, தமிழ்ப் பேரினம் கண்ட அகத்திணையை நாடுக; தொல்காப்பியம், சங்க இலக்கியம் திருக்குறள் என்ற முத்தமிழ் நூல்களைக் கற்க முந்துக"**[33]

என அறிவுறுத்தினார்.

சங்ககாலச் சமுதாயத்தில் திணைவழிப்பட்ட குறவர், பரத்தவர், ஆயர், உழவர் ஆகியோரும் தொழில் வழிப்பட்ட தச்சர், கொல்லர், குயவர் முதலியோரும் வாழ்ந்தனர் என்பது அறியப்படுகிறது. காதல் என்னும் பொருள் இவர்கள் அனைவருக்கும் பொதுவாகப் பாடத்தக்கதே எனினும், சங்கப் புலவர்கள் திணை வழிப்பட்ட சமுதாயத்தின் ஆளும் உரிமை கொண்ட பிரிவினரையே தலைமக்களாகக் கொண்டு இலக்கியம் படைத்தனர். சிறுபான்மையான செய்யுட்களில், திணைத் தலைமக்களல்லாத குடிமக்களும் காதலர்களாகக் காணப்படுகின்றனர்.

வெற்பன், சிலம்பன், புலம்பன், துறைவன், ஊரன் என்பன திணைத் தலைவர்க்குரிய பொதுப்பெயர்களாகும். காதல் தலைவரும் இப்பெயர்களால் குறிக்கப்படுகின்றனர். அவர்களின் தகுதிக்கேற்பவே

தேரூர்ந்து செல்வோராகவும், மெய்க் காவலர் புடைசூழச் செல்வோராகவும் காட்டப்படுகின்றனர்.

தலைவியரின் இல்லங்கள் செல்வச்செழிப்பு மிக்கனவாக விளக்கப்படுகின்றன. வீடுகளைக் காவலர் காத்து நின்றனர். செவிலியர் பலர் இல்லத்திலிருந்து பணிசெய்கின்றனர். மேலும் சில கூற்றுகளால் தந்தை செல்வந்தராக இருந்ததை எந்தை கானல் எனக் கடற்கரையைத் தன் தந்தைக்குரியதாகக் ஒரு பெண்ணும் கூறுகின்றாள். ‘ஏர்கெழு செல்வத்து எந்தை’ என்று என்றொருத்தியும் ‘தொலையா வேலின் வண்மகிழ் எந்தை’ என்று இன்னொரு தலைவி தன் தந்தையின் பெருவீரத்தையும் தலைமைப்பாட்டையும் விளக்குகின்றனர்.

பாலைத்திணைச் செய்யுட்களில் பொருள்வயிற் பிரிவோர் பெரும் செல்வர்களாகவே காட்டப்பட்டுள்ளனர். முல்லைத் திணைச் செய்யுட்களின் தலைவர்கள் வேந்தனுக்காகப் படை நடத்திச் சென்று பாசறையில் தங்குவோராகவும், பாகன் தேரோட்ட அதில் வருவோராகவும் காட்டப்படுகின்றனர். மருதப் பாடல்கள் சில அரசனைத் தலைவனாகக் காட்டுகின்றன. ஏனையவற்றில் ஊராளும் தலைமகனாகக் காட்டுகின்றன. மருதத் தலைவர்களின் பெருமையைப் பாணன் பாடித் திரிவதாகவும் குறிப்புண்டு.

காதலன் காதலி என்னும் இருவரும் ஓரூரினராகவோ வெவ்வேறு ஊரினராகவோ அமையலாம். இதுவே உலகியலில் காணப்படும் நிலையாகும். ஆனால், சான்றோர் குறைந்த நிலையிலேயே ஓரூர்க்காதலர்களைப் படைத்துக் காட்டியுள்ளனர்.

பிள்ளைப் பருவத்தில் ஒருவரோடொருவர் சண்டையிட்டபோது செவிலியர் தலையிட்டு அமைதி உண்டாக்கினார். பின்னர் அவர்களே கணவனும் மனைவியுமாக வாழ்வது கண்டு, அவர்களைக் காதலர்களாக ஒன்றுபடவைத்த உயர்ந்த பாலை ஊரார் வாழ்த்துவதாக ஒரு செய்யுள்

கூறுகின்றது. விளையாட்டுப் பருவத்தில் பெண்கள் ஆர்வத்துடன் கட்டிய சிற்றிலைச் சிதைத்தும், வரிப்பந்து பிடுங்கிக் கொண்டோடியும் அவர்களை வருத்தமுறச் செய்த சிறுவன் பின்னர் பருவமடைந்ததும் அவர்களுள் ஒருத்திக்குக் காதலன் ஆவான். இந்நிலையைக் கபிலர் கலித்தொகைச் செய்யுளொன்றில் காட்டியுள்ளார். இங்ஙனம் காதலர் இருவரையும் ஓரூரினராகக் காட்டும் செய்யுட்கள் அருகியே காணப்படுகின்றன.

பெரும்பான்மையான காதலர் ஒரே திணையைச் சார்ந்தவராயினும் வெவ்வேறு ஊரினராகவே படைக்கப்பட்டுள்ளனர். ஒரு நெய்தற்தலைவன் தன் தேரைத் தூரத்தில் நிறுத்திவிட்டுத் தலைவியும் தோழியும் நிற்குமிடத்திற்குச் சென்று, உனது ஊர் யாது, என வினவுகின்றான். இதனை,

**“தான் இவண் வந்த காலை நம்மூர்க்**
**கானலம் பெருந்துறைக் கவின் பாராட்டி**
**ஆனாது புகழ்ந்திசி னோனே”**[34]

எனத் தோழியொருத்தி கூறுகின்றாள்.

தலைவனை நெடுந்தொலைவினின்றும் வந்தோனாக ஒரு நெய்தல் திணைப்பாட்டு விளக்குகின்றது. தலைவன் ஒரு மலையையும் தலைவி அருகிலுள்ள இன்னொரு மலையையும் சேர்ந்தோராகக் கூறப்படுதலும் காணப்படுகின்றது. தலைவன் பிரிந்த காலத்தில் தலைவியொருத்தி தலைவன் மலை தன் கண்ணுக்குப் புலப்படுதாலேயே தான் உயிர் வாழ்ந்திருப்பதாகக் கூறுகின்றாள். தலைவனுடைய மலையிலிருந்து ஓடிவரும் நீரில் ஆடி மகிழ்கிறாள். பெண்களின் உடன் போக்குப் பாடல்கள் பலவும் தலைமக்கள் வெவ்வேறு ஊரினர் என்பதை விளக்குவனவாக அமைகின்றது. தலைமக்கள் அருகிலும் தொலைவிலும் அமைந்த வெவ்வேறு ஊரினராக விளங்குதலை சங்கப்பாடல்கள் விளக்குகின்றன.

ஒவ்வொரு திணையிலும் அமைந்த தனித்தனிக் குடியிருப்புகளில் தம்முள் இரத்த உறவு கொண்ட மக்கள் வாழ்ந்தனரென்றும், அவர்கள் உள்ளூரிலும் வெளியூரிலும் மணஉறவு கொண்டு வாழ்ந்தனரென்றும் அறிய முடிகிறது. வெளியூரிலிருந்து வந்து தன் பெண்ணைக் கொண்டு செல்லும் தலைவனை நொதுமலாளன் என வசைபாடுவது கொண்டு, அவன் தன் குடும்பத்தோடு எவ்வகையிலும் உறவில்லாதவன் என்றும், நம்பத்தகாதவன் என்றும் அவர்கள் கருதினர். வெவ்வேறு குழுவினர் காதல் உறவினால் ஒன்றுபட்ட நிகழ்வை இக்களவுப் பாடல்கள் வழி அறியமுடிகிறது.

அவ்வகையில் திணை ஒவ்வொன்றும் ஒவ்வொரு தனியுலகமாகத் தனிப்பண்பாட்டைப் போற்றி வாழ்ந்தது என்பது அறியலாகிறது. திணைமக்கள் தத்தம் பொருள்களைப் பண்டமாற்றுச் செய்து கொண்டு வாழ்ந்து உள்ளனர். திணைநிலைச் சமுதாயத்தில், இத்தகைய பொருளாதார உறவுக்கு மேல் திருமணக் கலப்பு நிலவியதா என்பது ஒரு வினாவாகும். உணவு, உடை, தொழில் முதலான அனைத்திலும் தம்முள் வேறுபட்ட இனத்தினர் திருமண உறவால் கலந்திருப்பர் என்று எண்ண முடியவில்லை.

சாளை இளந்திரையன் சங்க காலக் காதல் குறித்து,

> **“அந்தந்தக் குறிப்பிட்ட நிலத்து ஆண் பெண்களிடையே ஏற்பட்ட காதலையே அகப்பொருள் இலக்கியம் பாடுகிறது”**[35]

என்று குறிப்பிட்டுள்ளார். அவர் மேலும் இது பற்றிக் கூறுகையில் வெவ்வேறு நிலப்பகுதிகளின் வாழ்க்கை முறைகளும் பழக்க வழக்கங்களும் கணிசமான அளவில் வேறுபட்டிருந்தன என்றும், அவ்வேறுபாடு நிலம் விட்டு நிலம் நடைபெறும் கலப்புத் திருமணங்களை ஊக்குவிப்பதாக இல்லை என்றும் குறிப்பிடுகின்றார். இது ஏற்கத்தக்கதாகவே தோன்றுகிறது.

வ.சுப. மாணிக்கம் அகம் 140, 390 ஆகிய இரு செய்யுட்களையும் எடுத்துக்காட்டி, அவை திணைக்கலப்பு மணம் பற்றியவை என்று விளக்கியுள்ளார். அகம் 140 ஆம் செய்யுள் நெய்தல் நிலப்பெண் மலைநாட்டு இளைஞனால் காதலிக்கப்படுதலையும் அகம் 390 ஆம் செய்யுள் நெய்தல் நிலப்பெண் முல்லை நிலத்துத் தலைவன் ஒருவனால் காதலிக்கப்படுதலையும் விளக்குவதாக அவர் கூறியுள்ளார்.

**கணவனும் மனைவியும் உறவு**

ஒவ்வொரு சமூகமும் தன் பண்பாட்டு வளர்ச்சிக்கும் தேவைக்கும் ஏற்பக் கணவன் மனைவி உறவு பற்றிய கொள்கைகளை வகுத்துப் போற்றி வருகின்றது. இக்கொள்கைகளை அளவு கோலாகக் கொண்டு ஒரு சமூகத்தின் பண்பாட்டுச் சிறப்பை அளந்தறியலாம். பண்பட்ட தமிழினம் பன்னெடுங் காலத்திற்கு முன்பே பல நிறுவனங்களை உருவாக்கி ஒவ்வொன்றையும் சார்ந்த கொள்கைகளையும் உருவாக்கிப் போற்றியுள்ளது. கணவன் மனைவி உறவு பற்றித் தமிழர்கள் உருவாக்கியிருந்த கொள்கைகள் சங்க காலத்திலேயே தொன்மை யானவைகளாகக் கருதப்பட்டமையைத் ‘தொன்றியல் மரபின் மன்றல் அயர’ என்னும் திருமணம் பற்றிய சங்க இலக்கியக் குறிப்பால் நன்கு அறியலாம். திருமணச் சடங்குகள் இயற்றப்படுவதற்கு முன்னர் ஆண் பெண்ணுறவில் நெகிழ்ச்சியான போக்கு நிலவிற்றென்பதனைப்,

**“பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**
**ஐயர் யாத்தனர் கரணம் என்ப”**[36]

எனத் தொல்காப்பியர் சுட்டுவதன் மூலம் உணரலாம். திருமணச் சடங்கு வரையறுக்கப்பட்ட காலம் இன்னதெனக் கூறவியலாது. எனினும் அது தொன்மையான காலமெனத் துணியலாம். பண்டைத் தமிழகத்தில் வழக்கிலிருந்த திருமண முறைகள், கணவன் மனைவியரிடையே அமையும் உறவின் தன்மைகள், குறிக்கோள்கள், நடைமுறைக் கூறுகள், உளவியற் கூறுகள் ஆகியவை பற்றிச் சங்க இலக்கியங்கள் பல செய்திகளைத் தன்பாற் கொண்டுள்ளது.

தன் ஒப்புதலின்றி வயது வந்தஆணும் பெண்ணும் நெருங்கி உறவாடுதலைச் சங்கச் சமுதாயம் உடன்படவில்லை என்று தெரிகின்றது.களவுக்காலத்தில் ஊர்ப் பெண்டிர் கூறும் அலர், சமூகத்தின் எதிர்ப்பையே காட்டுகின்றது. அலர் மொழிந்த ஊரார், தலைவன் தன் காதலியை மணந்தவுடன் அமைதியடைந்தனர் என்று அறியப்படுகிறது. சமூகத்தின் ஒப்புதல் ஆண் பெண் இருவருக்கும் எத்துணை இன்றியமையாததாகக் கொள்ளப்பட்டதென்பது இதனால் உணரப்படு கின்றது.

காதல் பாடல்களின் மிகுதியைக் கண்டு, அன்று காதல் மணமே மிகுதியாக நடந்ததென்று கருதிவிடமுடியாது.

> **“களவொழுக்கத்தில் காதல் நெஞ்சங்கள் விம்மி எழுகின்றன. விரைந்து அலைகின்றன. இயல்புகடந்து எண்ணுவதும் சொல்லுவதும் செய்கின்றன. இவ்வெண்ண கிளர்ச்சிகள் பாடலுக்கு விறுவிறுப்பைக் கொடுத்தலின் களவு சான்றோர்களால் பாடப்பெற்றது”**[37]

என்று வ.சுப.மாணிக்கம் கூறுவது பொருத்தமாகும். இதிலிருந்து அன்று காதல் திருமணங்கள் நிகழ்வுற்றனவெனினும் அதே நேரத்தில் பெரியோர்கள் கூடி உறுதி செய்யும் திருமணங்களும் பெரிதும் நடைபெற்றன என்று கருதமுடிகிறது. இன்று கூட பெரியோர்களால் உறுதி செய்யப்படும் திருமணங்களே பெரும்பான்மையாக இருந்தும், சிறுகதை பெருங்கதை எழுதுவோர் பெரும்பாலும் காதல் மணங்கள் பற்றியே எழுதி வருவது நோக்கத்தக்கதாகும்.

திருமணம் ஒரு சமுதாயத்தை உருவாக்கும் பெருநிலையாகும். புதிய சமுதாய இனங்களில் மணநெறிகள் ஒழுங்குபடுவதில்லை. தமிழ்ச் சமுதாயம் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே பயின்று பரந்து ஓங்கித் தமிழ் மொழிபோல் ஒழுங்குபட்டுவிட்டது. அதனால் மணமுறைகள் நெறிப்பட்டன.

ஆதலில் கொடுக்கக்கொள்ளுதல் என்னும் முறை எல்லார் நெஞ்சத்தும் இயல்பாய்ப் பதிந்து கிடந்தது. உலகத்தார் பண்டைத் தமிழகத்தில் திருமண முறை ஒழுங்குற்றைமையை பற்றிப் பாராட்டியுள்ளார். பண்டைய மணமுறைகள் சங்க காலத்தில் பல வகையான வழக்கிலிருந்தன என்று அறிய முடிகின்றது. அவை அனைத்திலும் குடும்பம் மற்றும் பெரியோரின் விருப்பத்திற்குச் சிறப்பிடமிருந்ததென்றும் எண்ண முடிகிறது.

உறவு வழிமணம்

ஆரியரிடையே காணப்படாது திராவிடரிடையே மட்டும் காணப்பட்டனவாகப் போதாயனரால் சிறப்பாகக் குறிப்பிடப்பட்ட ஐந்து சமூக மரபுகளுள், ஒருவன் தன் தாய்மாமன் மகளை மணத்தலும் அத்தை மகளை மணத்தலும் இடம் பெறுகின்றன. இன்றளவும் நீடித்துள்ள இம்மரபு சங்க காலத்திலும் இருந்திருப்பது இயல்பாகும். ஆனாலும் சங்கப் புலவர்கள் களவுத் திருமணத்தைப் பாடுதலை இலக்கிய மரபாகக் கொண்டமையின் உறவு வழித் திருமணத்தைப் பாட்டுக்குப் பொருளாகக் கொண்டிருக்கவில்லை எனத் தெரிகின்றது. அக்காலத்தில் இத்தகு நெருங்கிய உறவினர் மணவுறவு கொள்ளும் வழக்கம் இருந்தது என்பது,

"யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்"[38]

என்னும் செம்புலப் பெயல் நீராரின் வாக்கால் நன்கு உணரப்படுகின்றது.

தம் காதலின் சிறப்பைப் பாராட்டி கூறும் தலைவன், தானும் தன் காதலியும் முன்பின் அறியாதோரென்றும், தம் தாயாரும் தம்முன் உறவினராக இல்லை என்றும் அங்ஙனமே தம் தந்தையரும் உறவினரல்லரென்றும், அவர்கள் எவ்வகையிலும் உறவினர் அல்லர் எனினும், தம் அன்பு நெஞ்சங்கள் ஒன்றாக கலந்து விட்டனவென்றும் கூறுகின்றான். இக்கூற்றால் தாய் வழியிலோ தந்தை வழியிலோ

உறவுடையார் திருமணம் புரிந்து வாழும் நிலையே பண்டைய காலத்தில் இயல்பாக இருந்ததென்றும், அதனாலேயே தலைவன் இங்ஙனம் கூறுவதாகச் செய்யுள் செய்தார் புலவரென்றும் அறியமுடிகின்றது.

### ஏறு தழுவல்

பெண்ணின் பெற்றோரால் வளர்க்கப்பட்ட கொல்லேற்றினை அதற்கெனக் குறித்த நாளில் அடக்கி வெற்றி கொள்ளும் வீர இளைஞனுக்குப் பெண்ணை மணஞ்செய்து கொடுக்கும் வழக்கம் ஆயர்களிடம் இருந்தமை முல்லைக் கலியால் அறியப்படுகிறது. வேறு சங்க நூல்களில் இதுபற்றி யாதும் சொல்லப்படவில்லை. கொல்லேறு தழுவும் இளைஞர்களையே ஆயர்குடிப் பெண்கள் விரும்பி மணப்பரென்றும், அதற்கஞ்சுவாரை அடுத்த பிறவியிலும் அடைய விரும்பமாட்டார் என்றும் நல்லுருத்திரனார் எனும் புலவர் கூறுகின்றார். அந்நாட்களில் பசுக்களைக் கள்வரும் பகைவரும் கவர்ந்து செல்லல் பெருவழக்காக இருந்தது. இதனை வெட்சி, கரந்தை திணைகள் நமக்கு அறிவுத்துகின்றன. எனவே தம் செல்வமான கால்நடைகளைக் காத்துக் கொள்ளும் திறனுடையவர்களுக்கே பெண் கொடுக்க விரும்பியமை பொருத்தமானதேயாகும்.

### தலைவன் பரத்தை உறவு

தனிமனித வாழ்விலும் சமூக வாழ்விலும் பாலுணர்ச்சி மிக இன்றியமையாத இடம் வகிக்கின்றது என்பதில் மாறுபட்ட கருத்தில்லை. மனித இனம் நாகரிகத்தின் குழந்தைப் பருவத்திலிருந்த போது வரையறையற்ற ஆண் பெண் உறவு நிலவிற்றென்று கூறப்படுகின்றது. மனிதன் படிப்படியே முன்னேறிய போது, தன்னுடைய பழைய மரபுகளை மாற்றிக் கொண்டான். இதனால் வாழ்க்கையிலேற்பட்ட திருத்தங்கள் பலவாகும். இத்திருத்திங்களின் அளவையும் தன்மையையும் கொண்டே நாகரிகம் மதிப்பிடப்படுகின்றது. இங்ஙனம் ஏற்பட்ட திருத்தங்களில் மனிதனுடைய பாலியல் வாழ்க்கையிலேற்பட்ட திருத்தமே தலைமையானது எனலாம். வரையறையற்ற ஆண்பெண் உறவினை

மாற்றித் திருமணமென்னும் நிறுவனத்தை உருவாக்கிய பின்னரும் கூடப் பழைய நிலையின் எச்சம் நீடித்ததாகத் தெரிகின்றது. அவ்வெச்சமே பரத்தமை என்னும் நிறுவனமாக உருவாகி இன்றளவும் மனித சமூகத்தின் ஓருறுப்பாக நீடித்துள்ளது. சங்க இலக்கியங்கள் ஆண் பெண் உறவின் பிற கூறுகளை விளக்குவது போன்று பரத்தமையின் கூறுகளையும் விளக்கியுள்ளன.

பரத்தமை

சங்க இலக்கியத்துள் 'பரத்தை', 'பரத்தமை' என்னும் சொற்கள் காணப்படுகின்றன. பரத்தையர் என்னும் பன்மை வடிவமும் 'பரத்த' என்னும் விளி வடிவமும் காணப்படுகின்றன. தனக்கென திருமணம் செய்ய பெண்ணை விடுத்துப் பல பெண்டிரிடம் உடலுறவு கொள்பவன் என்னும் பொருளிற் பரத்தன் என்றும், தனக்கென ஒருவனைத் திருமணம் செய்து கொள்ளாமல் தான் விரும்பியோருடனும் தன்னை விரும்பியோருடனும் உடலுறவு கொள்பவள் என்னும் பொருளில் பரத்தை என்றும் சொல் சுட்டப்பட்டனர் என்று தெரிகின்றது. இவ்வரையரையற்ற தன்மையைக் குறிக்கப் பரத்தமை என்னும் பண்புச் சொல் ஆடவரின் ஒழுகாலற்றைச் சுட்டியே சங்க இலக்கியத்தில் ஆளப்பட்டுள்ளது. மாறாகப் பரத்தையரின் இயல்பு என்னும் பொருளில் ஆளப்படவில்லை. ஆடவரின் தீயொழுக்கம் பற்றிப் பெண்கள் குறை கூறும் நிலையில் மருததிணைப் பாடல்கள் படைக்கப்பட்டதால் இந்நிலையமைந்ததெனத் தெரிகின்றது.

> **"பரத்தை, பரத்தமை என்னும் சொற்களுக்குரிய வரையறைகள் சங்க இலக்கியத்தில் இல்லை. எனினும் அவர்களுடைய பண்புகள் பலவற்றையும் உள்ளடக்கி ஒரு வரைவிலக்கணத்தை கூற இயலும். 'பரத்தையர் என்பவர் யாரெனின்' அவர் ஆடலும் பாடலும் வல்லராகி, அழகும் இளமையும் காட்டி இன்பமும் பொருளும் வெ.ஃ.கி யாவர்**

> **மாட்டும் தாங்காதார்’ என்பது இளம் பூரணர் தரும் வரைவிலக்கணமாகும்.”**[39]

சங்கச் செய்யுட்களில் விலைநலப்பெண்டிர், விலைக்கணிகை, கொண்டி மகளிர் என இடம்பெறும் குறிப்புக்கள் பரத்தையர்க்கும் பொருளுக்குமுள்ள உறவைக் குறிக்கவே பயன்படுத்தப்பட்டது. ‘தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளா’ என்னும் குறிப்பும் இவ்வன்பின்மையை விளக்குகின்றது. பழந்தேடும் பறவைகள் இவர்களுக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. இதனால் யாரிடத்திலும் நிலையாக இல்லாதவர் என்னும் தன்மை விளக்கப்பட்டது.

பணத்திற்கீடாகவோ அதற்கீடான வேறு பொருட்காகவோ வரையறையின்றிப் புணர்ச்சியில் ஈடுபடுவது பரத்தமை பண்பாகும். ஏறத்தாழ வரையறையின்றிப் பொருளுக்காக வழக்கமாகவோ இடையிட்டோ புணர்ச்சியில் ஈடுபடுவதும் சமூகத்தில் காணப்படும் நிகழ்வாகும்.

மருதநில வளமும் பரத்தமையும்

சங்க இலக்கியம், தலைவர்களின் பரத்தமை ஒழுக்கத்தை மருத்திணையில் கூறியுள்ளது. இப்பாடல்கள் தோன்றிய காலத்தில், வளமார்ந்த மருத நிலங்களில் வாழ்ந்த பெருமக்களிடம் இவ்வொழுக்கம் பெரிதும் காணப்பட்டமையே இதற்குக் காரணம் என்று கூறுதல் தவறன்று.

உழவுத்தொழிலின் தோற்றத்தோடு நாகரிகம் பிறந்தது என்பர். இந்நாகரித்திற்கும் பரத்தமைக்கும் உள்ள உறவு ஒளிக்கும் நிழலுக்கும் உள்ள உறவு போல் பிரிக்க இயலாததென்றும் ஒளியின் மிகுதிக்கேற்ப நிழலின் கருமை மிகுவது போல் நாகரிகத்தின் மிகுதிக்கேற்ப பரத்தமையும் பரவலாகிறதென்றும் கூறப்படுகின்றது.

பெரிய நகரங்கள் வளமிக்க மருதநிலங்களிலேயே உருவாயின. அவை காவிரி, வையை, பெரியாறு என்னும் பெரிய ஆறுகளின் கரைகளில் உருவாயின என்பதனை விளக்கத் தேவையில்லை. இத்தகைய நகரங்களிலேயே பரத்தமை பெரிதும் வளர்ந்திருந்தது என்பதனைப் பண்டைத் தமிழர்கள் கண்டனர். மேலும் இது சிற்றூர்களுக்கன்றிப் பெரிதும் நகர்களுக்கே உரியது என்பதனை நன்கு உணர்ந்திருந்தனர் எனத் தெரிகின்றது.

மருதநிலத்தின் செல்வச் செழிப்பே பரத்தமை ஒழுக்கத்தை ஊக்கப்படுத்தியது என்றும் நாகரிகம் வளர்ச்சியுறும் பொழுது மக்களிடம் நெகிழ்ச்சியான போக்குத் தோன்றுகின்றதென்றும் அறிஞர்கள் கூறுகின்றனர்.

மருத நிலத்திலேற்பட்ட கலை வளர்ச்சியும் அடிக்கடி அங்கு நிகழ்ந்த திருவிழாக்களும் பரத்தமைக்கு உறுதுணை புரிந்தன எனத் தெரிகின்றது.

செல்வரை நம்பியே பரத்தையர் வாழ்ந்தனர். அவர்களை நாடிச் செல்வர்கள் நகரங்களுக்கு வந்தனர் என்பது மதுரைக் காஞ்சியால் நன்கு விளங்குகின்றது. மருத நிலமே செல்வத்திற்கு இடமாக விளங்கியமையால் பரத்தமை அங்கு வேர்விட்டு வளர்ந்தமையில் வியப்பில்லை.

பண்டைத் தமிழ்ச் சான்றோர் வாழ்வின் நல்ல கூறுகளை மட்டும் காட்டி, இருண்ட பகுதிகளை மூடி மறைக்கவில்லை. அவற்றையும் ஒளிவு மறைவின்றிக் காட்டவும் தயங்கவில்லை. நாகரிக நாடுகள் பலவற்றிலும் பரத்தமை இருந்துள்ளது. இன்றும் இருக்கின்றது. எனவே, பண்டைத் தமிழகத்தில் அது நிலவியமை பற்றி நாணமுறத் தேவையில்லை.

பண்டைக் கிரேக்கத்தில் மனைவிமார்கள் குழந்தைப் பேற்றுக்கே உரியவர்களாக மதிக்கப்பட்டனர். பெண்ணின்ப நுகர்ச்சிக்குப் பலதரப்பட்ட பரத்தையர் இருந்தனர் என்று அறியமுடிகிறது.

**கொண்டி மகளிர்**

சங்க இலக்கியத்தில் போர் பற்றிய செய்திகள் மலிந்துள்ளன எனினும், பகை நாட்டவர்களைக் கைப்பற்றி அடிமைப்படுத்தியதை பற்றி எதுவும் கூறப்படவில்லை. மாலை நேரத்தில் அம்பலங்களை மெழுகி விளக்கேற்றும் மகளிர் கொண்டி மகளிர் எனக் குறிக்கப்பட்டனர்.
இதனை,

**"பகைவர் மனையோராய்ப் பிடித்து வந்த மகளிர்"**[40]

என்று நச்சினார்க்கினியர் கூறியுள்ளார்.

பகைவர் மகளிரை இங்ஙனம் அடிமை கொள்ளும் வழக்கம் இடைக்காலத்திலிருந்தது தவிர சங்க காலத்தில் இருந்ததில்லை என அ.தட்சிணாமூர்த்தி தனது நூலில் பதிவிடுகிறார்.

நெஞ்சைக் கொள்ளை கொள்ளும் பேரழகுடைய பெண்டிர் என்னும் பொருளிலேயே கொண்டி மகளிர் என்னும் தொடர் ஆளப்பட்டதாகத் தெரிகின்றது இதனை,

**"பெருஞ்சீர் அருங்கொண்டியளெ"**[41]

என்று புறநானூற்றில் கூறப்பட்டமை குறிப்பிடத்தக்கது.

திருமாவளவன் படையெடுத்துச் சென்று பெற்ற வெற்றியால் அந்த நாடுகள் பல வகையான அழிவிற்கு உட்பட்ட நிலையினை விளக்கும் பொழுது கோயில்களில் மாலைப் பொழுதில் அழகுடைய பெண்கள் விளக்கேற்றுதலும் நின்று போயின்மையைக் குறிப்பிட்டுள்ளனர். அத்தகு அம்பலங்கள் யானைகள் உரையும் இடங்களானதை பட்டினப்பாலை குறிப்பிடுகிறது. படையெடுப்பினால் பொது இடங்கள் பாழ்பட்டு வேற்று இடங்களாக மாறிய செய்தி கிடைக்கப்பெறுகின்றன. சிறப்புமிக்க சமய வாழ்வு பாழ்பட்டமையைக் காட்டுவதே புலவர் நோக்கமாதலின்

படையெடுப்பிற்கு முற்பட்ட நிலையையும் பிற்பட்ட நிலையையும் விளக்கி உள்ளனர். அழகிய பெண்களால் பேணப்பட்ட அம்பலம் இப்பொழுது யானைகள் உறையும் இடமாயிற்று என்பதே அவர் காட்ட விரும்பும் குறிப்பாகத் தெரிகின்றது. மறைமுகமான சில குறிப்புக்களால் சில சூழ்நிலைகளில் தம்மைப் பிறர்க்கு அடிமையாக்கிக் கொள்ளும் நிலை இருந்தது என்று கொள்ள இடமிருப்பினும் குறிப்பிட்ட பணியாளர்கள் யாவரும் தம்மை தன்னையே விற்றுக் கொண்டனர் என்று கூறமுடியாது. எனவே பகை நாட்டவரால் அடிமை படுத்திக் கொண்டு வரப்பட்டவர்கள் கொண்டி மகளிர் என்று அறியலாம்.

பிறர்க்கு ஏவல் செய்து வாழ்ந்தோரில் அடியோர், வினைவலர் என்னும் இரு பிரிவாரைத் தொல்காப்பியர் சுட்டியுள்ளார். இதனை,

**“அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்**
**கடிவரையியபுறத் தென்மனர் புலவர்”**[42]

என்னும் நூற்பா வழிமூலம் அறிந்து கொள்ள முடிகிறது.
இவர்களில் முதற்பிரிவினர் ஒரு குடும்பத்தைச் சார்ந்தே வாழும் குற்றேவலர் என்றும், இரண்டாம் பிரிவினர் உழவுப் பணி போன்றவற்றைச் செய்யும் தொழிலாளர் என்றும் கூற இடமுண்டு. இத்தகு மாந்தர் ஐந்திணைத் தலைமக்களாகப் பாடத்தக்காரல்லர் எனத் தொல்காப்பியர் விதித்துள்ளார். இவர்கள் பிறர்க்கு ஏவல் புரிதலையே தமக்கு இயல்பாகக் கொண்டவர் என்றும் கருதுமாறு உரையாசிரியர் விளக்கம் தந்துள்ளார். எனவே தொல்காப்பியர் குறிப்பிடும் இரண்டாம் நிலை மாந்தர் கொண்டி மகளிருக்கு ஏற்புடையது என்று அறியலாம்.

### பெற்றோரும் மக்களும்

தன் இனத்தைத் தொடர்ந்து வாழச் செய்யவும் அதற்கான முயற்சியும் எல்லாவுயிர்களிடத்தும் காணப்படுவனவாகும். எனினும் இவ்விழைவும் முயற்சியும் ஆறறிவு படைத்த மனித இனத்தில் மட்டும் உணர்வடிப்படையில் அமைய, பிறஉயிரினங்களில் இயல்பூக்க அடிப்படையில் அமைந்துள்ளன. மக்கட் பேற்றினையடைந்து தம்

மரபினைத் தொடர்ந்து மகிழ்வித்தலே திருமணத்தின் தலையாய நோக்கமென்பது பெரும்பான்மையான சமூகவியலார்க்கு ஏற்புடைய கருத்தாகும். சங்க இலக்கியங்கள், இத்தகு பிள்ளைப் பேற்றினை இன்றியமையாததாகவும், வாழ்வில் இனிமை சேர்ப்பதாகவும் கணவன் மனைவி உறவிற்கு உதவும் ஒன்றாகவும் காட்டுகின்றன.

### மக்கட் பேற்றின் சிறப்பு

எத்துணைப் பொருட்செல்வமும் சமூக மதிப்பும் பெற்றிருப்பினும் ஒருவன் மக்கட் பேற்றினைப் பெறத்தவறினால் அவன் வாழ்வு குறைவாழ்வாகக் கருதப்பட்டது. அக்குறையினை வேறெதனாலும் இட்டு நிரப்புதல் இயலாதன்பதனைப் பாண்டியன் அறிவுடைநம்பி,

> **"மயக்குறு மக்களை இல்லோர்க்குப் பயக்குறையில்லைத்**
> **தாம் வாழும் நாளே"**[43]

என்னும் புறநானூற்று பாடல் வரிகளால் விளக்கியுள்ளார். தெளிவாகவும் உணர்த்தியுள்ளான்.

பிற்காலத்தில் புகழேந்திப் புலவரும் இதே கருத்தினை வற்புறுத்தியுள்ளார்.

> **"பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனும்மற்**
> **றென்னுடைய ரேனும் உடையரோ - இன்னடிசிற்**
> **புக்களையும் தாமரைக்கைப் பூ நாறும் செய்யவாய்**
> **மக்களையீங் கில்லா தவர்"**[44]

என்ற நளவெண்பா பாடல் கருத்து மூலம் மக்கட் பேற்றின் இன்றியமையாயை புலவர் கூறியுள்ளார்.

மக்கட்பேறு அரிய பேறாதலின் புதல்வனை அரும்பெறற் புதல்வன் எனச் சுட்டினர். இத்தகைய பெரும் பேற்றினைப் பெறுவதற்கு இறைவனை வேண்டி நோன்பு இருப்பது வேள்விகள் செய்தும் பல புண்ணியங்கள் செய்வது என அரும்பாடுபட்டுள்ளனர்.

பெண்ணொருத்தி தன் வாழ்வில் எத்துணை வளங்களை உடையவளாயினும் தாய்மைப் பேறடைவதனையே பெருமையாகக் கொள்வாள். இதனால் தான் நல்ல மக்கட்பேறானது குடும்ப வாழ்வின் நன்கலனென்றார் வள்ளுவர். கணவன் தன் மனைவியைத் தன் வாழ்க்கைத் துணைவியாகக் காண்பதைவிட தன் மகனின் தாயாகக் காண்பதில் பெருமகிழ்ச்சி கொண்டான். எனவேதான் தன் கணவனின் குடி பெருமை மேம்படுதற்கு மக்களைப் பெற்றுப் பேணி வளர்க்கும் பொறுப்பும் பெருமையும் தகுதி உடைய மனைவிக்கிருந்தது.

மக்கட் பேற்றின் சிறப்புணர்ந்த தமிழ்ச் சமுதாயம் மனை வாழ்க்கையின் தொடக்கமான திருமணத்தின் போது நல்ல பல குழந்தைகளைப் பெற்று சிறக்குமாறு வாழ்த்துவதனை மரபாகக் கொண்டிருந்தது. மகவுஈன்ற தாய் வயிறுதான் ‘வயிறு’ எனச் சிறப்பிக்கப்பட்டது. அத்தகைய வயிறுடைய மகளிருக்கே அக்காலத்தில் திருமணச் சடங்கை நடத்தும் பெருமை அளிக்கப்பட்டது.

தாயும் குழந்தையும் அல்லது தந்தையும் குழந்தையும் தொடர்புறுத்திப் பேசப்படுமிடமெல்லாம் மகனே வியந்து கூறப்படுகின்றான். ‘புதல்வன்தாய்’, ‘புதல்வர் தந்தை’ என்று சுட்டுவது போல்’ ‘புதல்வி தந்தை’, அல்லது ‘புதல்வியர் தந்தை’ எனச் சுட்டும் மரபினைக் காணமுடியவில்லை.

சமூகம் ஆணின் தலைமையில் இயங்கியமையும், குடும்பப் பொருளாதாரம் பெரிதும் ஆணைச் சார்ந்திருந்தமையும், இடைவிடாது போர்கள் நிகழ்ந்த காலமாதலின் நாட்டுப் பாதுகாப்பிற்கு ஆடவர் மிகுதியும் தேவைப்பட்டமையும், சமய நம்பிக்கையும் ஆண்பிள்ளைப் பேற்றுக்கு முதன்மையளிக்கக் காரணங்களாக இருந்தன. எனினும், இதன் மறுதலையாக பெண் மக்கட் பேற்றினை வெறுத்தமைக்குச் சான்றில்லை. பெண் மகளின்றி வாழந்தாரும் அக்காலத்தில் இருந்தமையை கலித்தொகை பாடல் மூலம் உணரப்படுகின்றது. ஒரு

பெண்ணைப் பெற்றாளே அவள் அதன் நல்கூர்ந்தார் செல்வமகள் என அந்நூல் குறிப்பிடுகின்றது.

இம்மையிற் புகழும் மறுமையில் இன்பமும் ஆண்மக்களைப் பெற்றோருக்கே வாய்ப்பனவாகுமெனப் பண்டைத் தமிழுலகம் நம்பிற்று.

**"இம்மை யுலகத் திசையொடும் விளங்கி**
**மறுமை யுலகமும் மறுவின் றெய்துப**
**செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்**
**சிறுவர்ப் பயந்த செம்மலோர்"**[45]

என்னும் செய்யுட் பகுதி கொண்டு இதனை உணரலாம்.

இறந்தவர்களுக்காக அவர்தம் புதல்வர்கள் செய்யும் அறங்களால் இறந்தாரின் தீவினை கெடுமென்னும் நம்பிக்கை பழமைக் காலத்தில் நிலவிற்று இறந்தாரைக் குறித்துப் புதல்வர் செய்யும் கடன்களில் 'தென்புலத்தார் கடன்' என்பது மிகவும் சிறப்புடையதாகக் கருதப்பட்டது. இக்கடனைச் செய்யும் உரிமையும் பொறுப்பும் ஆண்மகனைச் சார்ந்திருந்தமையின் அவன்,

**"தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடனிறுக்கும் பொன்போற்**
**பொன்போற் புதல்வரப் பொற அ"**[46]

என புறநானூற்று வரிகளால் சிறப்பிக்கப்பட்டான்.

கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்த போது அவனொடு உயிர் துறக்க வந்த புலவர் பொத்தியாரைப் பார்த்து, புதழ்சால் புதல்வன் பிறந்தபின் வா" என்று கூறியதன் மூலம் ஆண்மகனுக்கான சிறப்பு காலங்காலமாய் தொடர்ந்து வருவது நோக்கத்தக்கதாகும்.

பெற்றோர் தம் மழலைச் செல்வங்களுடன் மகிழ்ந்திருக்கும் இன்பக் காட்சிகள் பலவற்றைச் சங்கஇலக்கியங்கள் காட்டுகின்றன. கணவன் மனைவியர் வாழ்க்கையில் உறவை வளர்த்து இன்பமூட்டிச் சிறப்பளிக்கும் வாயிலாகக் குழந்தைகள் விளங்குதளைச் சங்கச்

சான்றோர் நன்கு விளக்கியுள்ளனர். இதனை, பொருளீட்டச் செல்லும் தலைவனிடம்,

**"நின்னயந் துறைவி கடுஞ்சூற் சிறுவன்**
**முறுவல் காண்டலின் இனிதோ**
**இறுவரை நாடந்நீ இறந்து செய்பொருளே"**[47]

எனக் கேட்டுச் செலவழுங்கச் செய்கிறாள் ஒரு தோழி.

### குழந்தை வளர்ப்பு

அவரவரின் சமூகப் பொருளாதார நிலைக்கேற்பவே குழந்தை வளர்ப்பு அமைய முடியும். சங்க இலக்கியங்கள் செல்வக் குடும்பங்களிலும் எளிய குடும்பங்களிலும் குழந்தை வளர்ப்பு முறைகள் வேறுபட்டிருந்தமையை விளக்குகின்றன.

செல்வர்கள் தம் குழந்தைகளுக்கு நல்ல உணவு ஊட்டியும் நல்ல அணிகலன்களும் ஆடைகளும் அணிவித்து மகிழ்ந்தனர். குழந்தைகளை வளர்க்கச் செவிலியர் இருந்தனர். நிலக்கிழார் மனைகளில், அவர்தம் சிறார்கள் நடைவண்டி பழகிக் களைத்தபோது செவிலியர் பாலூட்டி நல்ல பஞ்சனைகளில் உறங்க வைத்தனர். தச்சர் புனைந்த மூன்று கால்களை உடைய சிறுதேரை உருட்டி விளையாடும் சிறார்கள் பற்றிக் குறிப்புக்கள் காணப்படுகின்றன. குருவியுருவம் பொறித்த சிறுபறையைத் தோளிற் கோர்த்த செல்வச்சிறார் பற்றிய குறிப்பொன்றும் காணப்படுகிறது.

செல்வச் சிறார்க்கு பொற்கிண்ணத்தில் தேனும் பாலும் கலந்து ஊட்டினர். தலைமயிரைக் கோதியும், கெஞ்சியும் உணவூட்டினர். தாய் தன் மகனை அன்புடனணைத்துப் பாலூட்டும் காட்சிகளைச் சங்க இலக்கியம் விரிவாகக் கூறியுள்ளது.

### மன்னர் பெண்பாற் புலவர்

பெண்பாற் புலவர்கள் பாடிய பாடல்கள் சங்க இலக்கியத்துள் பல உள்ளன. அவை மெல்லியல்பு வாய்ந்த பெண்களின் கவி

வல்லமையைக் காட்டுவனவாகும். புறநானூற்றில் ஐம்பத்தாறு பாடல்கள் பெண்கள் பாடியவை. ஔவையார் முப்பத்து மூன்று பாடல்களையும், மாறோக்கத்து நப்பசலையார் ஏழு பாடல்களையும், நக்கண்ணையார் மூன்று பாடல்களையும், மாற்பித்தியார் இரு பாடல்களையும் பாடியுள்ளனர். ஒக்கூர் மாசாத்தியார், காக்கைப் பாடினி நச்செள்ளையார் காவற்பெண்டு, குளம்பாதாயனார், குறமகள் இளவெயினி, தாயங் கண்ணியார், பாரி மகளிர், பூங்கணுத்திரையார், பெருங்கோப்பெண்டு, பேய்மகள் இளவெயினி, வெண்ணிக் குயத்தியார் ஆகியோர் ஆளுக்கொரு பாடலாகப் பாடியோராவர்.

மன்னர்களைப் பாடுவதைத் தொழிலாகக் கொண்டிருந்ததோடு, வாழ்க்கை பற்றிய பார்வையையும், தம் குடும்பம் நாட்டுக்கு ஆற்றிய வீரச் செயல்களையும் எடுத்துக்காட்டுவதில் அப்புலவர்கள் நாட்டமிக்கவர்களாகத் திகழ்ந்தனர். அக்காலப் பெண்பாற் புலவர் பெருமக்கள் அவர்தம் பாடல்கள் கூரிய காட்சிகள் சிறந்த மதிநுட்பம் கொண்டவையாகும். அவை கருத்து வளமும் சிந்தனைத் திறனும் பெற்றிருப்பவை ஆகும். மன்னர்கள் மீது பெண்பாற்புலவர்கள் கொண்ட அன்பும், மன்னர்கள் மீது தவறு செய்யும் போது இடித்துரைப்பதும், அப்புலவர்கள் மன்னர்களின் குடும்ப நெறி மற்றும் வாழ்க்கை நெறி ஆகியவற்றோடு கொண்ட உறவும் சங்கப் பாடல்கள் வழி அறியலாம்.

### ஔவையாரும் அதியமானும்

ஔவையார் சங்ககாலப் புலவர்களில் குறிப்பிடத்தக்கவர். சங்க காலத்திற்குப் பின் ஔவையார் என்ற பெயரில் சிலர் வாழ்ந்துள்ளனர். சங்க காலத்தில் வாழ்ந்த ஔவையார் நீண்ட நாள் வாழ்ந்தவராதல் வேண்டும் என்பதற்கு அருங்கனியை ஔவைக்கு அளித்த அதியமானின் அரிய நிகழ்ச்சி அடையாளமாகிறது.

சங்கப் பாடலில் ஐம்பத்தொன்பது பாடல்களைப் பாடிய ஔவையார், பெண்பாற் புலவர்களில் தலைமையானவர். புறநானூற்றில் மிகுதியாகப் பாடியவர் என்ற பெருமைக்குரியவர்.

அதியமான் நெடுமானஞ்சியின் அவைக்களத்தில் இடம் பெற்ற இவர், அஞ்சியின் குடும்ப அரசியல் வாழ்விலும் பங்கேற்றவர். அதியமானைப் பல பாடல்களில் சிறப்பித்ததோடு அவர் மகன் பொகுட்டெழினியையும் பாடலில் போற்றியுள்ளார். மூவேந்தர்களில் சேரமான் மாரி வெண்கோவும், பாண்டியன் கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதியும், சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியும் ஓரிடத்தே ஒரு சமயம் ஒன்றாகக்கூடி இருக்க, அத்தகைய அரிய காட்சியை வியந்து வாழ்த்திய பாடல் ஒன்றும், நாஞ்சில் வள்ளுவன் என்ற குறுநில மன்னனை வாழ்த்திய பாடல் ஒன்றுமாகப் புறநானூற்றில் ஔவையார் பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

ஔவையார், அதியமானிடம் அதிகம் உரிமை பூண்டவரெனத் தெரிகிறது. முதற்சந்திப்பே முரண்பாடாக இருந்திருக்க வேண்டும். அதன் பின்னர் அதியமானின் அகத்தை அறிந்து அவனிடத்தே அவைக்களப் புலவராயிருந்திருக்க வேண்டும். அதியமான் ஔவையாரைத் தங்க வைத்துப் பரிசினை அளிக்கக் காலம் தாழ்த்தவும், தன்னைப் பற்றி நன்கு அறியாதவன் மன்னன் என்று கூறித் தம் கருத்தை வன்மையாக்கியுள்ளார். கையிலே சிறுவர்கள் கருவிகளோடு காடு புகுந்தால் தச்சுக்குரிய மரங்கள் கிடைப்பது போல, எத்திசைச் சென்றாலும் அத்திசையில் சோறு கிடைக்காமலா போய்விடும் என்று வாயிற் காப்போனை விளித்துப்பாடுகிறார். இதனை,

**“வாயிலோயே வாயிலோயே**
**வள்ளியோர் செவிமுதல் வியங்குமொழி வித்தித்தாம்**
**உள்ளியது முடிக்கும் உரனுடை உள்ளத்து**
**…. …. …. …. …. ….**
**… …. …. …. …. ….**

**மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்**
**மழுவுடைக் காட்டகத்து அற்றே**
**எத்திசைச் செலினும் அத்திசை சோறே''**[48]

என்ற பாடல் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

அதியமான் அருங்கனியான நெல்லிக்கனி அளித்தபோது தன் மழலை போன்ற உரையினை மன்னன் அருள் சுரந்து கேட்டதாகச் சுட்டுகிறார். மன்னன் காலந்தாழ்த்திப் பரிசு தரக்கருதிய போதும் அவனை நன்கறிந்த நிலையில் அவன் தரும் பரிசு தமக்கு, யானை தன் கோட்டிடை வைத்த கவளம் போல பொய்யாகாமல் கிடைப்பதாகும் என்பதில் உறுதியாக இருந்தார். அதியமான் ஔவையார் நட்புறவும் உரிமையுணர்ச்சியும் நிலைபெறுமாறு அப்பெண்பாற் புலவரின் பாடல்கள் அமைந்துள்ளன.

போருக்கு மன்னனை ஊக்கியது பகைவரிடையே அதியமானின் படைவலிமையைக் கூறியது மன்னனுக்காகத் தூது போகியது மன்னன் இறந்தபோது அவனை எண்ணித் துயருற்றது முதலிய நிகழ்ச்சிகள் ஔவையாரின் பாடல்களில் நன்கு புலனாகிறது. நல்ல உவமைகளை இடத்துக்கேற்ற வகையில் படைத்துக் காட்டும் திறன்மிக்கவர் இப்புலவர். அதியமானின் வீரத்தையும், வள்ளன்மையையும் உவமை வழி விளக்கிக் காட்டியுள்ளார். அதியமான் நாட்டில் அடிக்கும்கோலுக்குக் கூட அஞ்சாது சீறியெழும் பாம்பு போன்று போர்க்கு அஞ்சாத இளமையும் வலிமையும் மிக்க வீரர் பலர் உள்ளனர் என்ற உவமையால் படை வலிமை மிகுந்த அதியனின் படைவீரம் பேசப்படுகிறது.

அதியமானின் தனிப்பட்ட வீரத்தை மேம்படப் புகழும் ஔவையார் அவனை எதிர்க்கும் பகைவர் ஒருவருமில்லை எனக் கூறுமிடத்து,

**''மறப்புலி யுடலின் மான்கணம் உளவோ**
**மருளின விசும்பின் மாதிரத்து ஈண்டிய**
**இருளு முண்டோ ஞாயிறு சினவின்**

….. …. …. …. ….

அரிமணல் ஞெமரக், கல்பக, நடக்கும்

பெருமிதப் பகட்டுக்குத் துறையும் உண்டோ”[49]

என்ற அடிகளில் உவமைகளை அடுக்கிக் கூறும் அழகு வியக்கத்தக்கது விறுணர்ச்சி தருவதாயும் அப்பாடல் விளங்குகிறது. இங்கு அதியனின் முத்திற வலிமையை எடுத்துக்காட்டி அவனது மறப்பண்பை வியந்துள்ளார். புலி உடல்வலிமையையும், ஞாயிறு புகழ்மேன்மையையும், எருது நெஞ்சுரத்தையும் கொண்டவன் என்று அதியனின் அருந்திறலாண்மையை அழகுற நோக்கியுள்ளார் புலவர். அதியமானிடம் பகை பூண்டிருந்த தொண்டைமானின் படைக்கொட்டிலுக்குச் சென்று பார்வையிட்ட ஔவையார் தொண்டைமானிடம் கூறுவதாக அமைந்துள்ள பாடல் வஞ்சப் புகழ்ச்சிக்கு சிறந்த எடுத்துக்காட்டாகும். பகை மன்னனின் போர்க்கருவிகளைப் புகழ்வது போலப் பழித்து, அவை போர்க்களத்தை இன்னும் அறியாதவை எனவும், அதியமானின் போர்க்களக் கருவிகளைப் பழிப்பது போலப் புகழ்ந்து, அவை பல போர் முனைகளைக் கண்டு நுனி சிதைந்தன எனவும் கூறியுள்ள நயம் பாராட்டுக்குரியது.

### மாறோக்கத்து நப்பசலையாரும் நலங்கிள்ளியும்

மாறோக்கத்து நப்பசலையார் பாடிய பாடல்கள் அவர் நல்ல புலமையாளர் என்பதைக் காட்டுவன. ஔவையார் அதியனிடம் நட்பும் உரிமையும் கொண்டது போல, இவர் சோழன் நலங்கிள்ளியிடம் நட்பு பாராட்டும் பண்புமிக்கவர். சிறந்த சொல்லாட்சியோடு கூடிய காட்சிகளை ஆழ்ந்து பாடியுள்ளார். இவரது பாடல்கள் தம்மை ஒத்த புலவரையும் மதிக்கும் பண்பாடு மிக்கவர் என்பதை உணர்த்துகிறது. ‘புலன் அழுக்கற்ற அந்தணாளன்’ எனவும், ‘பொய்யாநாவின் கபிலன்’ எனவும் இவர் கபிலரைச் சிறப்பித்துக் கூறியது போற்றற்குரியது.

இவர் புறநானூற்றில் பாடிய ஏழு பாடல்களுள் (37, 39, 126, 174, 226, 280, 383) கிள்ளிவளவனைப் பாடிய பாடல் நம் கண் முன்னே

அக்காட்சியை நிறுத்துவது போல் உள்ளது. மன்னன் இறந்துவிட அவன் மனைவியின் துயரத்தில் நம்மைப் பங்கேற்க வைக்கிறார் புலவர்.

தலைவன் மார்பில் பெரிய புண்ஏற்பட்டு அ.்.து ஆழமாக ஊடுருவியுள்ளது. அன்றைய நடுப்பகலில் ஒலி எழுப்பாத தும்பிகள் அப்பொழுதுதான் அங்கு வந்து ஒலி எழுப்புகின்றன. ஏற்றிய சுடர்விளக்கு அப்போதுதான் அணைந்தது; கண்களிலோ என்றைக்கும் இல்லாத உறக்கம் வந்து அலை மோதியது. கூகை தன் கூரையிலிருந்து குழறியது. "கணவன் பிழைப்பான் கவலை விடுக" என்று முதுபெண்டிர் கூறிய சொற்கள் பொய்யாயின. அவன் இறப்பது அநேகமாக உறுதியாகி விட்டது. இனி எவ்வாறு இதனை ஆற்றப் போகிறீர்களோ? பாணரே! விரலியரே! இங்கிருந்து வாழலாம் என்பதும் உங்களுக்கு இனி அரிதாகிப் போனது. அன்னவனைச் சாவு சூழ்ந்து கொண்டதே! மொட்டை அடித்து அல்லியரிசி உண்டு வாழும் கழிகல மகளிரைப் போல, இனிஎனக்கும் வாழ்தல் அரிதாயிற்று என மன்னனின் மனைவி கூற்றில் வைத்துப் பாடியுள்ள புலவரின் திறம் உள்ளத்தை நெகிழவைக்கிறது. இதனை,

> **"என்னை மார்பிற புண்ணும் வெய்ய**
> **நடுநாள் வந்து தும்பியும் துவைக்கும்**
> **நெடுநகர் வரைப்பின் விளக்கம் நில்லா**
> **… …. …. …. … …**
> **… … … … … …**
> **சிறு வெள் ஆம்பல் அல்லி உண்ணும்**
> **கழிகல மகளிர் போல**
> **வழி நினைந்து இருத்தல் அதனினும் அரிதே"**[50]

என்ற பாடல்மூலம் அறிய முடிகிறது.

மலையமான் சோழிய ஏனாதி திருக்கண்ணனைப் பாராட்டும் பாடலில் ஒரு புராணக் குறிப்பைக் காட்டி உவமைப்படுத்தியுள்ளார் மாறோக்கத்து நப்பசலையார். அசுரர் சூரியனை மறைக்கவும் உலகம் எங்கும் இருள் சூழ்ந்தது. திருமால் சூரியனை மீட்டுவந்து உலகுக்கு

ஒளியூட்டினான் என்ற கதையைக் கூறிச் சோழனுக்கு ஞாயிற்றையும், சோழனில்லாத காவிரி நாட்டிற்கு இருள் சூழ்ந்த உலகினையும் சூரியனைக் கொணர்ந்த திருமாலுக்கு மலையமான் ஏனாதி திருக்கண்ணனுக்கும் உவமைப்படுத்தியுள்ளார்.

அவியன் என்பான் மாறோக்கத்து நப்பசலையாரை ஆதரித்த வள்ளல்களுள் ஒருவன். அக்குறுநில மன்னனைக் கண்டு தம் வறுமை நீங்கினார் புலவர் இனி வறட்சியையும் பஞ்சத்தையும் வாழ்நாள் உள்ள வரை எதிர்க்கொள்ள மாட்டேன். ஏனெனில் அவியன் அளித்தவை வாழ்நாள் உள்ளளவும் போதுமானதாகும் என்கிறார். இப்பாடலில் வெள்ளி வடதிசை தோன்றாமல் தென்திசை தோன்றின் வறட்சியும் பஞ்சமும் மிகும் என்பதைக் குறிப்பினால் வைத்துப் பாடியுள்ளார்.

இமயத்தில் விற்பொறித்த சேரனை வீழ்த்திய கிள்ளி வளவனின் வெற்றியைப் பாடிய இப்புலவர், அப்பாடலின் அமைப்பை அருமையாக அமைத்துள்ளமையை காணலாம். எதிர்மறையாக முதலில் ஒவ்வொன்றையும் கூறி, இறுதியில் உடன்பாட்டில் சோழனின் வெற்றியைச் சிறப்பித்துள்ளார். சோழன் நலங்கிள்ளி முன்னோரின் சிறப்பையும் புகழையும் நோக்க நலங்கிள்ளியின் புகழ் சாதாரணமானது என்று பாடி இறுதியில் அம்மன்னனைப் போற்றியுள்ளார் புலவர். இதனை,

**“வாடா வஞ்சி வாட்டுநின்**
**பீடுகெழு நோன்தாள் பாடுங் காலே”**[51]

என முடித்திருப்பது முரணழகுடன் விளங்குகிறது.

சோழன் கிள்ளிவளவனைப் பாராட்டும் பிறிதொரு பாடலில் சோழனின் முன்னோர் கொண்டிருந்த அருட்பண்பும், கிள்ளியின் வன்மை உரமும் இருந்தவாறு என்னே என்று வஞ்சப் புகழ்ச்சியாகக் கூறிப் பாராட்டியுள்ளமை இவரது கவித்திறனுக்குச் சான்றாகும்.

**பொன்முடியாரும் குறுநிலமன்னரும்**

பொன்முடியார் பாடிய மூன்று பாடல்கள் புறத்தில் இடம் பெற்றுள்ளன. அம்மூன்றும் வெவ்வேறான பார்வையுடையவை. நொச்சி, தும்பை, வாகை என அமைந்த திணைகளில் குதிரை மறம், நூழிலாட்டு, மூதின் முல்லை என அவ்வத் திணைகளின் துறைகளில் பாடியுள்ள மூன்று பாடல்களுமே மும்மணிகளுக்கு ஒப்பவையாகும்.

புலவரின் திறம் தனித்து எண்ணத்தக்க வகையில் அப்பாடல்கள் அமைந்துள்ளன. மாறுபட்ட இரு காட்சிகளைக் காட்டி நிகழ்ச்சியைக் கவினுற வடிக்கும் நுட்பம் தெரிந்தவராய்ப் புலவர் விளங்குகிறார்.

குதிரை மறம் என்னும் துறையில் பாடிய பாடலில் ஒரு மாறுபட்ட காட்சி புலப்படுத்துகிறது. இரு குதிரைகள் தொடர்பானது அக்காட்சி. ஒரு குதிரை சாதாரண குறுநில மன்னனுடையது. வெறும் உழுந்தால் ஆகிய கஞ்சியை மட்டுமே உண்டு வளர்ந்தது. அணிபூட்டப் பெறாதது, எளிமையான தோற்றம் கொண்டது. பகைவருடைய படைமுகம் நோக்கி விரைகிறது. எப்படித் தெரியுமா? கடலலைகளைக் கிழித்துச் செல்வது போன்று விரைந்து செல்கிறது. இன்னொரு குதிரை, வேந்தனுடையது, நெய் கலந்த உணவைக் கவளமாக உண்டு கொழுத்து வளர்ந்தது. அணிகள் பல எடுப்பாகப் பூட்டப் பெற்ற அழகுடைய குதிரை. அது பகைக்களத்தே செல்லாது வெறுமனே ஒதுங்கி ஓரத்தில் நின்று கொண்டிருந்தது. எப்படித் தெரியுமா? கோயிலுக்குள் சென்று வழிபாடு செய்ய முடியாமல் ஓரத்தில் ஒதுங்கி நிற்கும் மாதவிலக்கான மங்கையைப் போல காணப்படுகிறது இதனை,

**“பருத்தி வேலிச் சீறூர் மன்னன்**
**உழுத்துஅதர் உண்ட ஓய்நடைப் புரவி**
**கடல்மண்டு தோணியின் படைமுகம் போழ**
**நெய்ம்மதி அருந்திய கொய்சுவல் எருத்தின்**
**தண்ணடை மன்னர் தாருடைப் புரவி**
**அணங்குடை முருகன் கோட்டத்துக்**

கலந்தொடா மகளிரின் இகந்து நின்றவ்வே"[52]

என்ற பாடல் வரிகள் மூலம் விளக்குகிறது.

மற்றொரு பாடலில் வீரன் ஒருவனின் வெற்றியும் வீர மரணமும் காட்டப் பெறுகின்றன. சிறுவயதில் பாலை உண்ண மறுத்தலால், தாயின் சிறுகோலுக்கு அஞ்சினான். இப்போது பல யானைகளையும் படைக்களத்தில் கொன்று குவித்ததோடு நில்லாது, பகைவா் படை நோக்கிச் சென்றான் தான் கையில் பிடித்த கேடயம் மண்ணில் கிடக்க அதன் மேலே விழுப்புண் பெற்ற மாா்போடு அதனை அறியாதவாறு பெற்றவாறு வீழ்ந்து கிடந்தான். பின்னுள்ள நிகழ்ச்சியால் முன் நடந்த இளமைக் காலத்து நிகழ்ச்சி மாறுபட்ட காட்சியாக அமைவதோடு பின்னோக்குக் காட்சியாகவும் சிறந்துள்ளமையை அறிய முடிகின்றது.

**நக்கண்ணையாரும் கோப்பெருநற்கிள்ளியும்**

பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையாா். கோப்பெரு நற்கிள்ளி என்னும் மன்னன்பால் காதல் கொண்டவளாவாள். இது பெண்பாற் கைக்கிளையாகும். புறநானூற்றில் கைக்கிளைத் திணையில் பழித்தல் துறை அமைந்த பாடல்கள் மூன்றும் நக்கண்ணையாரால் பாடப் பெற்றவை.

இவா் பாடல்கள் மூன்றும் அகமேயாயினும் பாடலின் அடிக்குறிப்புக் கொண்டு புறத்தில் இடம் பெற்றுள்ளன. இவரது பாடலில் காணும் செய்திகள் புறப்பாடல்கள் என ஐயுறவைப்பன. அவற்றை அகத்தில் சோ்ப்பதா? புறத்தில் சோ்ப்பதா? என்ற இருவேறு கருத்துக்கள் சில சமயம் ஆராய்ச்சியாளா்களால் அவ்வப்போது எண்ணப்பட்டுள்ளன. பெண்பாற் கைக்கிளையாக இருத்தலாலும் அடிக் குறிப்பில் பெயா் சுட்டப்பட்டதாலும் அப்பாடல் இருவேறு நிலையில் உணரப்படுகின்றன. ‘வீர கழலும் கரிய தாடியும் கொண்ட கோப்பெருநற்கிள்ளியை எண்ணி எனது கைவளைகள் கழன்றன. இதனைத் தாய் அறிவாளோ என்று அஞ்சுகிறேன். காதலனின் தோள்களைத் தழுவத் துடிக்கிறேன். ஆனால்

அவையோரைக் கண்டு அஞ்சுகிறேன். இந்த இருவேறு அச்சங்களும் என்னை அலைக்கழிப்பதால் நான் மயங்குகிறேன். நான் மயங்குவது போலவே ஊரும் மயங்கட்டும்' என்ற கருத்தமைந்த பாடலால் புலவரின் காதலுணர்ச்சி வெளிப்படுகிறது. இதனை,

> **"அடிபுனை தொடுகழல் மையணல் காளைக்கு என்**
> **தொடிகழித் திருவல்யான் யாய் அஞ்சுவலே**
> **அடுதோள் முயங்கல் அவைநா ணுவலே**
> **என்போற் பெருவிதுப் புறுக என்றும்**
> **ஒருபால் படாஅது ஆகி**
> **இருபாற்பட்ட இம் மையல் ஊரே"[53]**

என்ற பாடல் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றது.

முதல் பாடலில் காட்டிய அச்சம், அடுத்த பாடலிலும் தொடர்கிறது. அப்பாடலின் முதல் அடியில் தலைவனின் புறத்தோற்றத்தை, முன்னிறுத்திக் காதல் வேட்கையைக் கழறியுரைத்தவள், அடுத்த பாடலில் முதலிரு அடிகளில் தலைவனையும் தன்னையும் குறித்துள்ளமை, தலைவனிடம் கொண்ட மீதூர்ந்த காதலைக் காட்டுவதாய் உள்ளது.

அடுத்த பாடலிலும் தலைவனை முதல் நிறுத்தி அவனது வெற்றிச் சிறப்பை இருவித நோக்கில் காண முற்படுகிறார் புலவர். பெண்பாற் கைக்கிளைக்கும், பாடான் கைக்கிளைக்கும் முறையே பேராசிரியரும், நச்சினார்க்கினியரும் தம் தொல்காப்பிய உரையில் இவரது பாடல்களை மேற்கோளாகக் காட்டியிருப்பது நோக்கத்தக்கது.

**காக்கைப் பாடினியார் நச்செள்ளையாரும்**
**ஆடுகோட்பாட்டுச் சேரலாதனும்**

இப்பெண்பாற் புலவர் பதிற்றுப்பத்துள் ஆறாம் "பத்தைப் பாடிய சிறப்பிற்கு உரியவர். ஆறாம் பத்தின் பாட்டுடைத் தலைவனாக ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப்" பாடி ஒன்பது துலாம் பொன்னும்,

நூறாயிரம் காணமும் பெற்றார் எனப் பதிற்றுப்பத்தின் பதிகம் குறிப்பிடுகிறது.

குறுந்தொகைப் பாடலொன்றில் காக்கைக்கு மகளிர் பலியிட்டுப் போற்றிய செய்தியைச் சிறப்பாக இவர் குறித்ததால் காக்கைப் பாடினியார் என்ற அடைப்பெயர் இவரது பெயர் முன் சேர்ந்தது எனக் கருதுவர்.

இவர் புறநானூற்றில் ஒரு பாடலைப் பாடியுள்ளார். போர்களத்தில் சிறுவன் வீரமரணம் அடைந்ததை நேரில் போய்ப் பார்த்த தாயின் கூற்றில் வைத்துப் பாடியுள்ளார்.

நரம்புகள் தெரியும்படியும், உலர்ந்து வற்றிய தோளையும் கொண்ட தாய் ஒருத்தியிடம், அவள் மகன் பகைவரால் புறமுதுகிட்டு மாய்ந்தான் என வீரர் சிலர் கூறினர். அது கேட்டு உள்ளம் நொந்தாள் அத்தாய். அப்படி ஒருவேளை புறப்புண் பெற்று மடிந்திருந்தால் அவனுக்குப் பாலூட்டிய தனது மார்பகத்தை அறுத்து எறிவேன் எனக் கூறிச் சினந்தாள் அத்தாய். நேரே போர்க்களம் சென்றாள். கையில் வேலுடன் அங்குச் சென்றவள் மாண்ட உடல்களைப் புரட்டினாள். பிணக் குவியலிடையே தன் மகன் சிதைந்து விழுப்புண் பெற்று வீரமரணம் அடைந்ததைக் கண்டாள். அவள் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. அவனைப் பெற்ற பொழுது அடைந்த மகிழ்ச்சியைக் காட்டிலும் வீரமரணம் அடைந்ததைக் கண்டு அந்தத் தாயுள்ளத்தின் மகிழ்ச்சி இரட்டிப்பானது.

முதலில் அவலமாகத் தொடங்கும் நாடகக் காட்சி, அதன் விளைவாகத் தாயின் சூளுரை, இறுதியில் அவலமான மகனின் முடிவை அவலமாகவும் எண்ணாது, உணர்ச்சியின் புலம்பலாகவும் கருதாது மௌனமான உவகையை உள்ளத்திலிருந்து வெளிப்படுத்தும் மனநிலை ஆகியவை இப்பாடலுள் உணர்த்தப் பெறுகின்றன.

முதல் மூன்றடிகளும், அதன் பின்னர் உள்ள ஈரடிகளும் நாடகப் பாங்கு சார்ந்த உரையாடல் போல் காட்டப்பெறுகின்றன. அவளது சூளுரையாக

> **"மண்டமர்க் குடைந்தனன் ஆயின், உண்டவென்**
> **முலையறுத் திடுவேன்"**[54]

என்று கூறுவதில் அத்தாயின் வீர உணர்ச்சி விரைந்து வெளிப்பட்டுள்ளது. போர்க்களக் காட்சியில் வாள் கொண்டு தேடுவதைக் காட்ட வேண்டிச் "செங்களம் துழவுவோள்" என்ற தொடரால் நம் கண்முன்னர் அத்தாயைக் கொண்டுவந்து நிறுத்துகிறார். ஒரு தாய்மைக்குரிய இயல்பை இறுதியடி புலப்படுத்தி விடுகிறது.

எனவே,

> **"புறமுதுகிட்டு மடிந்திருந்தால் அது அவன் குற்றம் அன்று; அவனுக்குப் பாலூட்டும் போதே வீரத்தை ஊட்டி வளர்க்க மறந்தேனே எனத் தன் குற்றமாகக் கருதிய காரணத்தால் பால் தந்த மார்பகத்தை அறுக்க முனையும் எண்ணம் தாய்க்குத் தோன்றியது"**[55]

என்ற கருத்தை வ.சு.ப.மாணிக்கம் தருகிறார்.

### குறமகள் இளவெயினியாரும் ஏறைக்கோன்னும்

குறவர் குடியினராகிய இப்பெண்பாற் புலவர் தம் இனத்தைச் சார்ந்த ஏறைக்கோன் என்பவனை நன்கறிந்து பாராட்டியுள்ளார். உறவினர் தவறு செய்தால் அதைப் பொறுத்தலும், பிறரது வறுமை கண்டால் அதனை முன்னரே அறிந்து தீர்க்க முடியாமல் நாணுதலும், பிறரால் பழிக்கப்படாத வலிமையும், மூவேந்தரின் அவைக்கண் தலை நிமிர்ந்து நடக்கும் மேம்பட்ட பண்பும் கொண்டவன் ஏறைக்கோன் என அவனது பண்பு நலத்தைப் போற்றியுள்ளார் புலவர்.

இப்படிப்பட்ட பண்புகள் உன்னை போன்றோர்க்குத் தகுவன அல்ல என்று கூறி இடை நிறுத்தி, இயற்கைக்காட்சி ஒன்றைக் காட்டி அதன்பின்

என் ஏறைக்கோனுக்கே அவை தகும் என்ற கருத்தை முன் வைக்கிறார்.

இயற்கைக்காட்சியில் இப்புலவர் நாட்டங் கொண்டவர் எனத் தெரிகிறது. ஆண்மான், பெண்மானை அழைக்கும் குரலைப் புதரில் தங்கியிருந்து புலி கூர்ந்து கேட்கும்படியானது ஏறைக்கோனுக்குரிய மலை நாடு எனக் காட்சிப்பட வருணித்திருப்பது பாராட்டுக்குரியது.

**மாரிப்பித்தியாரும் வளமனையும்**

புறநானூற்றில் மாரிப்பித்தியார் பாடியதாக இரு பாடல்கள் உள்ளன. இவையிரண்டும் தாபத வாகை என்னும் துறையைச் சார்ந்தவை. இவர் பாட்டுடைத் தலைவனாக யாரைக் கருதிப் பாடினார் என்ற குறிப்பில்லை. இருப்பினும் இளைஞனாகத்தான் அவன் இருந்திருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

மன்னன் வளமனையையும் இளமையையும் துறந்து தவவாழ்வு கொண்டதை ஒரு பாடலுள் குறித்துள்ளார். துறவு மேற்கொள்வதற்கு முன்னும் பின்னும் ஆகிய இருநிலைகளை மன்னன் வாழ்வு புலப்படுத்துகிறது. இதனைப் புலவர் நுட்பத்தோடு காட்சியுடனும் கருத்துடனும் குறித்துள்ளார்.

அழகிய ஓவியம் போன்ற அரண்மனை, அரண்மனைக் கண் அழகு மகளிர், கண்ணைக் கவரும் பாவை போன்ற வனப்பினர்; செறிந்த வளையல்கள் அணிந்திருந்தனர். பெரு வீரனாகிய மன்னனைக் கண்டு காமுற்றனர். காமத்தால் வாட்டமுற அவர்தம் கைவளையல் நெகிழ்ந்தது: இப்படிப் பெண்களின் உள்ளத்தை அலைக்கழித்த அவ்வீரன் இப்போது எப்படி உள்ளான், தெரியுமா?

அம்மன்னன் காட்டகத்தின் கண் நீராடி, யானை கொணர்ந்து தந்த விறகால் தீ மூட்டி சடையை உலர்த்தித் தவம் மேற்கொண்டான் என்பதை அழகுறக் குறித்துள்ளார் பித்தியார். ஒருசமயம் காமத்தீயால்

மகளிர் மனம் கணன்றெழக் கைவளை நெகிழ உள்ளம் உருக்கியனவாக இருந்தவன், இப்போது இளமை துறந்து சடை உலர்த்தித் துறவுக் கோலம் பூண்டான்.

இளமைத் துறவுக்கு அவன் மனம் விரைந்தது. மணிமுடி துறந்தவனுக்குச் சடைமுடி விரைவில் வளர்ந்தது. காம விலங்கைக் கட்டுப்படுத்தத் தெரிந்தவனுக்குக் காட்டு யானை வசப்பட்டு வேண்டியன கொணர்ந்து தந்தது என நுட்பமாக அறிந்து கொள்ளத் துறவுக்கு முன்னும் பின்னுமாக சூழ்நிலைகள் விளக்கப் பெறுகின்றன.

மற்றொரு பாடல், முன்னர் அமைந்த காட்சியையே பின்னும் விரித்துரைக்கிறது. சடைமுடி தரித்த இளைய துறவி தளிர்களைக் கொய்கிறானே, இவன்தான் ஒருசமயம் சொல்வலையால் பெண்களை வசப்படுத்தியவன் ஆவான் என்று சுட்டுகிறது. இதனை,

**“கறங்குவெள் அருவி ஏற்றலின் நிறம் பெயர்ந்து**
**தில்லை அன்ன புல்லென் சடையோடு**
**அள் இலைத்தாளி கொடப்படி மோனே**
**இல் வழங்கு மடமயில் பிணிக்கும் சொல்வலை**
**வேட்டுவன் ஆயினர் முன்னே”**[56]

என்ற பாடல் விளக்குகிறது. முதற்பாடலில் மயக்கத்திலிருக்கும் பெண்களைக் காட்டிப் பின்னர் தவநிலை மேற்கொண்ட இளைய வீரனின் துறவு நிலையை நம்முன் அழகான காட்சியாக விளக்கிக் கூறுகிறார் புலவர்.

**வெண்ணிக்குயத்தியாரும் கிள்ளிவளவனும்**

மட்பாண்டம் செய்யும் குலத்தில் தோன்றிய வெண்ணிக் குயத்தியாரும் கிள்ளிவளவனைப் பாராட்டிப் பாடியுள்ளார். பெருஞ் சேரலாதனுக்கும் கிள்ளிவளவனுக்குமிடையே நடந்த வெண்ணிப் பறந்தலைப் போரில் பட்ட புறப்புண் நாணி வடக்கிருந்து உயிர்துறந்தான் சேரன்.

புறப்புண்ணுக்கு நாணி உயிர்த்துறந்த சேரன், கரிகாலனைவிடச் சிறந்தவன் என எண்ணி வியக்கிறார் புலவர். கரிகாலனை முதலீரடிகளில் புகழ்ந்துரைத்து, அதன்பின் வெண்ணிப் போரில் வெற்றி பெற்றதைக் கூறி இறுதியில் எதிர்பாராத விதமாக சேரனின் செயலைப் பாராட்டியிருக்கும் முறை வித்தியாசம் கொண்டதாகவும், வியப்பு உண்டாக்குவதாகவும் உள்ளது. கரிகாலனை விடச் சேரலாதனே சிறந்தவன் என்பதைச் சோழனின் முன்னிலையில் கூறும் மதி நுட்பம் பாராட்டதக்கது. இதனை,

**"வளியிரு முந்நீர் நாவாய் ஓட்டி**
**வளிதொழில் ஆண்ட உரவோன் மருக**
**களி இயல் யானைக் கரிகால் வளவ**
**சென்று அமர்க் கடந்தநின் ஆற்றல் தோன்ற**
**வென்றோய் நின்னினும் நல்லன் அன்றே**
**கலிகொன் யாணர் வெண்ணிப் பறத்தலை**
**மிகப்புகழ் உலகம் எய்தி**
**புறப்புண் நாணி வடக்கிருந்தோனே"**[57]

என்ற பாடல் மூலம் சோழர்களைவிட சேரர்களே சிறந்தவர்கள் என்று அறியமுடிகிறது.

ஆய்வுத் தொகுப்புரை

தமிழ்ச் சமுகத்தின் தொடக்கக் காலத்தில் தாய் வழிச் சமூகமே தலையானதாக இருந்தது. பின்னர் தந்தைவழிச் சமூகம் அதிகாரம் பெற்றபொழுது மகளிர்க்கான சமூகக் கட்டுப்பாடு நிலவியது. அக்கட்டுப்பாடு கற்பு என்னும் உயரியபண்பை போற்றுவதாகும். அதனைக் காப்பாற்றும் பொறுப்புள்ளவர்களாக பெண்களே இருந்ததையும் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

ஒருவனுக்கு ஒருத்தி என்ற சித்தாந்தம் பெரிதும் கடைபிடிக்க வில்லை என்றாலும் பெண்கள் தான் காதலித்தவனையே மணக்க விரும்பினர் அவ்வகை மணத்தில் தடை ஏற்படும் பொழுது உடன் போக்கு என்னும் நிகழ்வு சமுதாயத்தில் ஏற்பட்டது.

இது சமூகம் போற்றிய அறச்செயலாகவும் கருதப்பட்டது. அவ்வகையில் இவ்வியலில் சங்க இலக்கியங்களில் சுட்டப்படும் மகளிரின் வகைகளான நற்றாய், செவிலி, தலைவி, தோழி, பரத்தை, விறலி, கொண்டிமகளிர் போன்றவர்கள் சங்க இலக்கியப் பனுவல்களில், பொதுவாக அக இலக்கியங்களில் எத்தன்மை இடத்தை பெற்றுள்ளனர் என்பது ஆராயப்பட்டுள்ளது.

சங்ககால மகளிர் களவு வாழ்க்கையிலும் கற்பு வாழ்க்கையிலும் எத்தகைய பண்போடு விளங்கினர் என்பதைத் தலைவன் தலைவி உறவு, கணவன் மனைவி உறவு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு ஆராயப்பட்டுள்ளது.

மக்கட்பேற்றின் முக்கியத்துவத்தை தாய்மை அடைந்த பெண்கள் போற்றியதும் விளக்கப்பட்டுள்ளது.

மேலும் சங்க காலப் பெண்பாற்புலவர்கள் மன்னர்களோடும் சமூகத்தோடும் கொண்ட உறவை ஔவையாரும் அதியமானும், நக்கண்ணையாரும் கோப்பெருநற்கிள்ளியும், வெண்ணிக்குயத்தியாரும்

கிள்ளிவளவனும் போன்ற தலைப்புகள் மூலம் பெண்பாற் புலவர்கள் கொண்டு இருந்த சமூக உறவை சங்க பாடல்கள் வழி விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

**சான்றெண் விளக்கம்**

| | |
|---|---|
| 1. அகநானூறு, | பா-141 |
| 2. மேலது., | பா-301 |
| 3. சிறுபாணாற்றுப்படை, | பா.192-195 |
| 4. புறநானூறு | பா-331 வரி.19 |
| 5. மேலது., | பா.261 வரி.18 |
| 6. மேலது., | பா.280 வரி.14 |
| 7. மேலது., | பா.238 வரி.6 |
| 8. பெரும்பாணாற்றுப்படை., | பா-58 |
| 9. மேலது., | பா.304 |
| 10. பரிபாடல்., | பா.12 வரி9-25 |
| 11. அகநானூறு, | பா-16 |
| 12. மேலது., | பா-68 |
| 13. அகநானூறு, | பா.49 |
| 14. தொல்.பொருள் களவு., | நூ.-1070 |
| 15. அகநானூறு, | பா-49 |
| 16. குறுந்தொகை, | பா-84 |
| 17. அகநானூறு, | பா-17 |
| 18. தொல்.பொருள்., | மெய்.நூ.-25 |
| 19. அகநானூறு, | பா.82 |
| 20. கலித்தொகை, | பா.111 வரி 20-24 |
| 21. தொல்.பொருள் | களவு,நூ.106 |
| 22. குறுந்தொகை, | பா.3 |
| 23. தொல்.பொருள் களவு | நூ.123 |
| 24. தொல் பொருள் இளம்பூரணம், | ப.342 |
| 25. கலித்தொகை, | பா.37 |
| 26. குறுந்தொகை | பா.176 |
| 27. சிறுபாணாற்றுப்படை | வரி.13 |
| 28. அழகம்மை, சமூக நோக்கில் சங்க மகளிர் | ப-207 |
| 29. Feminist Dictionary | P -67 |

30. அழகம்மை, சமூக நோக்கில் சங்க மகளிர் ப.207
31. தொல்காப்பியம், நூ.1169
32. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல் முன்னுரை ப-7
33. மேலது., ப-19
34. அகநானூறு, பா.210
35. சாலை இளந்திரையன், சமுதாய நோக்கு, ப.75
36. தொல்காப்பியம் கற்பு நூ.1091
37. வ.சுப.மாணிக்கம், தமிழ்காதல் ப.127
38. குறுந்தொகை, பா.40
39. தொல்பொருள் இளம்.உரை. நு.149
40. அ.தட்சிணாமூர்த்தி, சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள் ப.48
41. புறநானூறு, பா.338
42. தொல்காப்பியம் களவு. நூ.25
43. புறநானூறு, பா.188
44. நளவெண்பா, பா.246
45. அகநானூறு, பா.66
46. புறநானூறு, பா.9
47. ஐங்குறுநூறு, பா.309
48. புறநானூறு, பா.206
49. மேலது., பா-90
50. மேலது., பா.280
51. மேலது., பா.391
52. மேலது., பா.299
53. மேலது., பா.83
54. மேலது., பா.278
55. வ.சுப. மாணிக்கம், சங்க நெறி, ப.98
56. புறநானூறு, பா.55
57. மேலது., பா.66

# இயல் -3

## அக இலக்கியங்களில் பெண்களின் வாழ்வியல் அறங்கள்

இலக்கியம் என்ற சொல் தொல்காப்பியத்திலோ சங்க இலக்கியத்திலோ இல்லை. இலக்கம் என்ற சொல் தொல்காப்பியத்தில் உள்ளது. இதனை,

**“எல்லே இலக்கம்”**[1]

என்னும் நூற்பா வரி குறிக்கிறது.

சங்க இலக்கியத்திலும் இலக்கம் என்ற சொல் உள்ளது. இலக்கை உணர்த்துவது இலக்கம் என்று பொருள் கொள்ளலாம். அது இலக்கியத்தைக் குறிப்பதாகவும் உள்ளது. இலக்கணம் என்ற சொல் தொல்காப்பியத்தில் உள்ளது. ‘இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பலின்’ என்ற கூற்றுப்படி தொல்காப்பியர் காலத்திற்கு முன்பு மிகுதியான இலக்கியங்கள் இருந்துள்ளன என்பது தெரிகிறது. சங்க இலக்கியங்கள் பற்றிய முதற் குறிப்பு இறையனார் அகப்பொருள் உரையில் உள்ளது.

சங்க இலக்கியம் தோன்றிய காலத்தில் உலகமொழி இலக்கியங்கள் தோன்றவில்லை. தமிழர்கள் இலக்கியத்திற்கு அடிப்படையாகவும் வாழ்க்கைக்கு அடிப்படையாகவும் அகம், புறம் என்ற இரு பகுப்புகளையும் முதலில் கொண்டனர். இதனால்தான், தொல்காப்பியர் அக வாழ்க்கைக்கு அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்பாட்டியல் போன்ற இயல்களைக் கூறியுள்ளார்.

சங்க இலக்கியமான எட்டுத்தொகையில் ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, கலித்தொகை என ஐந்து

நூல்கள் அகத்திணை பற்றியதாக அமைந்துள்ளது. பத்துப்பாட்டில் உள்ள முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, ஆகிய நான்கும் அகத்திணைப் பாடல்கள் ஆகும்.

சங்க இலக்கியத்தில் தலைவன், தலைவி, தோழி போன்றோரின் பெயர்கள் இடம் பெறாது. இதனை தொல்காப்பியர்,

**"மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்**

**சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறா அர்"**[2]

என்று குறிப்பிட்டுள்ளார். அகப்பாடல்கள் அனைத்தும் சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாதவை. தலைவன் பெயரோ,தலைவி பெயரோ தோழி பெயரோ எந்த அகப் பாடலிலும் இருக்காது. அகப்பாடல்கள் அன்பின் முதிர்ச்சியான காதல் பாடல்கள் ஆகும்.

**அறம்-பொருள் விளக்கம்**

பேரிலக்கியங்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருளைத் தருகிறது. பேரிலக்கியமான கம்பராமாயணம் போன்றவை நாற்பொருள்களையும் வலியுறுத்துகின்றன. சிற்றிலக்கியங்கள் நாற்பொருள்களில் ஒன்றையோ சிலவற்றையோ வலியுறுத்துகின்றன.

நாற்பொருள்களுள் முதலாவதாகச் சுட்டப்படும் அறமே எல்லாவற்றுக்கும் முதலாக அமைகிறது. அறம் என்பதற்கு நல்ல செயல்களின் தொகுதி என்பது பொருள். அறம்தான் மனித வாழ்வியலுக்கு உயர்வைக் கொடுத்து உதவுவதோடு வாழ்வியல் நலத்தை நிலை நாட்டுகிறது.

இலக்கியமாயினும் தனிப்பட்ட ஒருவரின் வாழ்க்கையாயினும் அனைத்தும் அறம் சார்ந்தே இயங்க வேண்டும் என்பதே விழுமிய குறிக்கோள். இளங்கோவடிகள் தனது காப்பியமான சிலப்பதிகாரத்தில் 'அரசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்றாகும்' என்னும் உண்மையை

வலியுறுத்துகின்றார். அறநெறியில் வாழாமல் தவறு செய்தால் அறமே தண்டிக்கும்.

பழந்தமிழர் இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றில் அறச்சிந்தனைகள் மிகுந்திருக்கின்றன. அக வாழ்வாயினும் ஆயினும் புற வாழ்வாயினும் நேரிய வழியினதாக இருக்க வேண்டும். முன்னோர் போற்றி வந்த வாழ்வியல் நெறிகள் அறங்கள் முதலியவற்றின் தொகுதியாகவே சங்க இலக்கியங்கள் காட்சி அளிக்கின்றன. இலக்கியங்கள் மனித வாழ்க்கையோடு, வாழ்க்கை சூழ்நிலையோடு நெருங்கியத் தொடர்பு உடையன, என்பது தெளிவு.

**ஐந்திணைகள்**

தமிழ் மக்களுடைய பழைய இலக்கண நூலாய் விளங்குவது தொல்காப்பியம். அந்நூல் மக்கள் வாழ்க்கையினை அகம், புறம் என இருவகையாகப் பகுத்து விளக்குகின்றது. ஒத்த அன்புடைய கணவனும் மனைவியும் கலந்து வாழும் குடும்ப வாழ்வினை அகவாழ்வென்றும், பல்லாயிரக்கணக்கான குடும்பங்கள் ஒன்றி வாழ்வதற்குரிய அரசியல் வாழ்வினை புறவாழ்வென்றும் வகுத்துரைத்தல் தமிழர் மரபாகும்.

‘அறம், பொருள், இன்பம்’ என்னும் இம்மூன்று பொருள்களையும் ‘மும்முதற்பொருள்’ எனத் தமிழர் பாராட்டி போற்றுவர். எல்லா உயிர்களாலும் விரும்பப்படுவது இன்பம். அவ்வின்பத்திற்குக் காரணமாக மக்களால் ஈட்டப்பெறுவது பொருள். நடுவு நிலையில் நின்று அப்பொருளையீட்டுவதற்குரிய ஒழுங்கு முறையே அறம் ஆகும். அறத்தினாற் பொருள் செய்து அப்பொருளால் இன்பம் நுகர்தல் மக்கள் வாழ்க்கை முறையாகும். இம்முறையினை திருவள்ளுவர் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என முப்பால்களாக வகுத்து விளக்குகின்றனார்.

அகவொழுக்கத்தை ஐந்திணை, கைக்கிளை, பெருந்திணை என ஏழு வகையாக விரித்து விளக்குவர். ஒத்த அன்புடைய ஒருவனும் ஒருத்தியுமாகிய காதலர் இருவர், இல்லத்திலிருந்து நல்லறஞ் செய்வதற்கு இன்றியமையாத அன்பின் வழிப்பட்ட உள்ளத்துணர்ச்சியே ஐந்திணை எனப்படும். தலைவன் தலைவி என்னுமிருவரும் தம்முட்கூடி மகிழ்தலும், உலகியற்கடமை நோக்கித் தலைவன் சில நாள் தலைவியைப் பிரிந்து செல்லுதலும், பிரிந்த தலைவன் குறித்த நாளில் வருவான் என்று தலைவி அப்பிரிவுத்துன்பத்தைப் பொறுத்து ஆற்றியிருத்தலும், தலைவன் குறித்த நாளில் வரத் தாமதிப்பின் ஆற்றாமை மிகுதியால் தலைவி இரங்குதலும், பின்னர் அவன் வந்தபோது அன்பினால் பிணங்குதலும் என ஐந்து பகுதியாக இவ்வகத்திணையினை விரித்து வைப்பர். இவ்வைந்து ஒழுகலாறுகளையும் முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் எனப் பெயரிட்டு வழங்குவர்.

அறம் என்னும் சொல் அறு என்னும் முதனிலை வினை அடியாகப் பிரித்து தீவினையை அறுப்பதெனப் பொருள்படும். இந்த மூலப் பொருளை உட்கொண்டே திருவள்ளுவர் அறியாமையால் விளைவது தீவினை, அறியாமையாவது இருள். அவ்விருளை அகற்றுவதே அறத்தின் பயன். மனதளவில் குற்றமில்லாமல் இருப்பதே அறம் என்று வலியுறுத்துகிறார். இதனை,

**“மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்**
**ஆகுல நீர் பிற”**[3]

என்னும் குறட்பாவால் அறியலாம்.

அறம் என்னும் சொல்லிற்குத் தமிழில் எட்டு வகையான பொருள்கள் வழங்கி வருகின்றன. பொதுவாக அது நற்பண்பு அல்லது நல்லொழுக்கம் என்னும் பொருளிலேயே தமிழ் இலக்கியங்களில் வழங்கப்பட்டுள்ளன.

**“வழக்கம், நீதி, கடமை, ஈகை, அறக்கடவுள், புண்ணியம் சமயம் போன்ற பொருள்களிலும் வழங்கி வருகின்றது”**[4]

என்று அறத்திற்கு விளக்கம் தருகிறார் க.த.திருநாவுக்கரசு

அறம் எனப்படுவது உலகில் வாழும் உயிர்களுக்கெல்லாம் உணவும், உடையும், இருக்க இடமும் தர வேண்டும் என்கிறது. மணிமேகலை காப்பியம் இதனை,

**“அறமெனப் படுவது யாது எனக் கேட்பின்**
**மறவாது இதுகேள் மன்னுயிர்க் கெல்லாம்**
**உண்டியும், உடையும், உறையுளும் அல்லது**
**கண்டது இல்”**[5]

என்று விளக்குகிறது.

முகத்தால் அன்பு கொண்டு இனிமையாகப் பார்த்து உள்ளத்தில் இருந்து வெளிப்படும் இனிய சொற்களை பேசுதல் அறம் என்கிறது திருக்குறள். இதனை,

**“முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி அகத்தானாம்**
**இன்சொ லினிதே அறம்”**[6]

என்று கூறுகிறது. அறமாவது ஒழுக்கம், வழக்கம், தண்டம் என்னும் மூவகைப்படும் எனக் கூறிய பரிமேலழகர் ஒழுக்கத்தை உயர்த்திக் கூறுகிறார்.

அறத்தினால் பொருளை ஈட்டி அப்பொருளில் இன்பம் நுகர்வது மக்கள் வாழ்க்கை என்று கூறுகிறார் தொல்காப்பியர் இதனை,

**“இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**
**அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்”**[7]

என்ற தொல்காப்பிய நூற்பா மூலம் உணரப்படுகிறது. அறத்தால் ஒருவர் பெறுவது இன்பம். எனவே இன்பத்திலிருந்து அறத்தை வேறாகக் காட்ட முடியாது என்பர்.

தமிழ் இலக்கியங்கள் அனைத்தும் தாம் எடுத்துக் கொண்ட பொருளை விளக்க வருமிடத்தெல்லாம் அறத்தைக் கைக் கொள்கின்றன. இதனை தொல்காப்பியம்,

**"உயிரினும் சிறந்ததன்று நாணே நாணினும்**
**செயிர் தீர் காட்சிக் கற்புச் சிறந்ததன்று எனத்**
**தொல்லோற் கிளவி புல்லிய நெஞ்ச மொடு"**[8]

என்னும் நூற்பாவில் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது.

எனவே ஆரம்ப காலத்தில் இருபாலர்க்கும் இன்ப நாட்டம் இயல்பே என்பதாலும், அது பிற்காலத்தில் மனையற வேட்கையாக இருவருக்கும் மாறும் இயல்பு கொள்வதாலும், களவு இறந்து கற்பொழுக்கம் நாடும் பெண்ணின் மன உறுதி சமுதாயத்தால் போற்றப்பட்டதாலும், களவு வாழ்க்கை ஒழுகலாறு இலக்கியத்தின் கருப்பொருளாகியது அவ்இலக்கியம் 'களவியல்' என்னும் பெயரும் பெற்றது.

**தனிமனித அறம்**

தனித்தனி மனிதர்களின் தொகுப்பே சமுதாயம் ஆகும். நீண்டகாலமாகப் பண்பட்டு வளர்ந்த அமைப்பு. இது பண்டைக்காலம் முதல் பண்பாடு, பழக்க வழக்கம் முதலியவற்றால் காலந்தோறும் பண்பட்டு வந்தது. மனிதமனம் தனித்தனிச் சிந்தனைகள் பல்வேறு நன்மைகள் நடைபெறுவதற்கும் தீமைகள் நடைபெறுவதற்கும் காரணமாக அமைபவை. மனதில் நற்சிந்தனைகள் தோன்றுகிறபொழுது நற்செயல்களும், தீய செயல்களை நினைக்கையில் தீமைகளும் நடைபெறுகின்றன. வினை விதைத்தவன் வினை அறுப்பான் என்னும் முதுமொழி இதை தெளிவுப்படுத்துகிறது.

இன்றைய நிலையில் இருந்து சங்க காலத்தை நோக்குகிற போது பல்வேறு நிலைகளிலும் பண்பட்டிருந்த சிறப்பானதொரு அற வாழ்க்கை சங்க இலக்கியங்களின் வழியாக அறிய முடிகிறது.

**“தனிமரம் காடாதல் இல்”**[9]

என்னும் பழமொழிக்கு ஏற்ப மனிதன் தனித்து நின்று எதையும் சாதிக்க இயலாது. சமூகத்தோடு சார்ந்து செயல்பட வேண்டும் எனப் பழமொழி இலக்கியம் வலியுறுத்துகிறது. தனிமனிதன் நினைக்கின்ற அறம் நல்லதாக இருக்கும் பொழுது சமூகம் முழுமைக்கும் பயன்தரும். அற நிகழ்வுகள் காலந்தோறும் கடைபிடிக்கப்பட்டு வருபவை. சொல், செயல், அனைத்திலும் அறம் போற்றப்பட்டு வந்த நிலையை நாம் சங்க இலக்கியங்கள் வாயிலாக காணமுடிகிறது.

தனிமனிதன் சார்ந்த அனைத்து நிகழ்வுகளிலும் அறம் எனும் நல்வினை சங்க இலக்கியங்களால் மெய்ப்பிக்கப்படுகின்றன. பிற உயிர்களிடம் அன்பு செலுத்துவதில் துவங்கி வாழ்வின் ஒவ்வொரு நிகழ்விலும் அறம் போதிப்பவையாக சங்கப் பாடல்கள் திகழ்கின்றன.

தனிமனித நிகழ்வுகள் அறம் வழுவிப் போகும் நிலை இருப்பின் தகுந்த உவமைகளால் சுட்டிக்காட்டி கூறி இடித்துரை வழங்குவதிலும் இவ்விலக்கியங்கள் அற வளர்ச்சிக்கு மிகச் சிறந்த பங்களிப்பு செய்து உள்ளன.

மனித வாழ்வைப் பற்றிப் பேசவரும் கணியன் பூங்குன்றனார்.

**“யாதும் ஊரே யாவரும் கேளிர்**
**தீதும் நன்றும் பிறர்தர வாரா**
**நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன**
**சாதலும் புதுவது அன்றே வாழ்தல்**
**இனிது என மகிழ்தன்றும் இலமே முனிவின்**
**இன்னா தென்றலும் இலமே மின்னோடு**
**… …. …. … … …**
**… …. …. … … …**
**சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே”**[10]

என்னும் பாடலில் உலக நிலையாமையைக் கூறுகிறார். காட்டாற்று வெள்ளத்தில் செல்லும் தெப்பம் போல வாழ்வும் ஊழ்வினை வழியாகச்

செல்லும் என்று குறிப்பிடுகிறார். அதனால் நற் செயல்கள் செய்யின் வாழ்க்கை நல்வழிச் சென்று முக்தி நிலை அடையும் என்பது இங்குக் கூறப்படுகிறது.

நற்செயல்கள் நடைபெறுவதற்கு அன்பும் அருளும் தேவை. நம்மை சார்ந்தோரிடம் உருவாவது அன்பு. நம்மைச் சாராத பிறரிடம் உருவாவதும் அன்பு. இரண்டாவது அன்பிற்குப் பொருளான நம்மைச் சாராத பிறரிடம் உருவான அன்பாக அருள் இரக்கமாகிய பண்பு ஏற்படும். அதனால் தான்,

**“அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கு இல்லை இருள்சேர்ந்த**
**இன்னா உலகம் புகல்”**[11]

என்று வள்ளுவர் கூறுகிறார்

அருள் நிறைந்த நெஞ்சினார்க்குத் துயரம் தரும் நரக உலகம் இல்லை என்று வள்ளுவர் பெருந்தகை கூறுவது குறிப்பிடத்தக்கது. அருள் நிறைந்த நல்வாழ்வு குடும்பத்தின் பிற கூறுகளான மக்கட்பேறு, இன்பம், ஈகை விருந்தோம்பல், பொருள் செயல்வகை, வினைச்செயல் வகை என்பவற்றிலும் தொடர்கிறது.

தனிமனிதனைப் பொறுத்த வரையில் நல்ல ஒழுக்கமே எதிர் பார்க்கப்படுகின்றது. மனிதன் அன்றாடம் பின் பற்ற வேண்டிய முக்கிய செயல்கள் வேத நூல்களில் கூறப்பட்டுள்ளன.

தனிமனித அறங்கள் சமுதாய அறங்களாக விரிவடையும் தன்மை மிக்கன. தனிமனிதர்களால் கடைபிடிக்கப்பட்டு ஒழுகப்படும் பல்வேறு அறங்கள் காலப்போக்கில் பலரால் கடைபிடிக்கப்படும்பொழுது அறங்களாகத் தோற்றம் பெற்று அது பண்பட்ட அறநிலையாக இடம் பெற்றுவிடுகிறது.

பிற உயிர்க்குத் தீங்கு செய்யாத அறங்கள், நல்லனவற்றையே நினைக்கவும், பேசவும், செயல்படுத்தவும் உருவாகி வளர்ந்து நிற்கும் அறங்கள் எல்லாம் இம் முறையின் வாயிலாக உருவானவையே ஆகும்.

**குடும்ப அறம்**

மனிதச் சமுதாயத்தின் உயிர்நாடியாக விளங்குவது குடும்பம் என்னும் மிகவும் பண்பட்டஅமைப்பாகும். உயரிய அறங்கள் எல்லாம் பிறக்கும் இடமாகக் குடும்பங்கள் திகழ்கின்றன.

கணவனும் மனைவியும் அறவழி நின்று நல்லவிதமாக நடத்தும் இல்லறத்தில் இருவருக்குமே இணையான பங்கு இருக்கிறது. அதனால் தான் வினை செய்து பொருளீட்டுவது ஆடவன் கடமை என்றும் வீட்டில் உள்ளோரைப் பேணுதல் பெண்களின் கடமை என்றும் சங்க இலக்கியக் குறுந்தொகைப் பாடல் வழி அறியலாம்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய திணைகளில் பாடப்பட்ட வாழ்க்கையை விவரித்துக் கூறும் பாடல்கள் தலைவன் தலைவியின் உள்ளார்ந்த அன்பினை வெளிப்படுத்துவனாக அமைகிறது.

ஒரு பிறவியில் கிடைத்த நல்ல கணவன் மறு பிறவியிலும் கணவனாகக் கிடைக்க வேண்டும் என நினைக்கும் தலைவியைக் குறுந்தொகை பாடல் மூலம் காணமுடிகிறது. இதனை,

> **“இம்மை மாறி மறுமை யாயினும்**
> **நீயா கியரென் கணவனை**
> **யானா கியர் நின் னெஞ்சு நேர்பவளே”**[12]

என்ற தலைவியின் கூற்று புலப்படுத்துகின்றது.

குடும்ப வாழ்க்கைக்கு ஆதாரமான திருமணம் என்னும் நிகழ்ச்சி சங்க காலத்தில் தமிழகத்தில் ஒருவகைப் பரிணாமமுற்றது. அப்பரிணாமத்தின் வரலாறு சங்கத் தமிழர்க்குத் தெரிந்துள்ளது.

தலைவன் பொருள் தேடிப் பிரியும் காலத்தில்தான் தலைவன் தலைவி இருவரின் மனதிலும் காதல் உணர்வுகள் மிகுகின்றன. எத்தனைப் பொருள் இருந்தாலும் கணவன் மனைவி இருவரும் சேர்ந்து வாழும் வாழ்வே சுகமான வாழ்வு என்பதனை,

**“மருவின் இனியவு முள வோ”**[13]

என்ற குறுந்தொகை பாடல் விளக்குகிறது.

மனைவியோடு சேர்ந்து வாழும் நாட்கள்தான் வாழ்ந்த நாட்களாகக் கணக்கில் கொள்ளப்படும். தனித்து வாழ்தலின் என்ன இருக்கிறது. அந்த நாட்கள் எல்லாம் வாழா நாட்களாகும். இதனை,

**“எல்லாம் எவனோ பதடி வைகல்**

**… …. …. … … …**

**… …. …. … … …**

**அரிவை தோளினைத் துஞ்சிக்**

**கழிந்த நாளிவண் வாழு நாளே”**[14]

என்னும் குறுந்தொகை பாடல் பதிவு செய்கிறது.

திருமணம் என்னும் குடும்ப நிலையே தெரியாத ஒரு காலம் தமிழக வரலாற்றில் இருந்திருக்க வேண்டும். அதனால் தொடக்க காலத்தில் சடங்குகள் விரிவாக இல்லை எனலாம். தமிழ் வரலாற்று ஆதிகாலத்தில் சடங்குகள் இருப்பின் திருமணம் எளிய நிகழ்ச்சியாகவே இருந்திருக்கும்.

கணவன் மனைவி சேர்ந்து நடத்தும் இல்லறத்தில் பொருளால் வறுமை ஏற்பட்டாலும் ஒரே ஆடையை இரண்டாகக் கிழித்து இருவரும் உடுத்துமளவு வாழ்க்கை நடத்தினர். வறுமையிலும் இணைந்து வாழும் வாழ்வே இனிதென வாழ்ந்திருந்தனர். இக்கருத்தினை,

**“ஒன்றன் கூறாடை உடுப்பவரே ஆயினும்**
**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை”[15]**

என்ற கலித்தொகை பாடல் படம் பிடித்து காட்டுகிறது.

தலைவனும் தலைவியும் சேர்தல் என்பது பெரும்பான்மை காதலின் விளைவாய் மணம் நிகழ்ந்திருக்க வேண்டும். ஏனெனில் அது பிறரால் ஏற்படுத்தப்பட்ட மணமன்று. குடும்பம், குலமுறை, இனம் இவற்றைப் பெருக்க வேண்டி நிகழும் திருமணம் மிகுதியும் அறியப்படவில்லை. சடங்கு இல்லாத மணமுறை தமிழரிடையே களவு எனப்பட்டது.

இல்லற வாழ்க்கையின் தலையாய குறிக்கோளாகக் குழந்தைப் பேறு கருதப்பட்டது. இம்மைப் புகழும், மறுமை இன்பமும் குழந்தையால் கிடைக்கும் என்று பெண்கள் நம்பினர். இதனை,

**“இம்மை உலகத்து இசையொடு விளங்கி**
**மறுமை உலகமும் மறுவின்றி எய்ய”[16]**

என அகநானூறு குறிப்பிடுகிறது. அதாவது பிறக்கின்ற குழந்தைகளே வாழ்க்கையின் பயன் என மதிக்கப்பட்டதைப் பல்வேறு சங்கப் பாடல்கள் மூலம் அறிய முடிகிறது. இந்த நடைமுறையே தமிழர்களின் பண்பாட்டில் காலம் காலமாக கடைபிடிக்கப்படுகிறது.

**களவிற்கான அறம்**

அக வாழ்க்கையில் ஆண், பெண் இருவரும் சமுதாய நெறிகளுக்குட்பட்டு காதல் அனுபவிக்க வேண்டும் என்று வகுக்கப்பட்ட கற்பொழுக்க விதி அறச்சார்புடையதாக இருக்கலாம். சிறப்பான வாழ்வு நெறியாகவும் இருக்கலாம். ஆயினும் அது செயற்கையானதாகவும் ஒருவரின் வாழ்வுரிமையைப் பற்றியதாகவும் மனித வாழ்க்கைக்கு ஆதாரமான இன்ப நாட்டத்தையே ஏற்க மறுப்பதாகவும் இருக்கும். சமுதாயம் உரிமையானதொரு மனையற ஏற்பாடுகள் செய்யும் வரை மனிதனுடைய இயல்பான உணர்ச்சிகள் இறுகிக் கிடக்க வேண்டியுள்ளது.

இயல்பானவை இயல்பாக வெளிப்படவே செய்யும். எனவே மனையறம் என்னும் கற்பு வாழ்க்கையே சிறந்த வாழ்க்கை என்று சமுதாயம் வகைப்படுத்தி வைத்திருந்த சங்க காலத்திலும் மண வாழ்க்கைக்கு முந்தைய களவு வாழ்க்கை இருக்கவே செய்தது.

இது சமுதாய அங்கீகாரம் பெறாமல் இருந்தது. இது சமுதாய அங்கீகாரம் பெறாமல், மறைவாக கள்ளத்தனமாகக் காதல் கொண்டதால் களவு என்ற பெயரும் பெற்றது. ஆனால் இக்களவியலும் கூட சமுதாயம் விதித்த அகவாழ்க்கை நெறியால் பெண்ணின் கற்பு வலியுறுத்தப்பட்டது.

> **"இளங்குமரியின் காதல் ஒழுக்கம் முதலில் பலருக்குத் தெரிய வாய்ப்பில்லையெனினும் இருவரின் இடைவிடாச் சந்திப்பும், தலைவன் பிரிவில் தலைவி நலனழிதலும் அனைவரும் அறிய வாய்ப்பாகின்றது. தலைவியின் காதல் ஒழுக்கம் பற்றி ஊர் மகளிர் பேசிக் கொள்வது அம்பல் எனவும், வெளிப்படையாகப் பேசுவது அலர் என்றும் சுப்புரெட்டியார் கூறுகிறார்."**[17]

இதன் மூலம் களவு காலத்தில் ஆம்பலும் தோன்றுவது இயல்பாகும். ஊரார் கூறும் அலரால் தலைவி சினந்து பேசுதலும் உண்டு. சினந்து பேசுதலால் தலைவன் மீது கொண்ட அன்பு குறைவது இல்லை. மாறாக ஊரார் பேசிய அலர் மறைய தலைவன் தன்னை வரைவு செய்ய வேண்டும் என்னும் எண்ணத்துடன் பேசுவாள். இத்தகைய களவுக்கான அறங்கள் கற்பொழுக்கம் நிகழ்வதற்கு வாயில்களாக அமைகின்றன எனலாம்.

களவொழுக்கத்தில் முடிந்து ஆணும் பெண்ணும் கற்பொழுக்கத்தில் ஈடுபட விழைவதையே சமுதாயம் விரும்பியது. அதுவே அறம் என்று கருதியது. ஒருவனிடம் களவிலே அனுபவித்த இன்பத்தை, பிறகு களவொழுக்கத்தைப் பலர் அறியக் கற்பு நெறியாக

முறைப்படுத்திக் கொள்வதில் ஆணைவிடப் பெண் முனைப்பாக இருப்பதைப் பெரும் அறம் என்று போற்றப்பட்டது.

காதலனை மணம் செய்விக்க வலியுறுத்தி தோழி மூலம் தலைவி தூது விட்டாள். திருமண வாழ்வில் உறுதியாக இருந்தாள். களவு வாழ்க்கையில் பெண்ணின் இத்தகைய மன இயல்பே கற்பு நிலை மன இயல்பாகப் போற்றப்பட்டது. இதற்குப் பொருத்தமாக தொல்காப்பியர் தோழியின் கூற்றில் அவளது தனிப்பட்ட வாழ்க்கையோ, அவள் பிறருடன் தொடர்பு கொண்டதற்கான செய்தியோ காட்டப் பெறவில்லை. பிற அகமாந்தர்களின் உணர்வுகளை, குணங்களைத் துல்லியமாக எடுத்துக் காட்டவும், அவர்களது சிக்கலைத் தீர்க்கவுமே படைக்கப்பட்டிருக் கின்றாள். தோழியின் கூற்றுக்கள் பெரும்பான்மையும் பிறரது விளக்கங்களுக்காகவே படைக்கப்பட்டிருப்பதாக அறிஞர்கள் கூறுகின்றனர்.

தோழி காலத்திற்கேற்பவும், ஆளுக்கேற்பவும் பேசுவதில் வல்லவள் என்பது சிலர் கருத்து. நட்புக்கு அறத்தை வரையறுத்துக் கூறுபவளாகத் தோழி காட்டப்பட்டுள்ளாள். இவள் தன்னலமற்றவள் என்றும், அறமற்ற செயலெனில் இடித்துரைப்பவள் என்றும், எச்செயலையும் சொந்த செயலாக எண்ணுபவள் என்றும், இடர்பட்டு இடர் தருபவளாகவும் படைக்கப்பட்டுள்ளாள். இப்படிப் பல நற்பண்புகள் தோழியின் செயல்களில் காட்டப்பட்டுள்ளதே தவிர எந்த இடத்திலுமே தலைவிக்கும், தோழிக்கும் பிணக்கு வந்ததாகவோ, கருத்து மாறுபாடு ஏற்பட்டதாகவோ அதனால் பிரிவுற்றதாகவோ காட்டப்பெறவில்லை.  இத்தனை உதவி செய்த தோழி பற்றித் தலைவியின் கூற்றாக எந்தப்பாடலும் இடம் பெறவில்லை.

எப்படியெனினும் அனைத்துப் பாத்திரங்களும் விளக்கப் பெற அவர்கள் வழி அறத்தைப் புகட்ட, தோழி உதவினாள். பிற பாத்திரங்களுக்கான வாழ்வியல் அறநெறிகள் அனைத்தும் அவளது

பண்பை எடுத்துக் கூறுவனவாக உள்ளன. தோழியென்றால் இப்படித்தான் இருக்க வேண்டும் என்னும் அறத்தை சங்க இலக்கியங்கள் மூலம் அறியலாம்.

**தலைவிக்கான அறம்**

அக இலக்கியமெனும் வட்டத்தின் மையப் புள்ளியாகத் திகழ்பவள் தலைவி. ஐந்திணை உரிப்பொருள்கள் தலைவியையே மையமாகக் கொண்டுள்ளன. அக இலக்கியத்தின் பிற படைப்புக்கள் தலைவியின் மன உணர்வுகளையே விளக்க முனைகின்றன. தலைவனின் மனப்போராட்டத்திலும் தலைவியின் நினைவே ஊடாடுகின்றது. பரத்தையின் கூற்றுக்களும் கூட தலைவியின் உணர்வுகளையே பிரதிபலித்துக் காட்டுகின்றன.

தலைவியின் கூற்றுகளுக்குள் பெரும்பாலானவை பிரிவுக்கால மனநிலையையே சித்தரிக்கின்றன. களவு நெறியில் ஊழ்வலியால் கூடிய இயற்கைப் புணர்ச்சிக்குப் பிறகு தலைவி தலைவனையே நினைந்த வண்ணம் இருக்கிறாள். இந்நிலையில் தலைவியின் மனநிலையும் அவளுக்குரிய இலக்கணத்தை உணர்த்துவனவாக உள்ளன.

தலைவி களவுநிலையில் காதலனைப் பிரிந்தால் உயிர் நீங்கும் என எண்ணுவாள். காதலனைக் காணுதலே பெரும் பேறாக எண்ணுகின்றாள். அவனைக் காண இயலவில்லையெனில் மெல்ல மெல்ல உயிா் இல்லாததாகி விடுமா என்று தோழியிடம் கேட்கின்றாள். அவனைப் பிரிந்ததனால் கொண்ட தனிமையும், அன்னையின் மாறுபட்ட பார்வையும், துன்பமிக்க மாலைப் பொழுதும் தன்னை வருத்துகின்றன என்கின்றாள். அப்படியிருக்கக் களவில் ஈடுபட்ட தலைவி எப்படியிருக்க வேண்டும் என தோழியிடம் வினவுகின்றாள். இதனை,

**“பெருங்கல நாடன் பிரிந்த புலம்பும்**
**உடன்ற அன்னை அமரா நோக்கமும்**
**….. ….. … ….. … …. ….   ….**

**….. ….. … ….. … …. …. ….**

**அனைத்தும் அருட நன்று நலிய உஞற்றி**

**யாங்ஙனம் வாழதி என்றி – தோழி”**[18]

என்ற அகநானூறு பாடல் இதனை விளக்குவது குறிப்பிடத்தக்கது.

குறுந்தொகைத் தலைவியொருத்தி பிரிவில் தன் உயிர் நீங்கும் என்று நினைத்து புலம்புவதை,

**“யாமெங் காதல் காணே மயிற்**

**செறிதுனி பெருகிய நெஞ்சமொரு**

**பெருநீர்க் கல்பொரு**

**சிறு நுரைபோல மெல்ல மெல்ல**

**இல்லொகுதுமே”**[19]

என்ற பாடல் வெளிப்படுத்துகின்றது. எனவே தலைவனை பிரிந்த தலைவி நீண்ட நாள் தனித்து வாழ்வதை விரும்பவில்லை என்பது புலனாகின்றது. இதுவே தலைவன் பிரிவு என்பது உயிர்ப் பிரிவிற்கு இணையானது என்பது இக்கூற்றுக்கள் உணர்த்தும் அறம் ஆகும்.

தலைவி தலைவனைப் பற்றிக் கூறும் போது தன்னை நுகர்ந்து மறந்து விட்டதைத் தலைவி தன்னை முடித்துப் போட்ட பூவை போன்று, நினைப்பதாக ஒப்பிட்டு நோக்குகின்றாள். இது தலைவன் இன்பம் கருதித் தன்னுடன் உறவு கொண்டு பின் மறந்து விட்டான் என்று தலைவி கருதுவதாக உள்ளது.

தலைவன் மனம் இரும்பைப் போன்றது. எனவே, அவன் மனதில் ஈரம் இல்லை என நினைப்பது பெண்களுக்கே உரிய பேதமை அறம் ஆகும். இதனை,

**“பெருங்கை அற்ற நெஞ்ச மொடுநத் துறந்து**

**இரும்பின் இன்னுயிர் உடையார் போல”**[20]

என்ற அகநானூறு பாடல் வழி அறிய முடிகிறது.

தலைவி ஆற்றாமை மிகுதியால் தூதுவிடும் நிலைக்குத் தள்ளப் படுகின்றாள். அலர்தூற்றலைப் பொறுக்க இயலவில்லை. உலகின் செயலை எதிர்க்கும் துணிவு பிறக்கிறது. பொதுவாக பிற பிரிவுப் பாடல்கள் தோழியை நோக்கியதாக அமையும். காமம் மிக்க கழிபடர் கிளவி என்னும் துறையில் காணப்படும் தலைவியின் அவலம் தோழியின் துணையை நாடாது இயற்கை பொருட்களான அலை, கடல், மலை, ஞாயிறு, திங்கள், ஆகிய உயிரற்ற பொருள்களை விளித்து அழைப்பதாக அமைகின்றது. ஆற்றாமை மிகுதியாகும் போது நெஞ்சொடு கிளத்தல் தலைவியிடம் காணப்படுகின்றது. அகப்பாடல்கள் பலவற்றில் தலைவியின் இத்தகைய செயல்கள் காணப்படுகின்றன.

சான்றாக ஒரு பாடலில் அலவனை தலைவி தூது விடுவதாகக் கூறப்பட்டுள்ளது.

**“கானலும் கழறாது கழியும் கூறாது**
**தேனிமிர் நறுமலர்ப் புன்னையும் மொழியாது**
**ஒரு நின்னல்லது பிறிதியாது மிலனே**
**….. ….. … ….. … …. …. ….**
**….. ….. … ….. … …. …. ….**
**நின் உறு விழுமம்களைத் தோள்**
**தன் உறு வழுமம் நீந்துமோ! எனவே”**[21]

என்று அந்த சங்கப் பாடல் கூறுகிறது.

எனவே களவு காலத்தில் அன்பின் மிகுதியால் பிரிவு ஆற்றாமையில் உடல் மெலிந்தும் உள்ளம் வருந்தியும் தன் உயிருக்கு நிகரான தலைவனை அடைவதற்காக தனக்குள்ளேயே ஒரு வாழ்க்கைப் போராட்டம் நடத்தி களவு அறத்தைக் காப்பாற்றுகின்றாள் என்பதை பல அகப்பாடல்கள் வழி அறிய முடிகிறது.

தலைவியின் இவ்வாற்றாமை நிலை தலைவனோடு இணைந்து வாழத் துடிக்கும் அவளது உள்ளத்தையே புலப்படுத்துகின்றது.

**தலைவியின் அறச்செயல்கள்**

எல்லாத் தலைவியரும் தம்முடைய தலைவர் சிறப்பாக வாழ வேண்டும் அவருடைய பரம்பரை வாழ வேண்டும் என்று வேண்டுகின்றனர். இதனை,

**"பல் இதழ் நிலமொரு நெய்தல் நிகர்க்கும்**
**தண்துறை ஊரன் கேண்மை**
**வழிவழிச் சிறக்க என வேட்டேமே"**[22]

என்ற ஐங்குறுநூற்றிலுள்ள மருதப் பாடல் மூலம் அறிய முடிகிறது.

இந்நிலவுலகத்தில் ஆற்றலுடைய செயல் அனைத்திற்கும் ஆடவர் காரணம், அதற்கு பின்னணியாக நிற்பவர் பெண்டிர் என்பதனை குறுந்தொகையில்,

**வினையே ஆடவர்க்கு உயிரே, வாணுதல்**
**மனையுரை மகளிர்க்கு ஆடவர் உயிர் என**
**நமக்கு உரைத்தோரும் தாமே**
**அழாஅல் தோழி! அழுங்குவர் செலவே"**[23]

என்னும் பெருங்கடுங்கோ பாடல் மூலம் அறிய முடிகிறது.

பல பிறவிகளிலும் ஒன்றாக வாழ வேண்டும் என்று தலைவி விரும்புகிறாள். தலைமகன் பொருள்வயிற் பிரிந்தான். திரும்ப வருவதற்கு நாள் ஆகின்றது. அதனால் இவள் அழகு குறைகிறது. அறிவு மயங்குகின்றது. நோய் பெருகுகின்றது. தலைவன் பிரிவுத்துயர் காரணமாக இவள் இறப்பதற்கும் துணிகிறாள். ஆனால் இறந்தால் தலைவனோடு மறுபிறவியில் எவ்வாறு வாழ முடியும் என்று தலைவி தயங்குகிறாள். தலைவியின் நிலையை சங்க இலக்கியப் பாடல் வெளிப்படுத்துகின்றது.

**தோழிக்கான அறம்**

மணம் புரிவதற்கு முந்தைய நிலைகளில் தலைவன் எப்படிப்பட்டவனாக இருக்க வேண்டும், தலைவி எப்படிப்பட்டவளாக

இருக்க வேண்டும், தோழி எப்படி நட்புக்கு இலக்கணமாகத் திகழ வேண்டும் என்பனவற்றைக் களவுப்பாடல்களின் பெரும்பாலானவற்றில் இவர்கள் மூவரையும் திரும்பத் திரும்ப அமைத்துக் காட்டுகின்றனர் சங்கப் புலவர்கள்.

களவுப் பாடல்களில் கூற்று நிகழ்ந்துபவர்களாக தலைவன், தலைவி, தோழி ஆகியோா் திகழச் சிறுபான்மையாக செவிலியும், கண்டோரும், தாயும் இடம் பெறுகின்றனர்.

கூற்றுக்குரியவரின் பாடல்களில் பார்க்கும் போது களவு வாழ்வுக்கான அறக் கருத்துக்களைக் பெரும்பான்மையாக கூறுபவளாக தோழியே அமைகிறாள்.

அகத்திணை மாந்தர்களிலேயே தனிச்சிறப்பு பெறுபவள் தோழிதான். களவு, கற்பு என்னும் இரு நிலைகளிலும் தோழி பெரும்பங்கு ஏற்பவளாக இருக்கின்றாள். தலைவன் தலைவி வாழ்வின் அனைத்துத் நிலைகளிலும் இடரின்றிச் செல்ல வழி வகுக்கின்றாள்.

களவை வரைவாக்கும் வரைவுகடாதல்துறை, களவு கற்பு இணையும் அறத்தொடு நிற்றல் துறை, சூழல் தெளிவற்ற நிலையிலும் நன்னெறி நாடலின் விளைவாக முடுக்கி விடும் உடன் போக்குத்துறை ஆகிய வாழ்வின் இன்றியமையாத திருப்புமுனைகளிலெல்லாம் தோழியே ஆதிக்கம் செலுத்துகின்றாள். தலைவி துன்புறும் போது ஆற்றுப்படுத்தி நற்செயல்களை விளக்க வரும்போதெல்லாம் அறத்தொடு நிற்றல் என்னும் நிலையில் தோழி இருப்பதால் அறம் என்னும் சொல் அவ்விடங்களால் பயன்படுவது குறிப்பிடத்தக்கது.

**“அறம் சாரான் மூப்பே போல்”**[24]

எனும் கலித்தொகை பாடலில் தன்னைப் பிரிந்திருக்கும் தலைவன் அறமில்லாதவன் என்றும் தம்மை வருந்தச் செய்வதால் தலைவன் அறன்

இல்லாதவன் என்றும் தலைவி கூறுவதால் அறம் ஒழுக்கமாகப் போற்றப்பட்ட நிலையை அறிய முடிகிறது. இதனை,

திறக்குறள் அன்பை அறமாக கூறுகிறது.

**“என்பிலதனை வெயில் போலக் காயுமே**

**அன்பிலதனை அறம்”**[25]

என்று அறத்தை வள்ளுவர் அன்பாக போற்றி கூறுகிறார்.

இலக்கியங்கள் எல்லாம் செயல்களின் மூலமாகவே அறத்தைச் சொல்ல வருகின்றன. இவை எல்லாம் நற்செயல்களை மையமாக கொண்டு அமைந்திருக்கின்றன. இதனை

**“ஈதல் அறம்”**[26]

என்கிறார் ஔவையார்.

சமணர்கள் மற்ற உயிர்களுக்குச் சிறிதும் துன்பம் தராத இயல்புடையவர்கள். தாங்கள் நடக்கும் பாதைகளை மயில் பீலியால் சுத்தப்படுத்திச் சொல்லும் தன்மை உடையவர்கள். தமிழகத்தில் செழித்து வளர்ந்த சமண பௌத்த சமயங்கள் அறச் சிந்தனைகளையே பெரும்பாலும் வலியுறுத்தி அமைகிறது.

செவிலித்தாய் அறம்

நற்றாயின் கூற்றுக்களைவிட செவிலித்தாயின் கூற்றுகள் மிகுதியாக சங்கப்பாடல்களில் உள்ளன. அடிப்படைக் காரணம் தலைவியை வளர்த்தவள் செவிலித்தாய்தான். தலைவியுடன் இருந்து தலைவியின் செயல்கள் அனைத்தையும் கூர்ந்து பார்த்து உணர்ந்தவள் செவிலித்தாய் அதனால் தான் செவிலித்தாய் கூற்றுக்கள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. அதிகமாகவும் உள்ளன.

சிறுவயதில் தலைவி கழங்கு வைத்து விளையாடிக் கொண்டிருந்தவள் பின்னர் பருவம் எய்தினாள். அவளுடைய வளர்ச்சி நிலையில் காதலும் வளர்ந்தது. காதலனோடு உடன் போக்கு சென்றாள். அச்செயலை மிகுதியான வருத்தத்தோடு நினைப்பவள் செவிலித்தாய். இதனை,

**"கிளியும் பந்தும் கழங்கும் வெய்யோள்**
**அளியும் அன்பும் சாயலும் இயல்பும்**
**முன்நாள் போலான் இறீஇயர் உன் உயிர் என**
**….. ….. … ….. … …. …. ….**
**….. ….. … ….. … …. …. ….**
**….. ….. … ….. … …. …. ….**
**செல்வழிச் செவ்வழி மெய்ந்நிழல் போல**
**கோதை ஆயமொடு ஓரை தழீஇ**
**தோடு அமை அரச்சிலம்பு ஒலிப்பு அவள்**
**ஆடு வழி ஆடுவழி அகலேன் மன்னே…."**[27]

என்ற பாடலின் வழி வெளிப்படுத்துகின்றாள்.

கிளி, கழங்கு, பந்து முதலிய விளையாட்டுப் பொருட்களை விரும்பியவள் இப்போது அருள், அன்பு, மென்மை, சாயல் முதலியவற்றால் வேறுபட்டவளாகக் காணப்படுகின்றாள். அவளின் செயலை அறிந்து கொள்ளாதவளாக இருந்துவிட்டேன். எனது உயிர் நீங்குக என என்னையே நொந்து கொள்பவள் ஆகிவிட்டேன் என்று செவிலி புலம்புகிறாள். முன்பு ஒரு முறை கன்றைப் பார்க்கும் பசுவைப்போல் அவள் தலைவியைப் பார்த்துப் பார்த்து நெற்றியைத் தடவி அணைத்துக் கொண்டபோது அவள் மார்பின் இடையே தோன்றிய வியர்வை உண்டாகப் பலமுறை தழுவிக் கொண்டாள். அத்தகைய நிலை இப்பொழுது தலைவியின் செயலால் நீங்கிற்று

மழையில்லாததால் வாட்டமுற்ற மான் கூட்டங்கள் வற்றிய மரம் செடிகளைச் சுவைத்துப் பார்க்கும். காட்டின் வழியே என் மகளை அழைத்துச் சென்ற வலிமைமிக்க தலைவன் அவளைப் பாராட்டி நிழல் தோறும் தங்க வைத்துச் செல்ல துணிந்ததை நான் முன்பே அறிந்திருந்தால் அவள் தந்தையின் வீட்டில் இருந்த போதே உடலை விடாது பின்பற்றும் நிழல் போல அவள் செல்லுமிடமெல்லாம் தொடர்ந்திருப்பேன்.

தன் மகளிடம் தலைவி நிலைபற்றி எதைக்கேட்டாலும் சரியான உண்மையைப் பெறமுடியாது என்பதும் செவிலித்தாய்க்குத் தெரியும். ஆனால் தலைவி காதல் வயப்பட்டு விட்டாள் என்பதை இயல்பான தன் பெண்மை அறிவாலும் உணர்வாலும் தனது வயதின் அனுபவத்தாலும் புரிந்து கொள்ளும் ஆற்றல் உடையவள் செவிலி. எனவே அவர் தம் களவுக் காதல் எதுவரை சென்றிருக்கிறது, அவளின் மனம் கவர்ந்தவனின் ஊரெது நாடெது செல்வமும் புகழும் குடிச்சிறப்பும் ஆண்மையும் கல்வியும் எத்தகையன என்பன பற்றியெல்லாம் அறிய கடமையும் பொறுப்பும் மிக்க செவிலித்தாய் தோழியை அணுகுவாள். இக்காதல் வாழ்வில் ஈடுபட்டிருக்கும் முதன்மைப் பாத்திரமான தலைவிக்குத் தலைவனைப் பற்றி எல்லாம் தெரிந்திருக்காது. தெரிந்திருந்திருந்தால் மனத்தைத் தந்திருக்க மாட்டாள். விதிப்பயனால் இளமைத் துடிப்பின் இயல்பினால் நேர்ந்த களவு இது. இவையெல்லாம் செவிலியின் எண்ணங்களாய் அமைகின்றன. எனவேதான் உணர்வு வயப்பட்டுக் காதலில் மூழ்கியிருக்கும் தலைவியைக் கேட்பதை விட வாழ்வில் பக்குவம் பெற்ற அச்செவிலித்தாய் தொலைவில் நின்று அந்நாட்டத்தில் ஈடுபடாத காட்சியாளராய் மட்டுமே இருக்கும் தோழியை அணுகுகின்றான்.

காதல் வயப்பட்டிருக்கும் தலைவிக்குத் தலைவனின் குறைகள் கூட நிறைகளாய்த் தான் தெரியும். அதுதான் உலக இயல்பு. எனவே தோழியிடம் கேட்டால் எல்லா உண்மைகளும் வெளிப்படும் என்ற கருத்தினை உடையவளாய்ச் செவிலி தோழியை அணுகுகின்றாள். தொல்காப்பியம் களவியலில் செவிலிக்குரிய கிளவியை உணர்த்தும் விதமாக,

**“கட்டினும் கழங்கினும் வெறியென இருவரும்**
**ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்**
**ஆடிய சென்றுழி அழவு தலைவரினும்**
**… …. …. …. …. ….**
**போக்குடன் அறிந்த பின் தோழியொரு கெழீஇக்**

கற்பின் ஆக்கத்து நிற்றற் கண்ணும்”[28]

என்று செவிலியுடன் தொடர்புபடுத்தி அறத்தொடு நிற்றலைப் பற்றி கூறப்பட்டுள்ளது.

செவிலியின் இச்செயல்கள் அவளை அறத்தொடு நிற்குமாறு உணர்த்துவதாகும். செவிலி அறத்தொடு நிற்றல் குறித்துத் தொல்காப்பியர் பொருளியலில் கூறியுள்ளார்.

“உற்றுழியல்லது சொல்ல லின்மையின்

அப்பொருள் வேட்கைக் கிழவியி னுணர்ப”[29]

என்ற நூற்பா மூலம் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்பதன் முன்னரே செவிலி தலைமகளது களவொழுக்கத்தைக் குறிப்பினால் கூர்ந்துணர்ந்து தலைமகளிடம் தோன்றும் இவ்வேறுபாடு எதனால் வந்தது எனத் தோழியை நோக்கி கேட்டு அறிவாள் என்பது இந்நூற்பாவால் உணர்த்தப் பெறும் செய்தியாகும். இதன் வாயிலாக இயல்பாகவே செவிலிக்குத் தலைவியின் களவு வாழ்க்கை கற்பு வாழ்க்கையாக மலர வேண்டும் என்னும் விருப்பமும் முயற்சியும் இருந்தன என்றும், அவையே செவிலி அறத்தொடு நிற்றலுக்குத் தூண்டுதலாக அமைந்தன என்றும் கூறலாம். மேலும் உடன்போக்கு வரைந்த தலைவன் தலைவியை மீண்டும் அழைத்து திருமணச் சடங்குகள் செய்து ஊரார் பேசிய அலரை பொய்பித்துப் போகச் செய்ய வேண்டி நற்றாயிடம் அறத்தொடு நின்று தலைவியின் குடும்பமானம் காத்து நிற்கும் தன்னலமற்ற மாந்தராக செவிலி திகழ்வது நல்ல அறச் செயலுக்கு சான்றாகும்.

பொதுவாக உடன்போக்கு வரைந்த தலைவன் தலைவியை அழைத்து வந்து மணம் செய்வது பெற்றோரின் கடமையாகும். அதுவே தமிழ்ப்பண்பாட்டின் இலக்கணம் ஆகும். கொடைக்குரிய மரபினர் பெண்ணை கொடுக்க கொள்ளுவதற்குரிய மரபினர் பெற்றுக் கொண்டு திருமணம் செய்து கொள்ளுவதை பிற்கால இலக்கணமான நம்பியகப் பொருளில் கூறப்பட்டுள்ளது.

"கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்
கரணமொடு புணர்வதுதான் கற்பெனப்படுவது"[30]

என்று அப்பாடல் விளக்கி உள்ளது குறிப்பிடத்தக்கது.

மேற்கூறப்பட்டுள்ள கருத்துக்களின் மூலம் செவிலியின் வாழ்வியல் அறங்கள் பற்றி சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

நற்றாய் அறம்

சங்க அகப்பாடல்களில் காணப்படும் தலைவியைப் பெற்ற தாயை நற்றாய் என்றும், வளர்த்த தாயை செவிலித் தாய் என்றும் கூறுவது மரபு. செவிலித்தாயின் மகளே தலைவியின் தோழியாக அமைகிறாள். களவுக்காலத்தில் தலைவியின் ஒவ்வொரு செயலும் தோழிக்குத் தெரிந்தே நடக்கின்றன. தலைவி தலைவனைப் பிரியும் காலத்தில் அவளிடத்தில் காணப்படும் மாறுபாட்டை கூர்ந்து உணர்பவளாக செவிலித்தாய் இருக்கிறாள். செவிலியே நற்றாய் இடம் தலைவியின் களவு உறவை தோழி கூற கேட்டதாக சொல்கிறாள். தலைவனோடு தலைவி உடன்போக்கு சென்ற காலத்தில் செல்வச் செழிப்போடு வளர்த்த மகளை பிரிந்ததால் உண்ணவும், உறங்கவும் நற்றாய் மறுக்கின்றாள்.

இத்தகைய பாசப் பிணைப்பினால் வருத்தமுற்ற நற்றாய் எப்படியாவது தலைவி தன் தலைவனோடு தம் வீட்டுக்கு வரவேண்டும் என்று எண்ணி ஏங்குகின்றாள். இதன் உச்ச நிலையாக முருகனை வழிப்பட்டு வெறியாட்டு நடத்தும் வேலனை அழைத்து குறிப்பார்த்து தன் மகள் வீட்டுக்கு வருவாளா என வினவுகிறாள். அவன் கூறிய நல்ல சொல்லைக் கேட்டு செவிலித்தாயை அழைத்து வீட்டை அழகுபடுத்துமாறு சொல்பவள் நற்றாய். சிறு வயதில் தன் மகளை இடுப்பில் தூக்கி வைத்து உணவு ஊட்டி அன்பு வார்த்தை கூறி தலையை வாரி விட்டு அன்புடன் வளர்த்த மகளான தலைவியை நற்றாய் எண்ணிப் பார்க்கிறாள். இத்தன்மையில் வளர்த்த அவள் பருவம் எய்திய உடன் தலைவனோடு உடன்போக்கு சென்றுவிட்டாள். நான்

வளர்த்த சிறப்பினை தலைவன் எண்ணிப் பார்த்து எனக்கு நன்றி பாராட்டவில்லையெனினும் தலைவியை வீட்டிற்கு மீண்டும் அழைத்து வரவேண்டும் என்று எண்ணுபவளே நற்றாய். தந்தைக்கும் தமயனுக்கும் தலைவியின் நிலைக்கூறி அறத்தொடு நிற்பவளும் நற்றாய் ஆவாள்.

நற்றாயின் செயல்பற்றி தொல்காப்பியர் இரண்டு நூற்பா அமைத்துள்ளார். அவற்றுள்,

**"தாய் அறிவுறுத்தல் செவிலியோ டொக்கும்"**[31]

என்ற நூற்பா மூலம் நற்றாய்க்குரிய மரபாக செவிலி அறத்தொடு நிற்றல் நடக்கும் என அறியலாம்.

இதனையே பின்னாளில் வந்த நம்பியகப் பொருளில்

**"தலைவி பாங்கிக் கறத்தொடு நிற்கும்**
**பாங்கி செவிலிக் கறத்தொடு நிற்கும்**
**செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்கும்**
**நற்றாய் தந்தை தனையர்க் கறத்தொடு**
**நிற்கும் என்ப நெறியுணர்ந்தோரே"**[32]

யார் யாரோடு அறத்தொடு நிற்பர் என்பதும் நற்றாய் தந்தையோடும், தனையனோடும் அறத்தொடு நிற்பாள் என்பதும் தெளிவாக கூறப்பட்டுள்ளதை விளங்கிக் கொள்ள முடிகிறது.

நற்றிணைப் பாடல் ஒன்று மட்டும் தலைவியின் உடன் போக்கால் ஊர் அலர் தூற்றுதல் எண்ணி நற்றாய் தலைவி தலைவன் உடன் போக்கை கூறுவதற்காக தந்தை இடத்திலும் தனயன் இடத்திலும் தலைவியின் கற்பு ஒழுக்கத்தை உயர்த்தி கூறி அறத்தொடு நிற்பதாக அமைந்துள்ளது.

அறத்தொடு நிற்றலை வேறு பாடல்கள் அக இலக்கியங்களில் கிடைக்கப்பெறவில்லை அம்பல், அலர் காரணமாகத் தலைவியை இற்செறித்தலால் தலைவியின் உடல் மெலிந்து காணப்படும். வேலன்

வெறியாட்டைப் பொறுக்க முடியாத தலைவி தன்னுடைய களவை வெளிப்படுத்த நினைக்கிறாள். இந்நிகழ்ச்சி இலக்கியத்தில் அறத்தொடு நிற்றல் என்ற துறையாக வெளிப்படுகிறது.

அறத்தொடு நிற்றலின் என்பதற்கு நெருக்கடியான காலத்தில் களவொழுக்கத்தைக் குறிப்பாகத் தக்காருக்கு வெளிப்படுத்துதல் என்பர். தலைவன் தலைவியை விரும்புவதும் தலைவி தலைவனை விரும்புவதும் இயற்கை. இ∴து அறத்தின் வழிப்பட்ட செயலுமாகும். தலைவனும் தலைவியும் தாமே எதிர்ப்பட்டுச் சந்தித்து மகிழ்கின்ற இக்களவு தானாக வெளிப்படுவதற்கு முன்பு உரியவர்க்கு வெளிப்படுத்த வேண்டிய கட்டாயம் வந்துவிடும்.

அங்ஙனம் உரியவர்க்கு உரியவர் வெளிப்படுத்தும் போது உரிய சொற்களால் பக்குவமாகத் தொடர்புடையார்க்குத் தீங்கோ இழுக்கோ ஏற்படாது, அவர்தம் நிலை தாழ்ந்திடாது நன்மை ஏற்படுமாறு முரண் பாடில்லாத சொற்களால் முறையாக நேரான வழியில் களவினை வெளிப்படுத்துவதற்கு அறத்தொடு நிற்றல் என்று பெயர்.

அறத்தொடு நிற்றல் என்ற அகவாழ்க்கை நாகரிகத்தில் கற்பு நெறியே களவின் இலக்காக இருத்தல் வேண்டும். கற்பு நெறி உயிரினும் மேலாகப் பெண்மக்களால் போற்றப்பட்டது. தலைவியின் காதலை அறிவதிலும் தெரியப்படுத்துவதிலும் நாகரிகமான நெறிமுறைகள் பின்பற்றப்பட்டன. தலைவியின் காதலுணர்வுக்குத் தோழி, தாயார், தமையன், தந்தை அனைவரும் மதிப்பளித்தனர்.

களவு தெய்வச் செயலாக ஏற்றுக் கொள்ளப்பட்டது. அகவாழ்க் கையில் அன்புணர்வே அடிப்படை உணர்வாக மதிக்கப்பட்டது. தமிழர் அக வாழ்க்கை முறையில் முறையாக வாழ்ந்தனர் என்பதை அறத்தொடு நிலை என்ற துறை சுட்டுகின்றது. தேவையான இடத்தில்

அறச்செய்திகளைக் கூறி வாழ்க்கையைச் செம்மைப்படுத்திக் கொண்டனர்.

அறத்தொடு கூறலுக்கு சிறந்த எடுத்துக்காட்டாக அமைவது குறிஞ்சிப்பாட்டு. ஆரிய அரசன் பிரகத்தனுக்கு தமிழ் அறிவிக்கும் பொருட்டு கபிலா் பாடிய பாட்டு குறிஞ்சிப்பாட்டு. அதில் தலைவி அறத்தொடு நின்றாள். அணிகலன்களில் குறைகள் ஏற்பட்டால் அவற்றை நாம் நீக்கிக் கொள்ள முடியும், புதிதாக உருவாக்கிக் கொள்ள முடியும். ஆனால் நம்முடைய பண்பாடாகிய சான்றாண்மைக்கும் அதனால் ஏற்படுகின்ற வியப்புக்கும் நம்முடைய இயல்பான நற்பண்புகளுக்கும் குறைவு ஏற்பட்டால் அதனைப் போக்குவது மிகக்கடினம் என்று நம்முடைய பழைமையான தமிழ்ப் புலவர்கள் கூறியுள்ளனர். இதனை,

**“முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை**
**நேர்வரும் குரைய கலங்கெடின் புணரும்**
**சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்**
**மாசறக் கழீஇ வியங்கு புகழ் நிறுத்தல்**
**ஆசு அறு ஐயர்க்கும் அந்நிலை**
**எளிய என்னார் தொல் மருங்கு அறிஞர்”**[33]

என்ற குறிஞ்சிப்பாட்டு வரிகள் வாயிலாக தமிழரின் வாழ்வியல் ஒழுக்க நெறிகள் விளக்கப்பட்டுள்ளது.

அறத்தொடு நிற்றலுக்குத் தேவை என்ன என்பதைப் பற்றி நினைக்கும் போது களவொழுக்கத்தில் வாழ்ந்த தலைவன் தலைவியைத் திருமணம் செய்து கொள்ள நினைக்கும் காலத்து சூழ்நிலைகள் காரணமாக பிறர் தலைவியைப் பெண் கேட்டு வந்தாலும் தலைவனை மணந்து கொள்ள மறுப்பு ஏதாவது ஏற்பட்டாலும் அறத்தொடு நிற்கும் நிலை ஏற்படும். இதனை,

**“பிறன் வரைவு ஆயினும் அவன் வரைவு மறுப்பினும்**
**முன்னிலை அறன் எனப்படுதல் என்று இருவகைப்**
**புரை தீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்”**[34]

என்ற நூற்பா மூலம் தொல்காப்பியர் காட்சிப் படுத்துகிறார்.

தொல்காப்பியர் கூரிய அகத்திணைகளுள் ஒன்றான பெருந்திணையில் கூட அறத்தொடு நிற்கும் நிலை அமையும். அதாவது தலைவன் செய்யும் செயல் அறனில்லை என்று உணர்த்துகின்ற அமைப்பு வரலாம். இதனை,

**“அறன் அழத்துரைத்தல், ஆங்கு நெஞ்சழிதல்**
**எம் மெய்யாயினும் ஒப்புமை கோடல்”**[35]

என்ற நூற்பா அறத்தொடு நிற்றலானது பெருந்திணைக்கும் பொருந்தும் என்பதை விளக்குகிறது.

தோழி அறத்தொடு நிற்கும் காலத்துத் தலைவனுடைய எளிமையையும் அவனுடைய புகழையும் அவனுடைய விருப்பத்தையும் எடுத்துரைப்பதனோடு தலைவிக்காக நிகழும் காலத்தில் வேலனிடம் எதிர்த்துப் பேசுவாள். காரண காரியங்களைத் தெளிவாகச் சொல்லி தலைவிக்கு களவில் நேர்ந்த உண்மையையும் கூறி திருமணத்திற்கு ஏற்பாடு செய்வாள்.

களவு, கற்பு இரண்டையும் இணைத்து நிற்க வைக்கும் இடமே அறத்தொடு நிற்றல் நிலையாகும். தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றலையும் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றலையும் பற்றி மட்டுமே கூறி ஏனைய நிலைகளைக் கூறவில்லை.

அக இலக்கியங்களில் குறிஞ்சிக்கலியின் ஒருபாடல் மட்டும் தாய் தந்தைக்கு அறத்தொடு நின்றதாகக் கபிலர் குறிப்பிடுகிறார். நாணத்தை விட்டே கற்பைக் காக்க வேண்டுமென்பது பண்டைத் தமிழர் கண்ட வாழ்வியல் அறம் ஆகும். தொல்காப்பியரும் நாணத்தைக் காக்க உயிர் விடுக மற்றும் கற்பைக் காக்க நாணத்தை விடுக என்கிறார். இதனை,

**“உயிரினும் சிறந்ததன்று நாணே நாணினும்**
**செயிர் தீர்க் காட்சிக் கற்புச் சிறந்தன்றெனத்”**[36]

என்ற பாடல்வழி தமிழர் பண்பாட்டை தொல்காப்பியர் காட்சிப்படுத்துவது குறிப்பிடத்தக்கதாகும்.

அறத்தொடு நிற்றல் என்பது தமிழர் தம் அகவாழ்க்கைநெறியில் காணப்படும் மற்றொரு சிறப்பான கூறு ஆகும். உண்மையே அறம் அந்த உண்மையை வெளிப்படுத்தி வலியுறுத்தி நிற்றல் அறம் சார்ந்த செயலாகும்.

தலைவி தலைவனோடு களவில் நட்பு கொண்டு விட்டாள். அந்த நட்பு கற்பெனும் பொற்புடைக் குணம் சார்ந்த வாழ்க்கையாக மாறுவதற்குத் தலைவியும் தலைவனும் ஊரறிய உலகறிய மணம் புரிய வேண்டும். இதற்காகத் தோழியால் செவிலியால் மேற்கொள்ளப்படும் முயற்சிகளையே அறத்தொடு நிற்றல் என்று இலக்கியங்கள் பேசுகின்றன, என்பதைக் கண்டோம்.

தலைவி தோழியுடன் ஈருடல் ஓருயிர் போல உணர்வில் கலந்து பழகினாலும் ஓர் ஆடவனுடன் தனக்கு ஏற்பட்ட களவு வாழ்க்கையைப் பற்றிக் கூறாமல் தொடக்கத்தில் மறைத்து விடுவாள். இது நாணத்தின் பாற்பட்ட செய்கை ஆயினும் காலம் கழிந்த பின்னர் களவின் பயன் முற்றிய பின்னர் தலைவி பல காரணங்களால் மன நெருக்கடிக்கு உள்ளாக நேரிடும்.

தொல்காப்பிய இலக்கணம் காலமும் என கூறிய உம்மையினால் தலைவி தானே தன் களவை தோழிக்கு எடுத்துக் கூறுதல் பொதுவாக மரபுக்குரிய பண்பு இல்லை. தலைவியின் களவைப் பற்றித் தோழியே தன் கூர்ந்த மதியாலும், தலைவியிடம் காணப்படும் உணர்ச்சிக் குழப்பத்தை ஆராய்ந்து பார்ப்பதாலும், தலைவியின் மெய்யின் கண் தோன்றும் வேறுபாட்டைக் கண்டதாலும் தலைவியின் களவை அறிவாள். பிறந்தது முதல் இருவரும் உயிர் அணைய நட்பு கொண்டவராதலின் தோழி தலைவிக்கு ஏற்படும் மனப்பிணியைத் தலைவியின் மீது

கொண்ட அன்பின் மிகுதியால் தலைவனைப் பற்றிய அனைத்துச் செய்திகளையும் தலைவியை கேட்டு அறிந்து கொள்ள முற்படுவாள்.

**உடன்போக்கு**

தமிழர் தம் அகவாழ்க்கை நாகரிகத்தில் தலைவி தலைவனோடு சென்று விடுவதை உடன்போக்கு என்ற பண்பு என்பர். களவைக் கற்பாக்கிக் கொள்ள முயற்சிக்கும் உத்திகளில் ஒன்று தான் உடன் போக்கு. இங்கும் தோழியே முதன்மையாக நிற்கின்றாள். பெற்றோர் பற்றிய அச்சமும் அலர் குறித்த நாணமும் உடன் போக்கிற்குக் காரணங்களாகும். தலைவன் தலைவியை உடன்போக்கிற்கு அழைத்துச் செல்ல தயக்கம் காட்டுவான். தலைவனின் தயக்கத்திற்குக் காரணம் தலைவியின் மென்மை தன்மையும் வழியிடை ஏற்படும் இடர்கள் பற்றிய காரணங்களாகும். இருவரது உளப் போராட்டங்களையும் ஒருநிலைப் படுத்தி உடன்போக்குச் செல்லும் பணி தோழியால் நடத்தப்படுகின்றது.

களவில் ஈடுபட்ட காதலர் இருவரும் பெற்றோர், சுற்றம், நட்பு, ஊர் ஆகிய அனைத்தையும் துறந்து தூரத்தில் உள்ள, எளிதில் எவரும் உடனே தங்களை அணுகவியலாத அயலூருக்குச் சென்று தாமே மணம் புரிந்து இல்லறத்தை நடத்துவார்கள்.

தலைவியும் தலைவனும் ஒருவரோடொருவர் களவில் ஈடுபட்டு இயற்கை வழி புணர்ச்சியில் உடலும் உள்ளமும் கலந்தபின் தொடர்ந்து அந்த அன்பு மிகுதியின் தொடர்ச்சியாக அனைத்து உறவுகளையும் துறந்து நிகழ்வது அக்கால சமுதாயத்தில் இருந்தது.

உடன்போக்கு எனும் நிலைப்பாடு காதலர்க்குத் தவிர்க்கவியலாத நிகழ்ச்சியாகவும் அது அறத்தின்பாற்பட்ட அவர்களது முடிவே என்பதையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும். உடன் போக்கு எனும் நிலைப்பாடு அறத்தின் பாற்பட்டது என்றே தமிழர் அகநாகரிகம் முடிவு செய்தது.

தலைவன், தலைவி இருவரும் உள்ளப் புணர்ச்சி காரணமாக இனிப் பிரிவதில்லை என்றும் அப்படி பிரிந்தால் வாழப்போவதில்லை என்றும் முடிவுக்கு வந்தபிறகு, எந்த குடும்பத்தினராலும் இவர்களது வாழ்க்கைக்கு இடையூறு நிகழக்கூடாது என்பதற்காக இவர்கள் உடன்போக்கு செல்வது தவிர்க்கப்படாத அறச்செயலாக அமைந்தது.

இயற்கையோடு இயைந்த உள்ளார்ந்த தம் காதல் வேட்கையால் தம் விருப்பத்துக்கேற்ப திருமணம் செய்து கொண்டாலும் கற்பு நிலையில் நின்று சமுதாய நெறியின் கண் இல்லறம் நடத்தும் கடமையுணர்ச்சி உள்ளவர்களே தாமிருவரும் என்பதைப் பிறருக்குச் செய்கை மூலம் உணர்த்துவது அறமாகும்.

தொல்காப்பியம் இருவகை மணமுறைகளைப் பற்றிக்கூறுகின்றது. அவை வெளிப்படையாக திருமணம் செய்து கொள்ளுவது, மறைமுகமாக திருமணம் செய்து கொள்ளுவது ஆகும்.

உடன்போக்கு சென்றுவிட்ட மகளைத் தேடி உத்தேசமாக ஒரு வழியைத் தேர்ந்தெடுத்து ஊர் கடந்து காடு கடந்து பாலை வழியில் சென்றேன். நான் பயணம் செய்த அவ்வழியில் எதிர்ப்பட்ட அறவோர் அந்தணர், கண்டோர் ஆகியயோரை அணுகி, நம்மகள் உடன்போக்கு சென்ற பயண வழியில் தான் நானும் போகிறேனா என எழும் தன் ஐயத்தை செவிலி நற்றாயிடம் கூறுவதாக,

**“நல்லோர் ஆங்கண் பரந்து கைதொழுது**
**பல் ஊழ் மறுகி வினவுவோயே!**
**நின்தோள் வல்விற் காளையோடு**
**கண்டனெம் மன்ற சுரத்திடையாமே”**[37]

என்னும் ஐங்குறுநூறு பாடல் ஒன்று அமைந்துள்ளது. இது உடன்போக்கு நிகழ்த்தியதை தெளிவாக விளக்குகிறது.

தலைவன், தலைவி இருவரும் ஊரின் எல்லையில் இருந்த பெரிய மரத்தின் கண் அமர்ந்து சற்று இளைப்பாறி சென்று உள்ளனர். அவர்களை அம்மரத்தின் அண்மையில் தேடிச் சென்ற செவிலியும் மரத்தின் கண் இளைப்பாற, அருகில் உள்ள இல்லங்களில் இருந்தவர்கள் தாமே வந்து செவிலியை விசாரித்தனர். காதலா் இருவரும் அவ்வழியாகச் சென்றதை உறுதி செய்தனர். இதனைக் கேட்ட செவிலி மகள் நல்லறம் நடத்துவதை ஊரின் கண் வந்து நற்றாயிடமும் தந்தையிடமும் கூறினாள். இதனை,

**"எல்லிடை அசைந்த கல்லென் சீறூர்ப்**

**புனை இழை மகளிர் பயந்த**

**மனை கெழு பெண்டிர்க்கு நோவுமாா் பெரிதே"**[38]

என்னும் ஐங்குறுநூறு பாடல் விளக்குகிறது. இவ்வாறாக மகள் வாழும் இடம் சோ்ந்து அவளைக் கண்டு அவள் நல்வாழ்வு பற்றிய உறுதியான செய்தியுடன் இல்லம் மீண்டாள் செவிலித் தாய்.

தலைவியைக் கொண்டு சென்ற தலைவன் அயலூரில் அவளை மணம் புரிந்த பின் தன்னுடைய இல்லத்துக்கு அழைத்து வருவான். அவ்வாறு அழைத்து வந்த தலைவிக்கு, தலைவனின் தாயாா் சிலம்பு கழி நோம்பு என்னும் சடங்கை செய்வாள். அவா்களின் இல்லற சிறப்பை அறிந்த தலைவியின் தாயாா் தம் இல்லத்திற்கு மீண்டும் இருவரும் வந்தால் வதுவைச் சடங்கு செய்து வைப்பேன் எனக் கூறுவதாக,

**"நும் மனைச் சிலம்பு கழி இ அயரினும்**

**என் மனை வதுவை நல்ல மணம் கழிக"**[39]

என்னும் பாடல் குறிப்பிடுகிறது.

இதன்மூலம் உடன்போக்கு எனும் களவுச் செய்கை சமுதாயத்தில் அறம் என்று ஏற்கப்பட்டதும் உடன் போக்கில் மணம் புரிந்த தலைவனும் தலைவியும் ஊர் மீண்டு மனையறம் மேற்கொண்டனர் என்றும் அறியமுடிகிறது. இத்தகைய கற்பு வாழ்க்கையைப் பெற்றோரும் சுற்றத்தாரும் சமுதாயமும் ஏற்றுக் கொண்டனர். எனவே அன்பையும்

அறத்தையும் அடிப்படையாகக் கொண்ட அழகான இல்லறம் என்னும் கற்பு வாழ்க்கையையே இலக்காகக் கொண்டு ஒரு பெண் தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளும்பொழுதுதான் அவளுடைய வாழ்க்கை அறம் வெளிப்பட்டு அவள் பெண்மை சிறக்கிறது என்பது பழந்தமிழர் கண்ட முடிவாகும். எனவே தான் இத்தகைய உடன் போக்கு சிறந்த கற்பு என்றும் அறச்செயல் என்றும் இலக்கியங்களால் போற்றப்பட்டது.

**கற்பொழுக்கம்**

தமிழ்ச் சமுதாயத்தின் தொடர் வரலாற்றில் பெண் நான்கு நிலைகளில் ஒருநிலை சார்ந்தவளாக விளங்குகிறாள். அவை இன்றும் தொடர்ந்து வருகின்றது. இந்த நான்கு பிரிவினரும் சங்க இலக்கியத்திலும் காட்டப்படுகின்றனர். அவை கன்னி, குடும்பத் தலைவி, விதவை, பரத்தை என்பவையாகும். பெண்ணை நான்கு நிலைகளிலும் வேறு வேறாகப் பிரித்துப் பார்க்க வைப்பது கற்பு என்னும் கோட்பாடுதான். தந்தைவழிச் சமுதாயம் கற்புக் கோட்பாட்டில் வலுவடைகிறது. பரத்தமை, செம்மை இரண்டும் கற்பின் அடிப்படையில் ஆதிக்கம் பெறுகிறது. இந்த ஆதிக்கத்திற்கேற்ப பெண்ணைச் சமூகம் உருவகப்படுத்துகிறது.

> **“பொருளாதார உறவே கற்பு திருமணம் என்பது பொருளாதாரச் சடங்காகக் கருதப்பட்டதே தவிரப் பாலியல் வெளிப்பாட்டிற்குரிய உறவாக கருதப்படவில்லை”**[40]

என ராபர்ட் பேல்ட்டின் கருத்தைச் ச.சிதம்பரம்பிள்ளை வலியுறுத்துகிறார்.

தொன்மைக் காலத்தமிழர் கற்பினை, இருத்தல் என்று கூற இயலும். கணவன் மனைவியாகிய இல்வாழ்வில் கணவன் பிரிந்திருந்த காலத்து அவன் வரும் வரை தன் உணர்வுகளை அடக்கி ஆற்றியிருத்தலே இருத்தல் என்பதன் பொருளாகும். இக்கருத்தைச் சங்க இலக்கியக் கற்பு நிலையோடு இணைத்துப் பார்க்கும் பொழுது ஆய்வுக்குரியதாக அமைகின்றது. இந்த ஆய்வு சங்க இலக்கியத்தில்

கற்பு என்ற சொல்லோடு இணைந்த பொருள் கொண்டு மேற்கொள்ளப்படுகிறது.

சங்க இலக்கியத்தில் கற்பு என்ற சொல் 46 இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. அதில் 43 இடங்களில் பெண்களோடு தொடர்புடையதாக அமைய மூன்று இடங்கள் மட்டும் ஆடவனின் கல்வித்திறம் பற்றிக் கூறுவனவாக அமைந்துள்ளது. பெண்களோடு தொடர்புடைய சொல்லமைப்புக்கள் பல நிலைகளில் அமைந்துள்ளன.

**நகரடங்கிய கற்பு**

'நகரடங்கிய கற்பு' 'திருநகரடங்கிய கற்பு' என்ற இரு தொடர்கள் அடக்கக் கோட்பாட்டிற்குச் சான்றாகின்றன. இல்லம் நகர் என்று அழைக்கப்படுகிறது. நகரடங்கிய என்பது இல்லத்தில் அடங்கியிருத்தல் என்ற பொருளுடையதாகிறது. மேற்சொன்ன 'இல்லத்துத் தனிச் சேறல்' என்ற தொடருடன் தொடர்புடையதாகின்றது. பண்பாட்டு நிலையில் வைத்து எண்ணப்படும் பொதுப் பண்புகளைப் பெற்ற பெண் அதன் நிலயையில் மட்டும் நிற்காது. அடக்கப் பண்புடையவளாக இல்லிருத்தல் கற்பெனக் கருதப்படுகிறது.

சங்க இலக்கியத்தில் காணப்படும் இக்கற்புக் கோட்பாடு மனை தாண்டா மனைவி படிதாண்டாப் பத்தினி என்ற பிற்காலக் கருத்துத் தொடர்ச்சியின் முன்னோடியாக அமைகிறது.

கற்பு முல்லைத் திணையைச் சார்ந்தது சான்றது என்பது மூன்று இடங்களில் பதிவாகியுள்ளது. இது காமங்கள் விட்டு ஆற்றியிருத்தல் அவசியம் என்பதனைப் புலப்படுத்துகிறது. இதனால் இருத்தல் என்ற உரிப்பொருளுக்கு ஆழ்ந்த பொருளுண்டு. கணவனைப் பிரிந்திருக்கும் காலத்தில் பெண் தன் உணர்ச்சிகளை அடக்கிக் கொண்டு இருத்தல், பிற ஆடவர் பால் நாட்டம் செலுத்தாது இருத்தல், இல்வரை இகலாது

இருத்தல் என்ற பல்வேறு பொருள்களை உள்ளடக்கியதே முல்லைத் திணையின் இருத்தல் என்று கூறுவர்.

சங்க இலக்கியங்களில் குடும்பப் பெண்கள் தமக்கென வாழாத நிலைமை உடையவர்களாக காட்டப்படுகின்றனர். மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர் என்பது ஒரு கோட்பாடாகப் பெண்டிர் வாழ்வில் காணப்படுகின்றது. அகம், புறம் எனும் இருநிலை வாழ்வுகளிலும் இக்கோட்பாடு கணவரைப் பேணுவதால் புலப்படுகின்றது.

கற்பொழுக்கத்துக்கான இலக்கணத்தைத் தொல்காப்பியம் பின்வரும் செய்யுள் மூலம் கூறுகிறது.

**“மறை வெளிப்படுதலும் தமரின் பெறுதலும்**
**இவை முதலாகிய இயல்நெறி திரியாது**
**மலிவும் புலவியும், ஊடலும் உணர்வும்**
**பிரிவொரு புணர்ந்தது கற்பெனப்படுமே”**[41]

களவை வெளிப்படுத்தி, அக்களவு வாழ்க்கையின் தொடர்ச்சியாக சமுதாயம் அறிய ஆணும் பெண்ணும் தம் காதல் வாழ்க்கையைத் தொடர்ந்தாலும் அல்லது பெற்றோரே கொள்வாரும் கொடுப்பாருமாக நின்று இருவரையும் இல்லறத்தில் முன் முயற்சி எடுத்துப் பிணைப்பர். சமுதாய ஒப்புதலுடன் இருவருடைய காதல் வாழ்க்கைத் தொடருமானால் இங்கும் ஆணைவிடப் பெண்ணுக்கே மனவொழுக்கம் வலியுறுத்தப்பட்டது.

மேலும் தலைவன் தலைவியின் களவொழுக்கம் கற்பொழுக்கமாகத் தொடர முடியாத நேர்மையற்ற வாழ்க்கை முறை குற்றமுள்ள வாழ்க்கை முறையாகக் காலப்போக்கில் தோன்ற ஆரம்பித்து விட்டதால் களவொழுக்கம் சமுதாயத்தால் முற்றுமாகப் புறக்கணிக்கப் பட்டு பெற்றோர் நிகழ்த்தும் மணமே கற்பொழுக்கம் என்றும் அதுவே சிறந்த அறம் சார்ந்த வாழ்க்கை நெறி என்றும் பிற்காலத்தில் கருத்து உருவானது இதனை,

**“கற்பு எனப்படுவது கரணமொடு புணரக்**

**கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்**

**கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே”**[42]

என்று தொல்காப்பியம் வெளிப்படுத்துகிறது. மேலும்,

**“பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்**

**ஐயர் யாத்தனர் கரணம் என்ப”**[43]

என்றும் அதில் கூறப்பட்டுள்ளது. ஐயர் என்றால் அக்காலத்தில் சமுதாயத் தலைவர் எனப் பொருளாகும். கரணம் என்றால் திருமணம் என்று பொருள். எனவே கற்பொழுக்கம் என்பது பெரியவர்கள் பார்த்து ஏற்பாடு செய்த திருமணம் என்ற கருத்தைப் பெறுகிறது.

அகவாழ்க்கையில் பத்துப் பொருத்தங்கள் இருக்க வேண்டும் என்கிறார் தொல்காப்பியர். பெற்றோர் ஆணுக்கும் பெண்ணுக்கும் பத்துப் பொருத்தம் பார்க்கும் நம் தமிழர் வழக்கத்தை ஈண்டு நினைவு கூர்தல் வேண்டும். இல்லறம் நல்லறமாகத் தொடர்ந்து குடும்பம் நிலைக்க வேண்டும் என்ற சமுதாயப் பொறுப்புணர்வு மிகுந்து விட்டதால் பிற்காலத்தில் பெற்றோர் நடத்தும் திருமணமே கற்பொழுக்க வாழ்க்கையாகும் என்பது நிலைப்பாடான கொள்கையாகிவிட்டது.

களவொழுக்கத்தில் ஆண் பெண் இருபாலரின் இன்ப நாட்டமே முதன்மை பெறுகிறது. ஆனால் கற்பொழுக்கத்தில் ஆண் பெண்ணின் உறவு என்பது காம உணர்வை மட்டுமே நோக்கமாகக் கொண்டது அதற்கு ஒரு சமுதாய நோக்கம் இருந்தது. அந்த நோக்கம் நல்ல மனைகளை உருவாக்குவதே கரை கடந்தோடும் மனத்தின் காம உணர்ச்சி கட்டுக்குள் அடங்க வேண்டுமாயின் அது மனையகத்தின் தவிர்க்க இயலாத கடமைகளாகவும் சமுதாயத்தில் பொறுப்புகளாகவும் மடைமாற்றம் பெற வேண்டும் என்று தமிழ்ச் சமுதாயம் விரும்பியது. இதற்கு இல்லறத்தில் ஈடுபடும் இருவருக்குமே மனவொழுக்கம் அவசியம், என்று வலியுறுத்தப்பட்டது.

தன்னுடைய விதியோடு பின்னிப் பிணைந்து விட்ட ஓர் ஆணிடத்து மட்டும் பெண்ணும் ஒரு பெண்ணிடத்து மட்டும் ஆணும் அத்தகைய மன உணர்வோடு தம் காம உணர்வை ஒரு முகப்படுத்திக் காதல் வாழ்க்கையில் ஈடுபடும் பொழுதுதான் அவ்வாழ்க்கையின் இன்பம் சிந்தாமல் சிதறாமல் இருவருக்கும் கிட்டும். அத்துடன் மனக் கற்பின் காரணமாக உருவாகும் மழலையர் நன்மக்களாகவும் விளங்குவர்.

இக்கற்பு நெறியில் நின்றுதான் இல்லறக் கடமைகளை இருவரும் ஆற்ற வேண்டும் என்று தமிழ்ச் சமுதாயம் விதித்தது. ஆயினும் இந்தக் கற்பு நெறி பெண்ணோடும் பெண்ணின் உடலோடும் தொடர்புடைய கருத்தாகவே பிற்காலத்தில் மாறி அதுவே நின்று நிலைத்தும் விட்டது. இதற்கு ஆண் பெண் இருவருக்கும் அமைந்துள்ள உடற்கூறு வேறுபாடுகளே காரணம் ஆகும். காதல் வாழ்க்கையில் இன்பம் பெறுவது இருவருமே என்றாலும் அதன் விளைவான மகப்பேறு பெண்ணுக்கு மட்டுமே வாய்க்கிறது. மகப்பேறு என்பது உடல் ரீதியாக ஒரு பெண் பெறும் அனுபவம். அடுத்தடுத்து பெற்ற மகவைப் பேணிக் காப்பதும் பெண்ணுக்கு உடல் ரீதியான அனுபவமாகவே தொடர்கிறது. குழந்தைகளைப் பேணி வளர்ப்பதிலேயே அவளுடைய நாளும் பொழுதும் கழிகிறது. காலமும் உருண்டோடுகிறது. அடுத்தடுத்த மகப்பேறுகளால் இந்த உடல் ரீதியான அனுபவமே தொடர்ந்து அதன்பின் அவள் பெற்ற குழந்தைகளின் நலனை மட்டுமே நாடும் மன உணர்வும் பெற்றவளாகி விடுகிறாள். இதனால் அவளது காம உணர்ச்சி மனை மாண்பாகவும் மனையகத்துள்ளே இயங்கு கடமையாகவும் இருக்கிறது. ஆணோடு ஒப்பிடுகையில் அவளது இன்ப நாட்டம் குறைந்து போவதாகிறது.

கற்பு நெறியில் தலைப்பட்டு அதுவே மனைக்குரிய அறம் என்று வாழும் பெண்கள் நிறைந்த சமுதாயத்தில் ஆணின் கற்புப் பிறழ்வுக்கு வடிகால் தேவைப்பட்டது. ஒருவனுக்கு மட்டும் உடன்படாது குடும்பம் அமைத்துக் கொள்ளாது வாழும் மகளிர்க் கூட்டம் ஒன்று இதற்கு அவசியமானது. சட்ட திட்டங்கள் எதுவும் இல்லாமலேயே அவசியமான

அழைப்புகள் இயல்பாக உருவானது. அப்படி உருவானதே பரத்தையர் குலவொழுக்கமாகும். மிதமிஞ்சிய தம் காம உணர்வுக்கு வடிகால் வேண்டி ஆண்களில் பலர் பரத்தமையொழுக்கம் பூண்டனர். புதியதை நாடுவோர் காமக்கிழத்தியரிடம் கட்டுண்டனர் அதாவது,

**"எல்லாவுயிர்க்கும் இன்பம் என்பது**

**தானமர்ந்து உரூஉம் மேவற்றாகும்"**[44]

என்ற இலக்கணத்துக்கு உரை கூறுவோர் இன்பம் என்பது எல்லா உயிர்களுக்கும் மனம் பொருந்தி வரும் விருப்பம் தான் என்றே கூறுகின்றனர். எனவே மனம் பொருந்திய வழி பரத்தையர் மாட்டும் இன்பம் உளதாகும். எனவும் பொருந்தா வழி மனைவியர் மாட்டும் இன்பம் அழியும் எனவும் கொள்ளப்படுவதால் ஆண்களின் கற்புப் பிறழ்வு இயல்பானதாக ஏற்றுக்கொள்ளப்பட வேண்டியதாயிற்று. அது அறத்திற்கு மாறுபாடானது தான். ஆனால் இயற்கைக்கு மாறானது அல்ல என்பதால் தமிழர் தம் பரத்தமை ஒழுக்கம், கற்பு வாழ்க்கையில் ஆண்கள் மட்டும் பின்பற்றும் நெறியாகியது. இயல்பானதாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. இலக்கியங்களில் பாடு பொருளானது. ஆனால் பல சமயங்களில் இழிவுக்குரிய பாடு பொருளாகவே ஆனது என்பது நோக்கத்தக்கது. சான்றோர் பெருமக்கள் இதன் இழிவை எடுத்துரைப்பதும், தலைவியைச் சார்ந்த இல்லறம் நடத்துமாறு அறிவுறுத்துவதும் ஆகிய நிகழ்ச்சிகள் ஏராளமாக இலக்கியங்களில் காணப்படுகின்றன. எனவே பரத்தமை ஒழுக்கம் இழிவுக்குரியதாகவே கருதப்பட்டது என்பதில் ஐயமில்லை. இலக்கியங்களில் விளக்கப்படும் தலைவியின் ஊடலிலிருந்து தலைவனைத் தோழி இடித்துரைக்கும் உரைகளிலிருந்தும் சான்றோர் பெருமக்களின் அறம் சார்ந்த அறிவுரைகளிலிருந்தும் இலக்கியங்கள் இயற்றப்பட்ட காலத்திலும் அதற்கு முன்பும் பரத்தமை இழிவுக்குரியதாகவே கருதப்பட்டது என்பது புலனாகிறது. அதனால் இதனை இலக்கியக் கருவாக ஏற்றுக் கொண்ட இலக்கிய நேர்மை பாராட்டுக்குரியதாகும்.

அகவுணர்வால் உருவாக்கப்படும் மனையறத்தில் புறச்செயல் களுக்கு இடம் உண்டு. அதன் விளைவாக தலைவன் தலைவியரின் பிரிவும் உண்டு. ஓதல், பகை, தூது ஆகிய மூன்று செயல்களில் தலைவன் ஈடுபடும் பொழுது தலைவியைப் பிரிந்து அவன் செல்ல வேண்டும். அதன்படி பொருளீட்டுதலின் பொருட்டு அவன் பிரிய வேண்டும். பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்பது வள்ளுவன் பாட்டு. அவ்வாறெனில் பொருளில்லாதவர் இவ்வுலகில் அனுபவிக்க கூடிய காதல் வாழ்க்கையும் இல்லாதவராகவேதான் வாழ வேண்டும். எனவே காதல் வாழ்க்கையை மகிழ்விக்கச் செய்யும் விருந்தோம்புதல், சுற்றம் தழுவுதல் போன்ற இல்லறக் கடமைகளை ஆற்றவும் பொருள் தேவையாதலின் தலைவன் தலைவியை 'பொருள் வயிற்பிரிதல்' என்பது கற்பொழுக்கத்தின் வாழ்க்கைக் கூறு ஆகியது.

**கற்பின் பிரிவு வகைகள்**

திருமணம் முடிந்த பின் தலைவனும் தலைவியும் ஒருவரை யொருவர் நன்கு புரிந்து கொண்டு இல்வாழ்க்கை நடத்துவர். அப்பொழுது சில காரணங்களினால் தலைவன் தலைவியைப் பிரிந்து செல்ல நேரிடும். அகப்பொருள் நூல்களில் இத்தகைய பிரிவுகள் ஆறுவகைகளாகப் பகுக்கப்படுகின்றன. அவை,

1. ஓதற்பிரிவு
2. காவற்பிரிவு
3. தூதிற்பிரிவு
4. துணைவயிற் பிரிவு
5. பொருள்வயிற் பிரிவு
6. பரத்தையிற் பிரிவு

என்பனவாகும் இறையனாரகப் பொருளில்,

> **"ஓதல் காவல் பகைத்தணி வினையே**
> **வேந்தர்க்கு உற்றுழி பொருட்பிணி பரத்தை என்று**
> **ஆங்க அவற்றே அவ்வயிற் பிரிவு"**[45]

என்று அப்பிரிவுகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. கல்வியின் பொருட்டும் நாடு காத்தற் பொருட்டும், இரண்டு அரசர்கள் தம்முள் மாறுகொண்டு பொரும்பொழுது அவர்களைச் சந்திக்கச் செய்யும் பொருட்டும், அரசன் கட்டளைப்படி ஏதாவது ஒரு நிமித்தத்தின் பொருட்டும். பொருள் தேடுதற் பொருட்டும், பரத்தையின் பொருட்டும் பிரியும் போது தலைவன் தலைவியை உடன் அழைத்து கொண்டு செல்லும் வழக்கம் பழங்காலத்தில் காணப்படவில்லை. அவ்வாறு சென்றதாகச் சான்றோர்களின் இலக்கியங்களுமில்லை. தொல்காப்பியர் இக்குறிப்பை,

**"முந்நீர் வழக்கம் மகடு உவோடு இல்லை"**[46]

என்ற நூற்பாவின் மூலம் புலப்படுத்துகிறார். முந்நீர் வழக்கம் என்பதற்கு இளம்பூரணர் கப்பல் வழியாகக் கடலில் செல்லும் பிரிவு என்று உரை கூறுகிறார்.

"முந்நீர் வழக்கம்" என்பதற்கு ஓதல், தூது, பொருள் ஆகிய மூன்று நீர்மையால் செல்லும் பிரிவு என்று பொருள் கூறுவர் நச்சினார்க்கினியர்.

இதற்குக்காரணம் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு முதலிய இயல்புகளையுடைய பெண்டிரை உடனழைத்துச் செல்லுதல் சிறந்ததன்று என அவர்கள் எண்ணியிருக்கக்கூடும்.

ஆனால் இப்பொழுது ஆடவர் வெளிநாட்டிற்குப் பொருள் தேடுவதற்காகவும், பிற காரணங்களுக்காகவும் கடல் வழியாகவும் ஆகாயம் மூலமாகவும் செல்லும் பொழுது மகளிரை உடனழைத்துச் செல்லுதலையும் தேவைப்பட்டால் வெளிநாட்டிலேயே மனைவியுடன் தங்கி விடுதலையும் நாம் காணலாம்.

### ஓதற்பிரிவு

கல்வியின் பொருட்டுத் தலைவன் வெளிநாட்டிற்குப் பிரிந்து செல்வதைக் காணலாம். திருமணம் முடிந்தவர்கள் மட்டுமின்றித் திருமணமாகாத இளைஞர்கள் கூட மேற்படிப்பிற்காகவும் ஏனைய பணிகள் தொடர்பாகவும் பிரிந்து செல்வர். இன்று பெண்களும் கூட மேற்படிப்பிற்காகத் தமது குடும்பத்தாரைப் பிரிந்து செல்வதுமுண்டு.

கல்வியின் பொருட்டுத் தலைவன் பிரிவானென்பதனால் தலைவன் இதுவரைக் கல்வி கற்கவில்லையென்று கருதவேண்டியதில்லை. கல்வி கற்பதற்காகத்தான் தலைவன் பிரிவான் என்பது மட்டுமன்று. அறம் பொருள், இன்பம், வீடு ஆகிய நால்வகைப் பயன்களை உணர்த்தும் நூல்களையெல்லாம் கற்றுணர்ந்த தலைமகன் பிற இடங்களிலுள்ள கற்றுவல்ல சான்றோர்களைக் காண்பதற்கும் அறிவைப் பெருக்கிக் கொள்வதற்கும் பிரிவான் என்பர்.

“கற்றது கைம்மண்ணளவு கல்லாதது உலகளவு” என்ற ஆன்றோர் கூற்றிற்கேற்ப அன்றே கல்வியில் மிகுந்த ஆர்வமுடன் மக்கள் இருந்துள்ளனர். இவ்வாறு விரும்பி மேற்கொள்ளும் கல்விக்காகப் பிரியும் பிரிவு மூன்றாண்டுகளுக்கு மிகாது. இதனைத் தொல்காப்பியர்,

**“வேண்டிய கல்வி ஆண்டு மூன்று இறவாது”**[47]

என்னும் நூற்பா மூலம் விளக்கியுள்ளது, குறிப்பிடத்தக்கது.

### காவற்பிரிவு

காவற்பிரிவு என்பது நாட்டைப் பாதுகாத்தற் பொருட்டுப் பிரியும் பிரிவாகும். இந்த பிரிவினைப்,

* பிற நாட்டாரிடமிருந்து தம் நாட்டைக் காப்பது
* தம் நாட்டை வளப்படுத்திக் காப்பது

என இரண்டு பிரிவாக வகைப்படுத்திக் கூறலாம்.

ஒரு நாட்டில் பல இடங்களில் தமக்குள்ள குறைகளை நேரில் வந்து சொல்லவியலாத மூத்தோர், பெண்டிர், முடவர், கூனர் குருடர் நோய் உடையோர் முதலியவர்கள் இருத்தல் கூடும். அவர்களை நேரில் கண்டு அவர்களின் குறைகளைக் கேட்டு அவற்றை ஒருவாறாக நீக்குதற் பொருட்டுப் பிரிவது நாடுகாக்கும் அரசர்க்குரிய ஒரு பிரிவாகும். ஆனால் காக்கும் இக்கருத்து ஏற்புடையதன்று. காவற் பிரிவு அரசியலாளர், தலைமக்கள், நில மக்கள், அடியோர் என நால்வர்க்கும் உரியதாகும்.

பகைவர்கள், தூதர்கள், ஒற்றர்கள் போன்றோரிடத்துத் தங்களின் வலிமையைக் காட்டுவற்குப் பிரிவினை ஏற்படுத்திக் கொள்வதுண்டு. ஆகவே நாட்டிற்காகத் தொண்டு செய்யப் பிரியும் பிரிவே காவற்பிரிவாம். இன்றும் இளைஞர்கள் நாட்டிற்காகத் தங்கள் குடும்பத்தைவிட்டு இராணுவத்திற்குச் செல்வதைக் காண்கிறோம்.

**தூதிற் பிரிவு**

அக்காலத்தில் இரண்டு மன்னர்களிடையே ஏற்படும் கருத்து ஒற்றுமை மற்றும் கருத்து வேறுபாடு காரணமாக ஒருவரிடமிருந்து மற்றவருக்கு தூது செல்வது தூதிற்பிரிவாகும். இத்தூது அகத்தூது, புறத்தூது என இருவகைப்பட்டது. ஆனால் அகத்தூதில் பிரிவு என்பது இல்லை. புறத்தூது மட்டுமே பிரிவு நிகழும். இரு மன்னர்களிடையே ஏற்படும் போர் காரணங்களுக்காகத் தூது செல்வதே புற இலக்கியங்களில் காணப்படுகின்றன.

மன்னர் இருவரின் கருத்து வேறுபாட்டினால் அல்லது மண்ணாசையினால் பெரும்பாலும் போர் நிகழக் கூடும். இதனால் வீரர்கள், மக்கள், விலங்குகள் முதலான உயிர் சேதங்களைத் தவிர்க்க தூது நிகழ்ந்ததற்கான சான்றுகள் உள்ளன.

அதியமானுக்கும் தொண்டைமான் இளந்திரையனுக்கும் நடக்க இருந்த பெரும் போரை ஔவையார் சென்று தடுத்து நிறுத்தியதை சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன.

மேலும் சங்கப் புலவர்களான கோவூர்கிழார், புல்லாற்றூர் எயிற்றினார் ஆகியோரின் பாடல்களிலும் இருபெரும் வேந்தர்கள் இடையே நடக்க இருந்த போர் அழிவு தடுக்கப்பட்டதைக் காணமுடிகிறது.

வினைமேல் செல்லும் தலைவன் போரின் கண் பாசறை அமைத்து பிரிந்து இருந்ததும், போர் இல்லாத இரவு நேரத்தில் தலைவியை நினைத்து இருந்ததையும் அப்பாசறையின் கண் இரவு நேரங்களில் பணியாற்ற புறமகளிரை அழைத்துச் சென்றதையும் முல்லைப்பாட்டு குறிப்பிடுகிறது.

பொதுவாகப் போரில் பிரிவு ஓராண்டுக்குள் நிகழும் என்று தொல்காப்பியர் கூறுகிறார். போரின் கண் அரசன் தான் மட்டும் செல்லாமல் படைத் தலைவர்களையும், படை வீரர்களையும் அழைத்துச் செல்வது உண்டு. அவ்வாறு செல்வதை,

**“தானே சேறலும் தன்னொடு சிவணிய**
**ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே”**[48]

என்ற தொல்காப்பியரின் பாடல் உறுதி செய்வதை அறியலாம். இக்காலங்களில் பல இளைஞர்கள் போரிற்காகப் பிரிந்து இராணுவத்தில் இணைந்து நாட்டிற்கு தொண்டாற்றும் பிரிவை பார்க்க முடிகிறது.

**துணைவயிற் பிரிவு**

தன் நண்பனாக விளங்கும் மன்னனுக்கு ஏற்படும் துன்பங்களை நீக்குவதற்கும் அவனுக்கு உற்றுழி உதவி செய்வதற்கும் பிரிவதே துணை வயிற் பிரிவாகும் இதனை, ‘வேந்தர்க் குற்றுழிப்பிரிவு’ என்று கூறுவர்.

**“வேந்தர்க்குற்றுழித் தலைவன் பிரிவு என்பதால் அந்த அரசன் கீழ்ச் சேவகம் செய்து பிழைக்கின்றானென்று பொருள் இல்லை. தனக்கு நண்பனாக இருக்கும் ஓர்**

**அரசனுக்கு ஏதாவது ஒரு காரணத்தால் விபத்து நேரிடின் அதனை நீக்குவதற்குப் பிரிவான்"**[49]

என்பர் நக்கீரர்.

தேவையின் பொருட்டுத் தத்தம் நாட்டைவிட்டு அயல் நாட்டுக்கு போக வேண்டி வந்தது. இத்தகைய நிகழ்ச்சிகளை வேந்தர்க் குற்றுழிப் பிரியும் பிரிவுகளாகக் கருதலாம். இத்தகைய பிரிவு ஓராண்டிற்கு உட்பட்டே அமையும் என்பர்.

மேலும் தலைவனை நாடி வரும் இரவலருக்கு இல்லை எனாமல் பொருள் கொடுப்பதே இல்லறத்தின் அறப்பண்பாகும். எனவே இல்லை என்பவருக்கு கொடுப்பதற்கும் தன்னிடத்தில் பொருள் இல்லை என்று சொல்லாமல் இருப்பதற்கும் மட்டுமே தலைவன் பொருளீட்ட பிரிந்து சென்றிருக்கிறான் என தோழி தலைவிக்கு ஆறுதல் கூறும் பாடலும் காணப்படுகிறது.

பொருள்வயிற் பிரிவு

பொருள் தேடுவதன் காரணமாகப் பிரியும் பிரிவு பொருள் வயிற் பிரிவாகும். தன்னிடம் எவ்வளவு பொருளிலிருந்தும் தனது முன்னோர்கள் சேர்த்து வைத்த பொருளைக் கொண்டு நாம் வாழ்தல் சிறப்பன்று.

பொருள் அறத்திற்கு மட்டும் தேவையானதல்ல, மறத்திற்கும் அ∴து வேண்டுவதாகும். செறுநர் செறுக்கறுக்கும் கூரியவாள் செல்வமின்றி வேறொன்றில்லை. பொருள் மிக்கவரிடமே படையும் அஞ்சிப் பின் தங்கி நிற்பர் என்ற லேனா தமிழ்வாணன் கூற்று குறிப்பிடத்தக்கது.

கற்றறிந்தார் ஏத்தும் கலி என போற்றப்படும் கலித்தொகையில் ஒரு பிரிவான பாலைக்கலியில் பொருள் வயிற் பிரிதலைப் பாங்குறக் கூறப்பட்டுள்ளது. தலைமகன் பொருள்வயிற் பிரியக் கருதுவது எதனால் எனின் பொருளீட்டி அருளாளர்க்கு அளிக்கவும், பகை வென்று

மேம்படவும் தலைவியிடம் காதலின்பம் துய்க்கவும் ஆகிய காரணங்களின் பொருட்டேயென்று வேறொன்றுமில்லை எனத்தலைவி தோழிக்கு சில பாடல்கள் மூலம் விளக்குகின்றாள். இவற்றில்,

**"அரிதாய அறன் எய்தி அருளியோர்க்கு அளித்தலும்**
**பேரிதாய பகை வென்று பேணாரைத் தெறுதலும்**
**புரிவு அமர் காதலின் புணர்ச்சியும் தரும் என,**
**பிரிவு எண்ணிப் பொருள்வயிற் சென்ற நம் காதலர்**
**வருவர் கொல்; வயங்கிழா அய்! வலிப்பல், யான்**
**கேளள் இனி;"**[50]

என்பதை பொருளுக்கான பிரிவாக கலித்தொகை மூலம் அறியப்படுகிறது.

தலைவன் தன்னிடம் பொருள் இல்லாத காரணத்தால் மட்டுமே பொருள் ஈட்டப்பிரிவதில்லை. தனது முன்னோர், பெற்றோர், குடி பெருமையால் மிகுந்த செல்வங்களைப் பெற்று இருந்தாலும் அதனை அனுபவிப்பது தனது ஆண்மைக்கு பெருமையன்று என நினைத்துத் தனது வாழ்க்கைக்கானப் பொருளைத் தாமே ஈட்டவேண்டும் என்ற அறச்செயலுக்காவே எண்ணிப்பிரிவான்.

பரத்தையிற் பிரிவு

பரத்தையிற் பிரிவென்பது பொதுப் பெண்டிர்மாட்டுப் பிரியும் பிரிவு ஆகும். மாத விலக்கு காரணமாகத் தலைவன் அவர்களை நாடிச் செல்வானென்று எண்ண வேண்டியதில்லை. தலைமகளை விட்டு அப்பொதுப் பெண்டிரின் ஆடல் பாடல்களைக் காண்பதற்காகவும் பிரிவானென்று கருதல் வேண்டும். இவ்வாறு செல்லும் பொழுது சிலர் தலைவியை விட்டுச் செல்வர். சிலர் தம்முடன் கூட்டிச் செல்வர்.

தலைமகளை விட்டுச் செல்லும் போது நிகழ்ச்சிகளின் மீது ஊன்றி நிற்கும் தம் உணர்ச்சி மிகுதியால் தலைவி மீது கொண்ட உணர்ச்சியை மறைக்கும். ஏனெனில் இரண்டு உணர்ச்சிகள் ஒருங்கே இருப்பது இயற்கைக்கு முரணானது. இதனால் தம் உணர்ச்சி முழுவதும் அரங்க

நிகழ்ச்சிகளிலேயே ஈடுபட்டிருக்கும். அரங்க நிகழ்ச்சிகளில் பங்கு பெறுவோர் பொது மகளிராக இருப்பின் எத்தனையோ செல்வர்கள் மயங்கி அப்பொதுப் பெண்டிர்களுடன் உறவு கொள்வதையும் காணலாம்.

தமிழரிடம் பரத்தையர் உறவு இருந்தது. அரசரும், மறவரும் படையெடுப்புக் காலங்களில் வெளி ஊர்களுக்கு செல்வர். பாசறையமைத்துத் தங்குவர். அப்போது அவர் தம்முடன் குலப்பெண்டிரை அழைத்துச் செல்லுதல் ஆகாது என்ற கட்டுப்பாடு இருந்தது. இதனை,

**"எண்ணரும் பாசறைப் பெண்ணொடு புணரார்"**[51]

என்பார் தொல்காப்பியர்.

சங்க இலக்கியப் பாடல்களில் பரத்தையரைப் பற்றி முழுமையாக அறிந்து கொள்ளும் வகையில் செய்திகள் நமக்கு அதிகம் கிடைக்கவில்லை. சங்க இலக்கியப் பரத்தையர் தலைவன் தலைவியரின் ஊடலுக்குப் பிண்ணணியாகவே சித்தரிக்கப்பட்டுள்ளனர். பரத்தை என்ற சொல் 13 இடங்களிலும் பரத்தமை என்ற சொல் ஒரே ஒரு இடத்திலும் மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளதைக் கொண்டே இதனை உணரலாம். பரத்தை பற்றிய செய்திகள் பாடல்களில் இடம் பெற்றுள்ள வழியும், பரத்தை தொடர்பான அடிக்குறிப்பு வழியுமே பெறப்படுகின்றன என்றுரைப்பர்.

தந்தை வழிக்குடும்ப அமைப்பின் கற்புக் கோட்பாட்டுக்கு உட்பட்டவர் இல்லப்பரத்தையர். அவர்கள் குடும்பப் பெண்களின் ஒழுக்கத்தைக் காக்க உதவும் சாதனம் என்று குறிப்பிடுவதால் பரத்தையர்க்கு அவ்வொழுக்கம் தேவையற்றது என்பது உறுதியானது. அதனால் வரையறை, கட்டுப்பாடு என்பன இல்லாதவர்களாகின்றனர். சங்க இலக்கியப் பரத்தையர் சமூக வாழ்வில் தங்கு தடையின்றி ஈடுபடுகின்றனர். சங்க இலக்கியத் தலைவி ஆடல், பாடல் அறிந்தவளாக அதனால் தலைவனை மகிழ்விப்பவளாகப் படைக்கப்படவில்லை. பரத்தையர் ஆடல் பாடல்களில் ஈடுபட்டிருக்கின்றனர். அதனால்

கலைத்துறையோடு தொடர்பில் இருப்பதால் பலரும் அறியத் தலைவனுடன் புனலாடலில் ஈடுபட்டனர்.

தலைவி கற்பொழுக்கம் உடையவள். அதனால் தன் கணவனைக் காக்கும் முயற்சியில் ஈடுபடமுயல்கிறாள். பரத்தை என்பதற்கு வரையறை இல்லை. மேலும் அவளுக்கு கட்டுப்பாடு என்பதும் இல்லை. பிறர் தன் கணவனை நாடக்கூடாது என்பது தலைவியின் எண்ணம். எனவே சங்க இலக்கியப் பரததையர் வரையறை ஏதும் இல்லாதவர் என்பது புலனாகிறது.

சமூகம் இதனை உருவாக்கியது என்பதற்கு நேரடிச் சான்றுகள் இல்லை. ஆனால் இதனைச் சமூகம் ஒத்துக் கொண்ட மரபாக ஏற்றத்தால் தான் பரத்தமை என்பது அக்காலத்தில் உருவாகியிருந்தது என்று கூற வாய்ப்பாகின்றது. மனைவியைப் பிரிந்த நிலையில் பரத்தமை மேற்கொள்ளப்பட்டாதாகச் சங்க இலக்கியச் செய்திகள் இல்லை. தலைவன் ஒரே ஊரில் தலைவியுடன் இருக்கும் போதே சாதாரணமாகவும் மகப்பேறு நிலையிலும் மகப்பேற்றுக்குப் பின்னும் பரத்தையரை நாடிச் சென்றதாகக் குறிப்புகள் காணப்படுகின்றன.

மேலும் தலைவியை பிரிந்து தலைவன் பாணனுடன் அவ்வூரில் இருந்த பரத்தையர் வீட்டுக்கு சென்று வந்ததை நந்திக் கலம்பகமும் புகார் நகரிலேயே இருந்த ஆடல் மங்கையான மாதவியுடன் கோவலன் பல ஆண்டுகள் வாழ்ந்ததை சிலப்பதிகாரமும் எடுத்துரைப்பது நோக்கத் தக்கதாகும்.

**செலவழுங்கள்**

வினைமேல் பிரிந்து செல்லும் தலைவனை வழியனுப்ப மனமின்றித் தலைவி மிகவும் மனம் வருந்துவாள். தலைவியின் இந்த வருத்தத்தைக் கண்டு தலைவனால் நிம்மதியாகப் பிரிந்து செல்ல முடியாது. எனவே அவன் தலைவியை ஆற்றுவிப்பதற்காகத் தன்னுடைய பிரிவை

(செலவில்) சிறிது காலம் தாழத்துவான். இதுவே ‘செலவழுங்கல்’ எனப்படும்.

தலைமகளை ஆற்றிவிட்டுப் பிரிய என்னும் தலைமகன் தன் செலவினைச் சிலநாள் தள்ளிப்போடுவான். அப்பொழுது தலைமகள் மீது எழுந்த அன்பின் மிகுதியால் அவளுக்கு தலையளி செய்வான்.

அதாவது அழுதக் கண்ணீரைத் துடைப்பான். நெற்றியை நீவிவிடுவான். கூந்தலைக் கோதிவிடுவான். இதற்குத் தலையளி என்பர். தலைவன் பொருளீட்ட செல்வதால் தலைவி மகிழ்வது இல்லை. அவன் மீது கொண்ட அன்பு மிகுதியின் காரணமாக அப்பிரிவை தாங்காது உயிர் பிரிந்து விடுமே எனவும் எண்ணுவாள். ஆனால் தலைவனின் உறவினர்கள் அவன் பொருளீட்டி வருவதை எண்ணி மகிழ்வார்கள் இதனையே,

**“செல்லாமை உண்டேன் எனக்குரை மற்றைநின்**
**வள்வரவு வாழ்வார்க்கு உரை”**[52]

என்று வள்ளுவர் குறிப்பிடுகிறார்.

இந்த நோக்கத்திலேயே பட்டினப் பாலை பாடலில் வரும்,

**“முட்டாச் சிறப்பின் பட்டினம் பெரினும்**
**வாரிருங் கூந்தல் வயங்கிழை ஒழிய**
**வாரேன் வாழிய நெஞ்சே”**[53]

என்னும் பாடல் வரிகள் அமைந்து இருப்பது செலவழுங்கலின் சிறப்பைப் பதிவு செய்வதாகும்.

இப்பொழுதும் கணவன் ஏதோவொரு வினையின் காரணமாக வெளிநாட்டிற்குப் பிரிந்து செல்லும் போது மனைவி தனிமையை நினைத்து மிகவும் வருத்தமடைவாள். அதைக்கண்டு மனம் பெறாத கணவன் தன்னுடைய செலவைச் சில காலம் தள்ளி வைத்துப் பின் பிரிந்த செல்வதை நாம் காணலாம்.

## ஆய்வுத் தொகுப்புரை

பண்டைத் தமிழர்கள் தங்கள் வாழ்க்கையை அகம், புறம் என இரு பிரிவாகப் பகுத்து வாழ்ந்தனர். அகத்திணையான காதல் வாழ்க்கையும் புறத்திணையான வீர வாழ்க்கையும் தங்கள் பண்பாட்டின் இரு கண்களாகக் கொண்டு வாழ்ந்து உள்ளனர் என்பதை சங்கப் பாடல்கள் மூலம் அறிய முடிகிறது.

குறிப்பாக அகத்திணையைப் பற்றிச் சுட்டும் தொல்காப்பியர் களவு, கற்பு என்னும் அறம் சார்ந்த வாழ்வியலை விளக்கியுள்ளார்.

அகத்திணை மாந்தர்களான தலைவி, தோழி, செவிலி, நற்றாய் ஆகியோரின் அறச் செயல்கள் இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

அறம், பொருள், இன்பம், வீடு என்ற நால்வகைப் பொருள்களையும் பேரிலக்கியங்கள் விளக்குகின்றன. நால்வகைப் பொருள்களில் முதன்மையான அறம் என்பதற்கு நற்செயல் என்று குறிப்பிடுவர் என்பது ஆராயப்பட்டுள்ளது.

அறம் தான் மனித வாழ்வியலுக்கு உயர்வைக் கொடுத்து உதவுவதோடு வாழ்வியல் நலத்தை நிலை நாட்டுகிறது என்பதும் அறியப்பட்டுள்ளது.

இவ் இயலில் ஐந்திணைகளில் நிகழும் களவு வாழ்க்கையும், கற்பு வாழ்க்கையும் இவற்றில் நிகழும் பிரிவு வகைகளும் உடன் போக்கு என்னும் அறச்செயலும் பிரிவினால் ஏற்படும் செலவழுங்கல் செய்திகளும் அகத்திணைப்பாடல் வழி விரிவாக ஆராயப்பட்டுள்ளது.

**சான்றொண்விளக்கம்**

1. தொல்காப்பியம், நூ.754
2. மேலது., நூ.1000
3. குறள் எண்.- 34
4. க.த.திருநாவுக்கரசு திருக்குறள் நீதி இலக்கியம் ப.78
5. மணிமேகலை காதை, வரி.228-231
6. குறள் எண்.93
7. தொல்., களவு நூ.89
8. மேலது., களவு, நூ.23
9. பழமொழி எண்.286
10. புறநானூறு பா.192
11. குறள் எண்.243
12. குறுந்தொகை பா.49
13. மேலது., பா.322
14. மேலது., பா.323
15. கலித்தொகை பா.18
16. அகநானூறு பா.66
17. தொல், நூ.1059
18. அகநானூறு பா.378
19. குறுந்தொகை பா.290
20. அகநானூறு பா.185
21. மேலது பா.170
22. ஐங்குறுநூறு மருதத்தினை பா.2
23. குறுந்தொகை பா.135
24. கலித்தொகை பா.38
25. குறள் எண்.77
26. முத்துலக்குமி., தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள்., ப.45
27. அகநானூறு பா.170
28. தொல்., களவு. நூ.-1061
29. மேலது., பொருளியல் நூ-1154

| | |
|---|---|
| 30. மேலது., கற்பு | நூ.140 |
| 31. மேலது., களவு | நூ.1084 |
| 32. நம்பியகப் பொருள் | நூ.48 |
| 33. குறிஞ்சிப்பாட்டு | வரி.13-18 |
| 34. தொல்.,களவியல் | நூ.1060 |
| 35. மேலது | நூ.1216 |
| 36. தொல்., களவியல் | நூ.1059 |
| 37. ஐங்குநுறூறு | பா.390 |
| 38. மேலது | பா.382 |
| 39. மேலது | பா.399 |
| 40. சிதம்பரம்பிள்ளை., சங்க இலக்கியத்தில் பரத்தமை.,ப.27 | |
| 41. தொல்காப்பியம் | நூ.1443 |
| 42. மேலது., | நூ.1088 |
| 43. மேலது., | நூ.1091 |
| 44. மேலது., | நூ.1169 |
| 45. இறையனாரகப் பொருள் | நூ.35 |
| 46. தொல்காப்பியம் | நூ.980 |
| 47. மேலது., | நூ.1134 |
| 48. மேலது., | நூ.972 |
| 49. நக்கீரர் இறையனாரகப் பொருள் உரை. | பக்.90 |
| 50. கலித்தொகை | பா-11 |
| 51. தொல்., | நூ.-1121 |
| 52. குறள் | எண்.1151 |
| 53. பட்டினப்பாலை | வரி.52 |

# இயல் -4

# புற இலக்கியங்களில் பெண்களின் வாழ்வியல் அறங்கள்

சங்கத் தமிழ் இலக்கியங்கள் காலத்தாலும் பொருளமைப்பாலும் மிகப்பழமையானவை. சங்க கால மொழியமைப்பும் பண்பாடும் மிகச் சிறப்பானவை. இயல்பான மக்கள் வாழ்வியலை அகம், புறம் என்னும் இரு கோட்பாடுகளில் வெளிப்படுத்திய சங்க இலக்கியங்கள், இப்படித்தான் வாழவேண்டும் என்னும் நோக்கில் வாழ்வியலை அறிமுகம் செய்கின்றன.

எவ்வகையிலும் பிறரைத் துன்புறுத்தாதிருத்தல், இயன்ற அளவு உதவுதல் முதலியன சங்ககாலப் பொது அறங்கள் என்னும் சிறப்பினைப் பெறுகின்றன. வாழ்வியலில் அறங்கள் எவ்வகையில் எல்லாம் ஊடுபொருளாக நிற்கின்றனவோ அவ்வழிகளை இவ்விலக்கியங்கள் தெளிவுப்படுத்துகின்றன. அறம் என்பதற்கு பல்வேறு கொள்கைகளும், கோட்பாடுகளும் வரையறை செய்யப்பட்டிருந்தாலும் அறம் என்பது மாட்சிமைப்பட்ட சிறந்த வாழ்வென்பது பெறப்படும். எட்டுத் தொகை, பத்துப்பாட்டு என்னும் இலக்கியத் தொகைகளில் கூறப்பட்டுள்ள அறங்கள் மனித சமுதாயப் பண்பாட்டு வளர்ச்சியின் முக்கியக் கூறு என்பது தெற்றென விளங்கும். தான் செய்யும் செயல், செயல்களின் விளைவு, விளைவின் பயன் முதலானவை இலக்கியங்கள் வாயிலாகவே கற்பிக்கப்படுகின்றன. அ.்.றினை உயிர்களின் மூலமாக அன்பு வாழ்க்கை, வறுமையிலும் செம்மை, உயிர்களைப் போற்றல், உயர்ந்தோரை மதித்தல் என்றும் உயரிய பண்புகளின் உறைவிடமாகச் சங்க இலக்கியங்கள் திகழ்கின்றன. அக்கருத்துக்களின் வழிநின்று பொது நலச் சிந்தனைகளையும் வழங்குவதில் சிறந்த பாடுபொருளைக் கொண்டு விளங்குகின்றன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை முதலிய

ஐந்திணைகளின் வழி முதல், கரு, உரிப்பொருள்களின் கூறப்படும் அறம் புறத்திணையில் ஏழு திணைகளின் வாயிலாக வெளிப்படுத்துகிறது.

சொல்ல வந்த பொருளைச் சிறப்பாகவும், நல்வழிப்படுத்தும் வகையிலும் சொல்வதே சிறந்த இலக்கியம் ஆகும். இவ்விலக்கியங்கள் பல்வேறு பாடல்களின் தொகுப்பாக அமைந்திருந்தபோதும், படைக்கப்பட்ட காலமும் கருத்தமைவுகளும் குறிப்பிட்டப் பொருளை வலியுறுத்திக் கூறுவதில் சிறப்பிடம் பெறுகின்றன. பொருள் வளத்திலும், பண்பாட்டிலும், பிறருக்கு வழங்கி அருளும் குணமும் நிரம்பப் பெற்ற பேரரசர்கள், மன்னர்கள், சிற்றரசர்கள், குறுநில மன்னர்கள் முதலியோரின் அறச்சிந்தனைகள் முதல் கொடைவழங்கும் மனப்பான்மை வரை இலக்கியத்துள் ஊடுருவி நிற்கின்றன. இவ்ஆய்வு சங்க இலக்கியத்துள் கூறப்பட்டிருக்கும் பெண்களின் வாழ்வியல் அறங்களை வெளிக்கொணர்ந்து அதன் நோக்கங்களை வெளிப்படுத்தும் முறையில் அமைக்கப்பட்டுள்ளது. அறச்சிறந்தனைகளை எடுத்துக்கூறும் வகையில் சமூகப் பண்பாடு மிக்கதாகவும் இவ்ஆய்வு விளங்கும்.

> **“முன்னியலில் கூறப்பட்ட அறம் என்பதற்கான பொருள் விளக்கங்களைப் போலவே வேறு சில அறிஞர்கள் கூறும் விளக்கங்களும் அதைப்பற்றி தரவுகளும் இவ்வியலில் தொடர்ச்சியாக விளக்கப்பட்டுள்ளது. அறமே அறிவு அறிவே அறம் எனக் கிரேக்க நாட்டு தத்துவ ஞானிகளாகிய சாக்கிடீசு, பிளாட்டோ போன்றவர்கள் அளித்த வரையறைகளுக்கேற்ப மனிதனுக்கு செயற்பாட்டு அறிவைத் தந்து, அவனைச் செயலறம் பேணும் அறப் பேரறிஞனாக, வாழத் துணை நிற்பது ‘அறிவியல்’ என விளக்கம் கூறுவது மரபு”**[1]

என்று வாழ்வியல் களஞ்சியம் குறிப்பிடுகின்றது.

அறம் என்னும் சொல் பல்வேறு நிலையில் ஆழ்ந்த பொருளுடன் எல்லையற்ற வகையில் விரிந்து கிடக்கிறது. அதன் முடிவான பொருளைத் தேடுதல் இயலாத ஒன்றாகிறது. தனிமனிதனின் ஒழுக்க நடைமுறைகள் அவனளவில் நற்செயல் விளையும் களமாகி அவன் மூலமாகச் சமுதாயத்திற்கு நகரும் நற்செயல்களின் தொகுதியே அறம் எனக் கொள்ளலாம். நற்செயல்களைத் தன்னில் இருத்திக் கொண்டு பொருள் தரும் இயல்பு உடையது.

இவ்வாறு, மேற்கூறிய வரையறைகளிலிருந்து அறம் என்பதற்கு தருமம், புண்ணியம், வாய்மை, ஈகை, சொற்காத்தல், பெரியவர்களை மதித்தல், கற்பு, அன்பு, தகுதி, சமயம், ஞானம், துறவு, தியாகம், கொடை எனப் பலப்பொருள்கள் இருப்பதை அறியமுடிகிறது. எனவே, அறம் என்பதற்குச் சொல்லாலும் செயலாலும் பண்பட்ட நிலையில் நற்சிந்தனை மேலோங்க வாழ்வதையே பொருளாகக் கொள்ளலாம்.

**அறத்தின் தோற்றம்**

மனித சமுதாயம் நீண்ட நெடிய வரலாற்றைக் கொண்டது. காட்டுமிராண்டி நிலையில் இருந்த மனிதன் ஒருவருக்கொருவர் ஒத்துழைக்கத் தொடங்கிய போதே, வரலாறு அறியாக் காலத்திற்கு முன்பே அறம் தோற்றம் பெற்றிருக்க வேண்டும். மனிதன் கூட்டமாகச் சேர்ந்து வாழத் தலைப்பட்ட ஆற்றங்கரை நாகரிகங்கள் சிறப்பான அறங்களின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் உரியதாகத் திகழ்ந்திருக்க வேண்டும். கி.மு.வின் முதல் சில நூற்றாண்டுகளில் மிகச் சிறந்து விளங்கிய சிந்து சமவெளி ஹரப்பா நாகரிக நகரங்கள் நல்ல கட்டமைப்போடு கூடியனவாய் விளங்கியவை. இவ்வளவு வளர்ச்சியும் பெற்ற நாகரிங்களில் அறிவார்ந்த அறம் நிறைந்த மக்களும் வாழ்ந்திருத்தல் கூடும். தொல்பொருள் ஆய்வில் கண்டெடுக்கப்பட்ட பல்வேறு தெய்வ உருவங்கள் வழிபாட்டுத் தன்மையிலான அறங்களையும் நகர அமைப்புகளால் கடைபிடிக்கப்பட்ட வாழ்வியல் அறங்களையும் ஊகிக்கச் சான்றாய் அமைகின்றன.

நமக்குக் கிடைத்துள்ள தமிழ் இலக்கண இலக்கியங்கள் அறத்தைச் சிறப்பாகப் பேசுகின்றன. தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு போன்ற சங்க இலக்கியங்கள் மற்றும் பிற்கால இலக்கியங்கள் எல்லாம் எல்லையற்ற நிலையில் அறச்சிந்தனைகளை வெளிப்படுத்தியுள்ளன.

> **"**பழங்கால மக்கள் பசி, பிணி, பகை, வறுமை ஆகிய வாழ்க்கைப் போராட்டங்களுக்கிடையே இன்பமும், பொருளும் பெறப் பல்வேறு நெறிகளைப் பின்பற்றியிருப்பர். இந்நெறிகளில் பிறருக்குத் தீங்கு பயவாத நல்ல நெறியிலேயே ஒழுக வேண்டும் என்ற ஒழுகலாறு கட்டுப்பாடாக கடமை உணர்வாக மக்களிடையே வளர்ந்து ஏற்றுக் கொள்ளப் பெற்றிருத்தல் வேண்டும். மரபொழுக்க நிலையில் இவ்வாறு ஏற்றுக் கொள்ளப் பெற்ற நெறிகளையே அறங்கள் என இலக்கியங்கள் வலியுறுத்துகின்றன. அறநெறியில் ஈட்டப்பெறாத செல்வமும் இன்பமும் நிலையற்றவை என்று எண்ணும் நிலை ஏற்பட்டது. வஞ்சனையால் ஈட்டப் பெறும் செல்வமும் இன்பமும் பழியென்று கருதப்பட்டன. அறநெறியில் வாழ்தலே சிறப்பு என்றும் பண்டைத்தமிழர் கருதினர். இத்தகைய கருத்துக்களைத் தரும் அறநூல் இருந்தமையை அறம் பாடிற்றே என்ற தொடர் குறிக்கின்றது**"**[2]

என்பர் முத்துலக்குமி.

அகப்பாடலாயினும் புறப்பாடலாயினும் தாம் எடுத்துக் கொண்ட அறத்தைத் தெளிவாய் அறிவுறுத்துகின்றன புறநானூற்றுப் பாடல்கள்.

> **"**ஆவும் அனியற் பார்ப்பன மாக்களும்
> பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
> தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்
> பொன் போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்

எம்அம்பு கடிவிடுதும் நும் அரண் சேர்மின் என
அறத்துஆறு நுவலும் பூட்கை மரம்”[3]

என்று புறநானூற்றுப் பாடலொன்று போருக்கு முந்தைய அற நிகழ்வுகளைப் பட்டியலிடுகின்றது. இப்பாடலானது ஒட்டுமொத்த மனிதச் சமூகத்திற்கும் பாடம் கற்பிப்பதாய் அமைந்திருக்கிறது.

வாழ்வியல் அறங்களான சுற்றம் பேணல், விருந்து உபசரித்தல், ஈகை, பொறையுடைமை, சினம் காத்தல் எனவரும் இவையெல்லாம் இயல்பாக நடைபெற வேண்டியவை. சங்கப்பாக்கள் பலவும் அறம் செய்யவே பொருள் தேடும் நிலையை வலியுறுத்துகின்றன. இவ்வறங்கள் சரியாகக் கடைபிடிக்காதபொழுது அவ்வறங்களை எடுத்துச் செல்லும் பக்குவமுடைய வழியாக இலக்கியம் திகழ்கிறது. இதற்கு இது முடிவன்ற பொருளும் உணர வாய்ப்பாக அமைகிறது.

தனிப்பட்ட மனிதனின் வாழ்வியல் சூழ்நிலைகளால் பல்வேறு விளைவுகள் ஏற்படுகின்றன. அவ்விளைவுகளால் நிகழும் செயல்கள் பல்வேறு முரண்களால் மோதிக்கொள்ளும் போது புதிய விளைவுகள் ஏற்படுகின்றன. இப்புதிய விளைவுகள் தனிமனித நிலையிலிருந்து சமுதாயத்தையும் தாக்கும் இயல்பு கொண்டவை. மனிதனின் ஆசைகளும் செயல்களும் தான் துன்பத்தின் தொடக்கத்திற்கு அடித்தளமமாக அமைகின்றன. இங்கு ஆசைகளற்ற அடித்தள மனத்தை உருவாக்க முனைகையில் அதுவே மிகப்பெரிய அறமாக விளங்கும் தன்மையைப் பெறுகிறது. மனிதர்கள் ஒருவரை ஒருவர் சார்ந்து ஒருவருக்கு ஒருவர் உதவி செய்து வாழ்வதே அறம்.

**அறத்தின் வளர்ச்சி**

உயிர்களின் பரிணாம வளர்ச்சி போன்றே கருத்துகளும் படைப்புகளும் வளர்ச்சியை உடையவை. ஒரே கருத்து பல்வேறு பொருள்களில் பல்கிப்பெருகும் இயல்பு உடையது. ஒரே மரம் பல்வேறு மரங்களைத் தன் விதைகளால் பெருக வைப்பது போல ஒரு கருத்து

சமூகப் பயன்பாட்டுக்குள் வரும்போது பல்வேறு பொருள்களில் ஆளப்படுகிறது. அறம் என்னும் சொல்லுக்கும் அத்தகைய சிறப்பு உண்டு. ‘அறம்’ என்னும் சொல் காலம் தோறும் புதியபுதிய பொருள்களைப் பெற்று வந்திருக்கிறது. பொதுவாகச் சங்க காலத்தில் நல்ல செயல்களுக்கு அடைமொழியாக அறம் பயன்படுத்தப்பட்டது. உயர்ந்த பொருளை, செயல்களை வகைப்படுத்த அறம் பயன்பட்டது. காலப்போக்கில் சங்கம் மருவிய காலம் அறச்சிந்தனையில் புதிய கருத்துக்களைப் புகுத்தியது. சங்ககாலம் போல் அல்லாமல் இக்காலத்தில் அறம், நீதி என்னும் பொருளில் ஆளப்பட்டது. இது செய்தால் இது பயன் என்னும் நோக்கில் படைப்புகள் வெளிவந்தன. இதனை,

**“நன்றியறிதல் பொறையுடைமை இன்சொல்லோடு**
**இன்னாத எவ்வுயிர்க்கும் செய்யாமை கல்வியோடு**
**ஒப்புர வாற்ற வறிதல் அறிவுடைமை**
**நல்லனத்தாரோடு நட்டல் இவையெட்டும்**
**சொல்லிய ஆசார வித்து”**[4]

என்னும் பாடலில் நன்றி மறவாமை, பொறுமை, இன்சொல் பேசுதல், பிற உயிர்க்குத் துன்பம் செய்யாமை, கல்வி, உயர்ந்த தன்மை, அறிவுடைமை, நற்பண்பு உள்ளவரோடு நட்புச் செய்தல் ஆகிய செயல்களை உயர்ந்தவையாக ஆசாரக்கோவைக் குறிப்பிடுகிறது. இவையெல்லாம் அறத்தின் பாற்பட்ட செயல்களாகும்.

**அறத்தின் பல்வேறு பரிணாமங்கள்**

அறம் என்னும் சொல் பல்வேறு பொருள்களைக் கொண்டது. இன்னதுதான் அறம் என்று முழுமையாய் பொருள் கூறிவிட இயலாது. அறத்தின் தோற்றத்திற்கான முதல் களம் மனம். மனிதன் இயற்கையான வாழ்க்கை வாழ்ந்தபோது பொருள் பற்றிய சிந்தனையோ, வீடுபேறு எண்ணமோ ஏற்பட்டிருக்க சிறிதும் வாய்ப்பில்லை. அவனுடைய நாடோடி வாழ்க்கை முறையில்தான் தேடல் தொடங்கியிருக்கும். ஓர் உயிர் இன்னோர் உயிரைச் சார்ந்தே வாழவேண்டும். ஆதிமனிதன் தன்

உணவுக்காகப் போராட வேண்டிய நிலையில் இருந்தான். இயற்கை உணவுகளை உண்ட மனிதன் விலங்குகளையும் வேட்டையாடி உண்டான். உயிர்பாவம் என்ற சிந்தனை அவனுக்கு எழவில்லை. சமுதாய அமைப்பான வீடு தோன்றிய நிலையில்தான் பொருள், இன்பம் என்னும் இரு கூறுகள் தோற்றம் பெற்றிருக்க வேண்டும். வீட்டில் தங்கிவாழத் தலைப்பட்ட நிலையில் தன் உணவுக்காகப் பயிரிடுதல் தொடங்கிக் காத்தல், அறுவடை செய்தல், பகிர்ந்தளித்தல் என்னும் நிலையிலேயே அறம் தொடங்குகிறது. இன்பமும் வருகிறது. சங்ககாலப் பாக்கள் பலவும் மக்களின் வழிபாட்டு முறைகளைக் கூறுகின்றனவேயின்றி நாற்பொருள் சிந்தனைகளை முறைப்படி கூறவில்லை. சிவ வழிபாடு, திருமால் வழிபாடு இடம் பெற்றிருந்த போதும் மதங்கள் தோற்றம் பெறவில்லை. இயற்கையான நடுகல்வழிபாடு, கொற்றவை வழிபாடு, வேலன் வெறியாடல், இல்லுறை தெய்வத்தை வணங்குதல் என்னும் கூறுகளே மிகுந்திருந்தன.

சிவவழிபாட்டை,

**“ஏற்றுவலன் உயரிய எரிமருள் அவிர்சடை**
**மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும்”**[5]

என்று புறநானூறு பாடல் வரிகள் குறிப்பிடுகிறது. நெல்லும் மலரும் தூவிப் பெண்கள் இல்லுறை தெய்வத்தை வழிபட்டமையை நெடுநல்வாடை கூறுகிறது. இவ்வாறாக வழிபாடு பற்றிய சிந்தனை இருந்தபோதும் வீடுபேறு உணர்த்தப்படவில்லை. சங்கம் மருவியகால இலக்கியங்களுள் நன்மை, தீமை என்னும் இருநிலையில் மட்டுமே இருந்து அறம் உரைக்கின்றன. வள்ளுவரும் அறம், பொருள், இன்பம், என்னும் முப்பொருளை மட்டுமே கூறியுள்ளார்.

இடைக்கால இலக்கிய காலமான பக்தி இலக்கியப் படைப்பு காலத்தில் இறைவனைத் தொழுது அவளது பாதத்தை அடையும் வழிகள் பெரும்பான்மையும் கூறப்பட்டன. சித்தர் பாடல்கள் பலவும் வாழ்க்கையின் பொய்யான பிம்பத்தைக் கூறித் துறவையும், வீடு பேற்றையும் கூறின. இதனைத் தொடர்ந்தே நாற்பொருள் சிந்தனை

மேலோங்கி நிலைபெற்றது. முழுமையடைந்த இலக்கியப் படைப்பு என்பது அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்களை நிலைநிறுத்துவதில் காப்பியக்கால இலக்கியங்கள் முழுமையும் வெற்றி பெற்றிருக்கின்றன. ஆனால் அதற்கு முந்தைய கால இலக்கியங்கள் எல்லாம் உறுதிப்பொருள்களைக் கோடிட்டுக் காட்டியதோடு இலக்கியப் பொருளை முடிவு செய்து நிறைவு பெறுகின்றன.

**மகளிரின் வாழ்வியல் அறங்கள்**

சங்ககாலத் தமிழரின் வாழ்க்கையானது காதலையும், வீரத்தையும் அடிப்படையாகக் கொண்டது. அகம், புறம் என்ற மொழியமைப்பிலான இரு எதிரிணைகள் மூலம் கட்டமைக்கப்பட்ட தமிழர் அமைப்பானது ஏற்கனவே நிலவிய தாய்வழிச் சமூக அமைப்பினைச் சிதைத்து ஆணின் வயப்பட்டதாக மாற்றி அமைக்கப்பட்டது. சங்க காலத்திலிருந்த சமுதாயச் சூழல்களையும் அதில் பெண்களின் வாழ்வியல் சூழல்களையும் சங்கப்பாடல்கள் விரிவாக எடுத்துரைத்துள்ளன.

சங்ககாலப் பெண்கள் புலமையுடையவராகவும், தூது சொல்லும் அளவுக்குத் துணிவுடையவராகவும் தன்னம்பிக்கை மிக்கவராகவும் காணப்படுகின்றனர். ஆண்களுக்கு இணையான புலமையை பெண்களும் பெற்றுள்ளமையை அறியமுடிகிறது.

சங்ககாலப் பெண்கள் ஐவகை நிலப்பகுதியிலும் வணிகம் நடத்தியுள்ளனர். ஏவல் மகளிராய் பணிபுரிதல், காவல் காத்தல் எனப் பெண்கள் பல்வேறு பணிகளைப் புரிந்துள்ளமையை சங்கப் பாடல் காட்டுகின்றன.

**பெண்பாற் புலவர்கள் பாடிய போர் அறம்**

போர் நடைமுறையானது ஆணுக்குரியதாக முழுதும் மாறிவிட்ட பின்னரும் மூதின் முல்லை மகளிர், மறக்குடி மகளிர் பற்றிய குறிப்புகளைச் சங்கப்பாடல்களில் காண இயலுகின்றது. ஆணின்

அதிகாரத்தை நிறுவுதற்கான போரில் இனக்குழு வீரம் முதன்மைப் படுத்துவது போல, தாய் தன்னுடைய ஆண் மக்களை போருக்கு அனுப்புவதும் சிறப்பானதாகக் கருதப்பட்டது. புறத்திணையில் பாடிய கவிஞர்கள் ஆண் குழந்தைகளின் வீரத்தைப் போற்றுகின்றனர். பெண் குழந்தை சார்பாக அவர்களுடைய திறமை எங்குமே பாடப்படவில்லை.

மீன் உண்ணும் கொக்கின் இறகைப் போன்ற நரைத்த கூந்தலை உடைய மூதாட்டி அவளுடைய மகன் போர்களத்தில் ஆண் யானையைக் கொன்று தானும் மாண்டான் என்ற செய்தி கேட்டவுடன் அவனைப் பெற்ற காலத்திலும் மகிழ்ச்சி கொண்டாள் என்று பூங்கன் உத்திரையார் கூறியுள்ளார். இதனை,

**"மீன்உண் கொக்கின் தூவி அன்ன**
**வால்நரைக் கூந்தல் முதியோள் சிறுவன்**
**களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை**
**ஈன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்**
**நோன்கழை துயல்வரும் வெதிரத்து**
**வான்பெயத் தூங்கிய சிதரினும் பலவே"**[6]

என்ற பாடல் விளக்குகிறது. போரிலே தன்னை எதிர்த்து வந்த யானையைக் கொன்று தானும் இறந்தான் என்று சான்றோர் உரைத்த செய்தியைக் கேட்டதால் அடைந்த மகிழ்ச்சி அவனைப் பெற்ற போது அடைந்த மகிழ்ச்சியை விடப் பெரிதாகும். அந்த மகிழ்ச்சியால் அவள் சொரிந்த கண்ணீர் வன்மையான மூங்கிலிடத்து மழை பெய்த போது பொருந்தி விழும் நீர்த்துளிகளை விடப் பலவாகும் என்று சங்ககால வீரத்தாயாரின் மறமாண்பு கூறப்பட்டுள்ளது.

தன் மகன் போர்களத்தில் புறமுதுகிட்டு வீழ்ந்தான் என்ற செய்தி கேட்டு கோபமடைந்த வீரத்தாய், அவன் அவ்வாறு செய்திருப்பின் அவனுக்குப் பாலூட்டிய மார்பை அறுத்தெறிவேன் என்று வஞ்சினம் உரைத்துக் கையில் வாளுடன் போர்க்களம் சென்றாள். போரில் அவன்

வீரமரணம் அடைந்தது அறிந்து அவன் பிறந்த நாளினும் பெரிதும் மகிழ்ந்தாள் என்று மறத்தமிழ்த் தாயின் வீரம் கூறப்பட்டுள்ளது. இதனை,

"நரம்பு எழுந்து உலறிய நிரம்பா மென்தோள்
முளரி மருங்கின் முதியோள் சிறுவன்
படை அழிந்து மாறினன் என்று பலர்கூற
மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்ட என்
முலை அறுத்திடுவென் யான் எனச் சினை இக்
கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்
செங்களம் துழவுவோள் சிதைந்துவே றாகிய
படுமகன் கிடக்கை காணூஉ
ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனவே"[7]

என்று காக்கை பாடினியார் பாடியுள்ளார்.

தொடர்ந்த போர்களில் தனது நெருங்கிய உறவினர்களை இழந்தவள், போர்ப்பறை கேட்டவுடன், தன்னுடைய ஒரே மகனின் தலைக்கு எண்ணெய் தடவி வெள்ளுடை உடுத்தி, கையில் வேலைத் தந்து "போருக்குக் போ" என்று அனுப்புகிறாள் என்று சங்க காலத் தமிழ்ப் பெண்களின் வீரத்தை எடுத்துரைக்கிறார் ஒக்கூர் மாசாத்தியார்.

"கெடுக சிந்தை கடிதுஇவள் துணிவே
மூதின் மகளிர் ஆதல் தருமே
மேல்நாள் உற்ற செருவிற்கு இவள் தன்னை
யானை எறிந்து களத்து ஒழிந்தனனே
நெருநல் உற்ற செருவிற்கு அவள்கொழு நன்
பெருநரை விலக்கி ஆண்டுப்பட்டனனே
இன்றும் செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி
வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித்து உடீஇப்
பாறு மயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒரு மகன் அல்லது இல்லோள்
செருமுக நோக்கிச் செல்க என விடுமே"[8]

என்ற பாடல் வரிகள் மறக்குடியில் பிறந்த மகளிரும் மறப்பண்பு மிகுந்து விளங்குவதைக் கூறுகின்றன.

இவ்வாறு தாங்கள் வாழும் சமூகத்தை காத்திடவும், குறுநில மன்னர்களின் நலனுக்காகப் போரில் ஈடுபடுவதற்காகவும் ஆண் குழந்தைகளைப் பெற்றுத்தருவதுடன், அவர்கள் வீர மரணத்தைத் தழுவும் போது பெருமிதம் கொள்வதும்தான் மறக்குடிப் பெண்களின் இலக்கணம் என வரையறுக்க முயலுகின்றனர் பெண் கவிஞர்கள். தாய்க்கும், மகனுக்குமிடையிலான அன்பின் உறவினை அரசியலின் பெயரால் துண்டித்து மகனைப் போர்க்களத்தில் பலிகொடுத்து அதனை வீரம் எனப்போற்றினர். இதனை,

**“எதிரிகளின் படையெடுப்பால் - நம் குடும்பம் தழை**
**உதிர்ந்துவிட்ட மரமாகப் போனதடா தம்பீ!**
**கவலையில்லை – களம் சென்றார்; மாண்டார்!**
**ஆனாலும் இந்த,**
**நிலம் உள்ளவரையில் ‘மானங்காத்தார் என்ற பெயர் பூண்டார்!**
**என் மகனே! நீயும் தோளில்**
**பலம் உள்ளவரையில் பகையைச் சாடு!**
**பரணிபாடு! இது உன்**
**தாய்த் திருநாடு! – உடனே ஓடு! எனத்,**
**தாவி அணைத்துத் தளிர்மகன் தன்னைச்**
**சீவிமுடித்துச் சிங்காரித்து, ரத்தக்**
**காவி படிந்த வாள் கொடுத்துச்**
**“சென்று வா மகனே, செருமுனைநோக்கி!**
**என்று வாழ்த்திவிட்ட திருவிடத்துக்**
**காட்சிதனைப் போற்றிப் பாடாதார் உண்டோ!’”[9]**

என்று சங்ககாலத் தமிழ் மகளிரின் வீரம் நிறைந்த பண்பாடு போற்றுகின்ற வாழ்க்கை நெறிமுறைகளை பாடியுள்ள ஒக்கூர் மாசாத்தியாரின் பாடல்களுக்கு கவிதை வடிவில் விளக்கம் தந்துள்ளார் கலைஞர் மு.கருணாநிதி.

சங்க காலத்தில் தமிழகத்தை ஆண்ட மூவேந்தர்களான சேர, சோழ, பாண்டிய மன்னர்களிடையே ஒற்றுமை காணப்படவில்லை. கடையேழு வள்ளல்களில் காரி போன்ற குறுநில மன்னர்கள், மூவேந்தர்கள் எப்போது படை கேட்டாலும் அவர்களது படையை அனுப்புவர் ஒற்றுமையின்மையின் காரணமாக அந்தக் காலத்திலேயே தமிழர்கள் பெரும் நிலையில் வளர்ச்சி அடையவில்லை என்பதை அறிய முடிகின்றது. இருப்பினும் பெயர்பெற்ற புலவர்கள் பலர் வாழ்ந்த காரணத்தால் சங்ககாலப் பாடல்களாக நமக்கு எட்டுத்தொகையும் பத்துப் பாட்டும் கிடைத்துள்ளன.

சங்க காலத்தில் சமுதாயத்தில் ஒவ்வொருவரும் எத்தகைய கடமையை ஆற்றவேண்டும் என பொன்முடியார் என்னும் புலவர்,

**“ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே**
**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே**
**வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே**
**நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே**
**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கி**
**களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே”**[10]

என்ற பாடலில் ஒவ்வொருவரின் கடமை குறித்தும் சங்ககால வீரத்தாயார் கூறுவதாக எழுதியுள்ளார்.

மகனைப் பெற்று வளர்த்தல் என்னுடைய கடமை, அவனை மாவீரனாக்குதல் தந்தையின் கடமை, போருக்கு வேண்டிய வேல் போன்ற கருவிகளை செய்து கொடுத்தல் கொல்லனின் கடமை. நல்ல ஒழுக்கத்தையும், நிலங்களையும் தருதல் அரசனுடைய கடமை. ஒளி பொருந்திய வாளைக் கொண்டு வெல்லுதற்கு அரிய போரில் யானையை அழித்து வெற்றியுடன் திரும்புதல் மகனாகிய வீரனுக்குரிய கடமையாகும் என்று வீரத்தாயார் குறித்து கூறுவதாக அப்பாடல் அமைந்துள்ளது. அன்று முதல் இன்றுவரை தாய்தான் குழந்தையைப் பெற முடியும்.

தந்தை, ஆசிரியர்கள் அவனை சான்றோன் ஆக்குவர். அரசு சிறப்பாக இருந்தால் நாட்டில் நல்லொழுக்கம் இருக்கும். வீரத்துடன் போரிட்டு வெல்பவன் சிறந்த மகனாவான் என்பது மரபாகும். சங்க காலத் தமிழ் மகளிர் இயல்பாகவே வீரப்பண்புடன் திகழ்ந்தனர் என்பதற்குப் புற இலக்கியங்களே மிகச்சிறந்த சான்றுகளாகத் திகழ்கின்றன.

பெண்ணிய சித்தாந்தங்கள் உருவாகாத பண்டைய காலத்தில் தமிழிலக்கியங்களில் சங்க இலக்கியத்தில் மட்டும்தான் சில பெண் கவிஞர்கள் இடம் பெற்றுள்ளனர். சங்க கால சமூகம் பெண்ணிற்கும் முன்னுரிமை வழங்கியுள்ளது என்றும், சங்க கால மகளிர்நிலை அனைத்து வகையிலும் சிறந்து விளங்கியுள்ளது என்றும் தமிழ் இலக்கிய வரலாறுகள் பதிவு செய்துள்ளன.

சங்க கால மகளிர்நிலை என்பது பெண்பாற் புலவர்கள், பெண் மாந்தர்கள் என்ற இரு தன்மைகளில் வெளிப்படுகின்றது. செவ்வியல் தன்மை கொண்ட சங்க இலக்கியத்தில் பெண்பாற் புலவர்களின் பாடல்களில் இடம்பெறும் பெண்ணைக் குறித்த பதிவுகளில் உணர்வு நிலையிலும் சமூக மதிப்பு நிலையிலும் பெண்ணுக்கான தனித்த அடையாளத்தைக் கோரும் விதமாகப் பெண்பாற் புலவர்களின் பெரும்பாலான பாடல்கள் அமைந்துள்ளன.

பெண்பாற் புலவர்கள் பாடிய பாடல்கள் சங்க இலக்கியத்துள் பல உள்ளன. அவை மெல்லியல்பு வாய்ந்த பெண்களின் கவி வல்லமையைக் காட்டுவன. புறநானூற்றில் ஐம்பத்தாறு பாடல்கள் பெண்கள் பாடியவை, ஔவையார் முப்பத்து மூன்று பாடல்களையும், மாறோக்கத்து நப்பசலையார் ஏழு பாடல்களையும், நக்கண்ணையார் மூன்று பாடல்களையும், மாற்பித்தியார் இரு பாடல்களையும் பாடியுள்ளனர். ஒக்கூர் மாசாத்தியார், காக்கைப் பாடினி நச்செள்ளையார், காவற்பெண்டு, குளம் பாதாயனார், குறமகள் இளவெயினி, தாயங் கண்ணியார், பாரிமகளிர், பூங்கணுத்திரையார், பெருங்கோப்பெண்டு,

பேய்மகள் இளவெயினி, வெண்ணிக்குயத்தியார் ஆகியோர் ஆளுக்கொரு பாடலாகப் பாடியோராவார்.

மன்னர்களைப் பாடுவதைத் தொழிலாகக் கொண்டிருந்ததோடு, வாழ்க்கை பற்றிய பார்வையையும், தம் குடும்பம் நாட்டுக்கு ஆற்றிய வீரச் செயல்களையும் எடுத்துக்காட்டுவதில் நாட்டமிக்கவர்களாகத் திகழ்ந்தனர். அக்காலப் பெண்பாற் புலவர் பெருமக்கள் அவர்தம் பாடல்களில் கூறிய காட்சிகள், சிறந்த மதிநுட்பம் கொண்டிருப்பவை; கருத்துவளமும் சிந்தனைத் திறனும் பெற்றிருப்பவை; அச்சத்தின் ஆரக்கால்களில் சிக்குண்டு சிதையாத சிந்தனை கொண்டவையாகவும் மன்னரின் இறப்புக் கண்டு கலங்கினும், மகனின் வீரமரணத்தால் பேருவகை அடைபவை. மன்னரின் பிறக்கிடாத வீரத்தையும், நெஞ்சார்ந்த ஈரத்தையும் போற்றுபவை. இத்தகு திறங்கள் நிறைந்த பெண்பாற் புலவர்களின் பாடல்கள் தனிச்சிறப்புடையவை.

ஆண்பாற் புலவர்களின் கவித்திறத்தைப் பெண்பாற் கவிகளிடமும் காண்கிறோம். மென்மை உள்ளங்கொண்ட பெண்மை நெஞ்சத்தவராகிய புலவர்களின் பாடல்கள் வீறுணர்ச்சி தருபவை. செருக்களம் நோக்கிய சிந்தனைகளில், உருக்குலையவைக்கும் உணர்ச்சிகளிலும் உள்ளம் பதித்து உலாவந்துள்ளன அவர்தம் புறப்பாடல்கள். பெண்பாற் புலவர்கள் இவ்ஆய்வில் பதிவு செய்துள்ள புறச்சிந்தனைகளை இனி நோக்குவோம்.

**ஔவையார்**

பண்டையகாலப் போரில் பெண் புலவர்களின் பங்கு குறிப்பிடத்தக்கது. அரசர்களை அறநெறிப்படி போர்புரியத் தூண்டியவர்கள் புலவர்களே ஆவர். போர் நெறிகளையும் போர் முறைகளையும் தங்களின் கவித்திறனால் தெளிவுப்படுத்தினர். அறம் காத்த பெண்பாற்புலவர்களில் ஔவையார் சிறப்பிடம் பெறுகிறார்.

போருக்குத் தூது முக்கியமானதாகக் கருதப்பட்டது. இரு மன்னர்களுக்கு இடையே ஏற்படும் பூசல்கள் தூதின் மூலமாகக் கூடத் தீர்க்கப்படுதல் உண்டு.

**"இவ்வே பீலி அணிந்து மாலை சூட்டிக்**
**கண்திறன் நோன்காழ் திருத்தி நெய் அணிந்து**
**கடியுடை வியன்நகரவ்வே அவ்வே**
**பகைவர்க் குத்திக்கோடு நுதி சிதைந்து**
**கொல்துறைக் குற்றிய மாதோஎன்றும்**
**உண்டாயின் பதம் கொடுத்து**
**இல்லையாயின் உடன் உண்ணும்**
**இல்லோர் ஒக்கல் தலைவன்**
**அண்ணல் எம்கோமான் வைந்நுதி வேலே"**[11]

என்னும் இப்பாடல், அதியமானிடம் இருந்து தொண்டைமானிடம் தூதுவராகச் சென்ற ஔவையார் இருவரிடையேயும் நிகழஇருந்த போரைத் தனது மதிநலத்தால் தடுத்தார். தொண்டைமானின் படைக்கலத்தைப் பார்வையிட்ட ஔவையார் அதியமானின் படைக்கலன்கள் எப்போதும் உலைக்களத்தில் இட்டுக் கூர்தீட்டப் படுகின்றன. புதிய போர்க்கருவிகள் செய்யும் ஒலிகேட்ட வண்ணம் இருக்கின்றது. ஆனால் உனது படைக்கலன்கள் நெய்பூசப்பெற்றுக் காட்சிப் பொருள் போல அழகாக வைக்கப்பட்டிருக்கின்றன என்று அதியமானைப் பழிப்பது போலப் புகழ்ந்தும், தொண்டைமானைப் புகழ்வது போலப் பழித்தும் பேசுகிறார். இங்கு மறைமுகமாக அதியனின் வீரத்தை உணர்த்திய ஔவையின் அறமான பேச்சு அவ்விரு மன்னர்களுக்கிடையே நிகழவிருந்த போரைத் தடுக்கக் காரணமாக அமைந்தது.

பெண்பாற் புலவர்களில் ஔவையார் செய்யுளியற்றும் திறனோடு மட்டுமமையாமல், அதியமான் அரசவையை அணிசெய்து, ஆட்சியிலறிவும், அரசியல் மதிநுட்பமும் கொண்டு சிறந்து விளங்கினார் என்பது அறிய முடிகிறது.

பாரி மகளிர்

பறம்பு மலையை ஆண்ட குறுநில மன்னன் பாரியின் புதல்விகள் கவிபாடும் திறன் பெற்றிருந்தனர். பாரியின் அவைக்களப் புலவராக கபிலர் இருந்தார். அவரது அரவணைப்பில் வளர்ந்த பாரி மகளிரும் பாடல் எழுதி சங்ககாலப் பெண் புலவர்கள் வரிசையில் இடம் பிடித்தனர்.

பாரி மகளிர் பாடியதாகக் கூறப்பெறும் பாடல் ஒன்று புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. தந்தையை இழந்த வருத்தம் காரணமாக எழுந்த புலம்பலில் உருவானது இப்பாட்டு, நிலவைப் பார்த்து நெட்டுயிர்ப்போடு பாடிய பாடலில் சோகம் இழையோடுகிறது. பாரியையும் அவனது புறம்பு மலையையும் எண்ணிக் கரையும் கையறு நிலைப்பாட்டில், பாரியை மூவேந்தரும் வஞ்சித்துக் கொன்றமை குறிப்பாகக் காட்டப்பெறுகிறது. ‘வென்றெறி முரசின் மூவேந்தர்’ என்ற இகழ்ச்சிக் குறிப்பால் அதனை உணர முடிகின்றது. இதனை,

**“அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்,**
**எந்தையும் உடையேம்; எம் குன்றும் பிறர் கொளார்;**
**இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்**
**வென்று எறிமுரசின் வேந்தர் எம்**
**குன்றும் கொண்டார்; யாம் எந்தையும் இலமே!”**[12]

என்று புறநானூற்றுப் பாடல் குறிப்பிடுகின்றது. அன்றைய திங்களில் அந்த வெண்ணிலவுப் பொழுதில் எம் தந்தையையும் எங்கள் பறம்பு மலையையும் சொந்தம் உடையவராக இருந்தோம். பிறர்கைப்பற்றிக் கொள்ளவில்லை. இன்றைய திங்களில் இந்த வெற்றி முரசுடைய வேந்தர் எம்முடைய மலையையும் கைப்பற்றிக் கொண்டார். யாம் என் தந்தையும் இல்லாதவராய் ஆனோம் என்று இப்பாடல் விளக்குகிறது. இதனை,

**“நல்வழியால் வென்று முழக்குதற்குரிய முரசினை,**
**அல்வழியால் பாரியைக் கொன்று முழக்குகின்றமை**
**தோன்ற நின்றமையின் இகழ்ச்சிக் குறிப்பினை உடையதாயிற்று”**[13]

என்று உரையாசிரியர் துரைசாமிப்பிள்ளை இப்பாடலின் நோக்கத்தைக் கூறுகிறார்.

கபிலர், ‘யாடும் பாரியும் உளமே’ என்று பாடிய சூழலையொட்டிப் பாரிமகளிர் இப்பாடலைப் பாடியிருக்கலாம். பாரி மகளிர் பாடிய பாடலின் இறுதியடி ‘எந்தையும் இலமே என முடிதலைக்கொண்டு இதனை உணரலாம். முதலிரு அடிகளை ஒருத்தியும் பின்வரும் அடிகளை மற்றொருத்தியும் பாடியிருக்கலாம் என்றும் ஊகிக்க முடிகின்றது. எனவே இப்பாடலின் கருத்துமூலம் சூழ்ச்சி எனும் சதியால் அறச்செயல் செய்து வந்த பாரி மடிந்ததை விளங்கிக் கொள்ளமுடிகிறது.

**பேய்மகள் இளவெயினி**

இளவெயினியின் பெயர் முன் உள்ள பேய் மகள் என்பதாகிய அடைமொழி யாது காரணத்தால் வந்தது எனத் தெரியவில்லை. ஆனால் பேயொடு சார்த்திக் கூறுவது சிறிதும் பொருந்தாது.

‘இவள் பேயிருக்கக் கட்புலனாயதோர் வடிவு கொண்டு பாடினாள் ஒருத்தி எனவும், இக்களத்து வந்தோர் யாவரும் பரிசில் பெற்றார்கள். ஈண்டு நின்னொடு எதிர்த்துப் பட்டாரின்மையான், எனக்கு உணவாகிய தசை பெற்றிலேன்’ எனத்தான் பேய் மகளானமை தோன்றப் பரிசில கடாயினாளெனவுங் கூறுவாருமுளர். எனவரும் பழையவுரைகாரர் குறிப்புக் கொண்டு பேயோடு சார்த்தியுரைத்த நிலை உணரப்பட்டது. எண்ணற்குரியது. துடுக்கும் அஞ்சாமையும் கொண்ட ஒருத்தியைப் பேய்மகள் என இன்றும் அழைக்கும் வழக்கொத்தது அது.

பெண்பாற் புலவரான பேய்மகள் இளவெயினி பாலைத் திணை பாடிய பெருங்கடுங்கோ என்னும் சேர மன்னனைப் பாடியுள்ளார். பரிசில் கடாநிலையில் அமைந்த பாடல் அது. பாடினியை நோக்கி பாடுவதாகவுள்ளது. பாடினி பரிசு பெற்றாள்; பாணன் பொன் பெற்றான். யான் எதுவும் பெற்றிலேன் என்ற கருத்துப்பட அமைந்த பாடல் அது.

"அரிமயிர்த் திரள் முன்கை,
வால் இழை, மட மங்கையர்,
வரிமணல் புனை பாவைக்குக்
குலவுச் சினைப் பூக்கொய்து,
தண் பொருநைப் புனல் பாயும்,
………………………………..
……………………………….
இழை பெற்ற பாடினிக்குக்
குரல் புணர் சீர்க் கொளை வல் பாண் மகனும்மே,
என ஆங்கு,
ஒள் அழல் புரிந்த தாமரை
வெள்ளி நாரால் பூப் பெற்றிசினே"[14]

என்ற புறநானூற்றுப் பாடல் அமைந்துள்ளது.

மென்மயிர் திரண்ட முன்கைகளையும் தூய அணிகலன்களையும், உடைய இளமங்கையர் வண்டல் மண்ணால் செய்த சிற்றில்லில் பாவை புனைந்து, அதற்குக் கோட்டுப் பூச்சூடி மகிழ்வர்; குளிர்ந்த பொருநை ஆற்றில் நீராடி மகிழ்வதற்கு ஏற்ற இடம் வஞ்சி மாநகர். அந்நகரில் பாடலில் பாடுபொருளாக அமைந்த வெற்றிவேந்தன் பகைவரின் அரணை அழித்து, வலிமையுடன் எதிர்த்த பகைவரை புறங்காட்டி ஓடுமாறு செய்து வெற்றியடைந்தான். அவ்வேந்தனின் வீரத்தைப்பாடிய பாடினிக்குப் பல கழஞ்சு எடையளவு கொண்ட பொன்னால் செய்யப் பெற்ற அழகிய அணியாது பரிசிலாகத் தரப்பட்டது. இசைந்து பாடிய பாணன் ஒளிவீசும் நெருப்பில் இட்டுச் சேர்த்து, வெள்ளிக் கம்பியால் தொடுக்கப்பட்ட பொற்றாமரை மாலையினைப் பரிசாகப் பெற்றான் என இப்பாடலுக்கு பொருள் விளக்கம் கூறப்பட்டுள்ளது. அக்காலத்தில் பரிசிலர்களாக சென்ற கலைஞர்களுள் ஒரு வகையினரான பாடினி மன்னரைப் பாடி பரிசில் பெற்ற அறச்செயலை இப்பாடலின் மூலமே அறியமுடிகிறது.

**தாயங்கண்ணியார்**

பெண்பாற் புலவர் வரிசையில் குறிப்பிடத்தக்கவர் தாயங்கண்ணியார். இவர் பாடிய ஒரே சங்கப்பாட்டு புறத்தில் அமைந்த தாபத நிலையைச் சார்ந்தது. கைம்மை அறத்தைக் கூறுகிறது.

கணவனை இழந்து மனைவி கைம்மை நோற்பதைக் கூறுகிறது. அப்பாடல் கூறவரும் முறையால் சிறந்த பாடல்களுள் இதுவும் ஒன்று. நகரை நோக்கிக் கூறும் வகையில் அமைந்த நல்ல கட்டமைப்புக் கொண்ட பாடல் ஆகும். காட்சியும் முரணழகு தோன்ற அமைந்துள்ளது.

வாழ்நகர் ஒன்று வளமிழந்து வறிதான காட்சி தாயங்கண்ணியாரை வாட்டமுறச் செய்தது. அந்நகர் முன்பு வளம் மிக்கதாய் இருந்ததையும் தற்போது அது பொலிவிழந்து காணப்படுவதையும் கண்டு புலவர் வேதனை அடைந்தார். அவ்வருத்தத்தில் அந்நகரின் நிலைக்கண்டு பாடல் ஒன்று பாடியுள்ளார்.

**"குய்தரல் மலிந்த கொழுந்துவை அடிசில்**
**இரவலர்த் தடுத்த வாயில், புரவலர்**
**கண்ணீர்த் தடுத்த தண்நறும் பந்தர்க்,**
**கூந்தல் கொய்து, குறுந்தொடி நீக்கி,**
**அல்லி உணவின் மனைவியொடு, இனியே**
**புல்என் றனையால் வளம்கெழு திருநகர்**
**வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டும்**
**முனித்தலைப் புதல்வர் தந்தை**
**துனித்தலைப் பெருங்காடு முன்னிய பின்னே"**[15]

என்பதாக அப்பாடல் அமைந்துள்ளது.

செல்வமிக்க அழகிய நகரே! இரவலரை வேறு எங்கும் உணவிற்காகச் செல்லாது தடுக்கும் வாயிலைக் கொண்டிருந்தாய். தன்னால் புரக்கப்படுவோரின் கண்ணீரைத் தடுத்து நிறுத்தும் தண்ணிய பந்தரைப் பெற்றிருந்தாய்! புலவர்க்குத் தந்தையாகியவன் பெருங்காடு

அடைந்தான். நகரே! அதன் பின்னர் நீ மயிரைக் கொய்து வளையல் களைந்து அல்லியரிசியை உண்டு வாழும் கைம்மையுற்ற அவனின் மனைவி பொலிவிழந்ததைப் போலப் பொலிவு இழந்தாயே எனப் புலவர் பாடிய அப்பாடலுக்கு விளக்கம் தரப்பட்டுள்ளது.

வளங்கெழுமிய நகரின் முன்னிருந்த நிலையும், பின் மாறிய காட்சியும் புலவரால் நோக்கப்படுகின்றன. தாளித ஓசையும் மணமும் விருந்தினரையும் இரவலரையும் தடுத்து நிறுத்தி வைத்த வாயிலும் கண்ணீரைப் போக்கிய நறும்பந்தரும், இல்லத்தலைவன் இல்லாமையால் இல்லாதொழிந்தன. அங்கு வருவார் யாருமிலர். வளமனை வறிதாகிப் போனது. வாழ்விழுந்தது. வாழ்விழுந்த நகரை வேறு எவற்றினோடும் ஒப்புமைப் படுத்திக் கூறாமல் அவ்வில்லத் தலைவனின் மனைவி கைம்மையுற்ற நிலையோடு தொடர்புபடுத்திக் கூறியுள்ளமை சோகத்தை மிகுதிப்படுத்துவதாக அமைந்துள்ளது.

எனவே, பெண்பாற் புலவர் பெருமக்கள் இல்லற நிலையோடு சமுதாய நிலையை ஒப்புமைப்படுத்திப் பார்ப்பதும், தனிமனித வாழ்க்கையை கூர்ந்து நோக்கும் அறச்செயலும் இப்பாடலின்வழி நன்கு அறியமுடிகிறது.

**வணிகத்தில் மகளிர்**

இல்லப்பணி, பெண்களுக்கானது என்பது தந்தைவழிச் சமுதாயத்தில் பெண்களுக்கு உருவாக்கப்பட்ட வேலைப் பகிர்வாகக் காணப்படுகிறது. சங்க காலத்தில் பெண்கள் இல்லப்பணியுடன் மட்டுமல்லாது சமுதாயத்தில் வணிகப்பணியையும் செய்து வந்தனர்.

> **“வாணிகம் மொத்த வாணிகம் சில்லறை வாணிகம் என இருவகைப்படும். சரக்குகளைச் சிறிய அளவில் வாங்கி விற்பது சில்லறை வாணிகம்; முதலீட்டுப் பொருள்களைப் பேரளவில் வாணிகம் செய்வது மொத்த வாணிகமாகும்”**[16]

என்று வாணிகம் வகைப்படுத்தப்படுகிறது. உள்நாட்டு அங்காடிகளில் வாணிகம் சில காலத்தில், சில இடங்களில் பண்டமாற்று முறையில் நடைபெறுகிறது. வாணிகம் மொத்த வாணிகம், சில்லறை வாணிகம் என இருவகைகளில் நடைபெறும். பெரும்பாலும் ஆண்களே ஈடுபடும் வணிகத்தில், பெண்களும் ஈடுபட்டுள்ளமையை அறிய முடிகின்றது.

சங்க இலக்கியத்தில் பெண்களுக்கு மட்டுமே இல்லப்பணி என்பது மிக அழுத்தமாகப் பதிவாகியுள்ளது. அதே நிலையில் பெண்கள் பிற சமுதாயப் பணிகளிலும் ஈடுபட்டிருக்கின்றனர். பெண்களின் பல்வேறு சமுதாயப் பணிகளில் வணிகம் ஒன்றாகக் காணப்படுகிறது. வணிகப் பணியில் பெண்களின் இடம், திறம் ஆகியன இங்கு ஆய்வுக்குட் படுகின்றன.

### குறிஞ்சி நில மகளிர்

குறிஞ்சி நிலப்பெண்கள் தம் இடம் விடுத்துச் சென்று விற்பனையில் ஈடுபட்டனர் என்று அறியப்படவில்லை ஆயின் குறிஞ்சி நில மக்கள் தேறலையும் கிழங்கையும் பிற நிலத்தார்க்குக் கொடுத்து மீன் நெய்யையும், நறவையும் வாங்கிச் சென்றனர். இனிய கரும்போடு அவலைக் கூறுபடுத்தி விற்றனர். மானின் தசையும் கள்ளையும் பெற்றனர் என்று விற்பனையில் ஈடுபட்ட செய்தி மட்டும் சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது.

### மருதநில மகளிர் வணிகம்

மருதநிலப் பெண்கள் வணிகத்திற்காக அங்காடிகளுக்குச் சென்றதாகச் செய்திகள் இல்லை. அவர்கட்கு தம் நிலமே அங்காடியாகிறது. நெல் அழியாதது. அதனால் உடனடியாக அதை விற்க வேண்டிய அவசியம் இல்லை. எனவே அம்மகளிர் வீட்டிலிருந்த படியே தாம் வாங்கும் பொருளுக்கு ஏற்ற நெல்லைக் கொடுத்தனர். முத்து, நன்கலம் ஆகியவற்றுக்கு வாளைமீனும், பயறுக்கு கெடிற்று மீனும், ஓராண்டு கழிந்த பழைய வெண்ணெல்லுக்கு வரால் மீனும்,

மற்றும் பல்வேறு நெல்லுக்கு வேறுசில வகை மீன்களையும் பெறும் முறையில் மருதநில மகளிரது வாணிகம் நடைபெற்றது.

**நெய்தல் நில மகளிர் வாணிகம்**

நெய்தல் நிலப்பெண்டிருக்கு மீனும் உப்பும் வாணிகத்திற்குரிய பொருட்களாகின்றன. பெண்கள் இவற்றைத் தெருக்களில் விற்பனை செய்தனர். இவர்கள் உப்பைக் கொண்டு பண்டமாற்றாகத் தமக்கு வேண்டிய நெல்லைப் பெற்றனர். நெல் நீண்டகாலம் இருக்கக்கூடியது என்பதாலும், அதன் விற்பனைக்குப் பரந்த வணிக அங்காடிகள் உண்டென்பதாலும் மருதநில மகளிர் சந்தைக்கு செல்வதில்லை. ஆனால் நெல்லின் தேவை காரணமாக நெய்தல் மகளிர் உப்பைத் தெருவிற்குக் கொண்டு வந்தனர். உப்புக்கு நெல்நேர்என்றும், மீனுக்கு விலை பகரப்பட்டது என்றும் கூறுவது பெண்களது விலைநிர்ணயம் செய்யும் தலைமை நிலையை எடுத்துக் காட்டுகிறது.

சங்க இலக்கியப் பெண்களது வணிக விற்பனையில் நிரந்தரவிலை இல்லை. நெல்லும் உப்பும் நேர் என்று விலை கூறப்பட்டுள்ளது. அங்காடியில் போட்டிக்கோ, மக்களின் வாங்குத்திறன் பற்றியோ சிந்திக்காத முற்றுரிமையாளராக நெய்தல் நிலப்பெண்கள் காணப்படுகின்றனர்.

**முல்லை நில மகளிர் வணிகம்**

குடும்பத்தின் பொருளாதார நிலையைச் சீர்செய்யப் பெண்கள் வேற்றிடம் செல்ல வேண்டிய சூழல் ஏற்பட்டமையை முல்லை நில மகளிரின் வணிகம் புலப்படுத்துகின்றது. முல்லை நிலப் பெண்களது விற்பனை இலாப நோக்குடையதாகத் திகழ்கின்றது. மருதம், நெய்தல், போன்று முல்லை நிலப்பெண்டிரும் பண்டங்களை மாற்றாகப் பெறினும் சில இடங்களில் அம்மாற்றுப் பொருட்கள் தொடர்வளர்நிலையை எதிர்நோக்குவனவாகவே உள்ளன. மோருக்கு பதில் நெல்லும் நெய்க்கு மாற்றாக எருமை, கன்று போன்றவற்றையே பெறுபவர் என்று

கூறப்படுவதினால் பொருளாதார வளர்ச்சியில் இவர்களது அக்கறை வெளிப்படுகிறது. எதிர்காலத் தொழில் வளர்ச்சியை நோக்கமாகக் கொண்டு செயல்படுவது தெரிகிறது. எதிர்காலத்தில் தொழிலை விரிவுப்படுத்த மூலதனம் தேவைப்படும். இலாபத்தைப் பெற்றால் அதை மறு முதலீடு செய்வதற்கும் தொழில்களின் வளர்ச்சிக்கும் பயன்படுத்த உதவும் என்ற பொருளியற்கருத்து அக்கால முல்லை நில மகளிரது எண்ணம், அவர்கள் ஆனிரைகளை சொந்தமாகக் கொண்ட ஆயர்கள் என்பதால் அதனால் கிடைக்கும் பழங்குப்பொருட்களால் பொருளாதாரத்தில் ஏற்றம் பெற்றவராக விளங்கினர். பெண்கள் பொருளாதார ரீதியாகச் செயல்பட்டாலும் அதில் அடிமைத்தனமோ அல்லது கட்டாயப்படுத்தி ஈடுபடுத்தப்பட்டதாகவோ செய்திகள் இல்லை.

### பாலைநில மகளிர் வணிகம்

நல்லியல்பு பிறழ்ந்த பாலை நிலத்திலும் பெண்கள் வணிகத்தில் ஈடுபட்டிருந்தனர். பூவிற்றலும் கள் விற்றலும் இந்நில மகளிரது தொழிலென அறியப்படுகின்றன. சிறுகுடி மறுகுதோறும் பழையர் மகளிர் பூவிற்றனர் என்ற செய்திகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது. இதனை,

**“.... .... .... பழைய மகளிர்**
**கண்திரள் தீள் அமைக் கடிப்பிற்றொகுத்து**
**குன்றகச சிறுகுடி மறுகுதொறும் மறுகும்”**[17]

அகநானூற்றுப் பாடல் மூலம் குறிப்பிடப்படுகிறது.

இவர்களை பெரும்பாலான பாடல்கள் விலைஞர் என்றும் கமழ்நறும் பூவினர் என்று மட்டுமே கூறுகின்றனவே தவிர மகளிர் விற்றனர் என்பதைத் தெளிவாகக் கூறவில்லை.

### பிறவணிகம்

பிறத்தொழில் பற்றி இரு இடங்களில் செய்திகள் காணப்படுகின்றன. பான் மகளிர் தொழில் இல்லாத காலங்களில் வறுமையின் காரணமாக மீன் பிடித்துவிற்று அதனைக் கொண்டு

வாழ்க்கையை நடத்தியுள்ளனர். இதனைப் பாணர் மீன் பிடித்து வாழும் எளிய வாழ்வுடையோராகக் காணப்படுகின்றனர் என்பார் மு. வரதராசனார் மருதநிலப் பாண் மகளிர் மீனுக்குப் பதிலாக நெல் மற்றும் பயிறு வகைகளை மாற்றாகப் பெற்றமையை மேற்காணும் செய்தி உறுதிப்படுத்துவதாக உள்ளது. ஆனால் பாண்மகளின் வறுமையோ, வளமையோ விரிவாக உரைக்கப்படவில்லை.

**உழவுத்தொழிலில் மகளிர்**

மனிதன் வேட்டைச் சமூகமாகவும் மேய்ச்சல் சமூகமாகவும் குறிஞ்சி முல்லை நிலங்களில் வாழ்ந்த காலக்கட்டத்தில் அந்நிலங்களில் வரகு, தினை முதலியவற்றை விளைவித்தான். அவற்றுடன் உளுந்து, பயிறு, அவரை முதலியவற்றையும் விளைவித்தான். ஆனால் விளைச்சலின் பயன் அவனுக்கு வாய்க்கும் கைக்கும் எட்டாத நிலையிலேயே இருந்தது. கடன் வாங்கிப்பிழைக்க வேண்டிய சூழ்நிலையிலேயே வாழ்ந்தான். இதனை,

**எருது காலுறா அது இளைஞர் கொன்ற**
**சில்விளை வரகின் புல்லென் குப்பை**
**தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்**
**பசித்த பாணர் உண்டு கடைதப்பலின்**
**ஒக்கல் ஒற்கம் சொலியத் தன்னூர்ச்**
**வாரகுக் கடனினுக்கும் நெடுந்தகை**
**சிறுபுல்லாளர் முகத்தள கூறி**
**அரசுவரின் தாங்கும் வல்லாளன்னே”**[18]

என்ற புறப்பாட்டு கூறிப்பிடுகிறது.

குறைந்த நிலத்தை உடைய தலைவன் தினையை விதைத்து அறுவடை செய்யும் காலங்களில் அதிக விளைச்சல் என்றால் எருதுகளை விட்டு தினைகளை மிதிக்க செய்வர். குறைவாக விளைந்ததால் இளையோர்கள் அத்தினையை தங்கள் கால்களால் மிதித்தனர். அப்படி கிடைத்த தினையினை கடன் வாங்கி உழவு செய்த காரணத்தால் கடனை திருப்பி தர தினையை கொடுத்தனர். மேலும்

நிலத்தை தேடி வந்த பரிசலான பாணர்களுக்கும் தினையை அளித்தனர் தம்மை நாடி வந்த உறவினர்களுக்கு மீண்டும் செல்வர்களிடமிருந்து கடன்வாங்கி கொடுத்தனர். வறுமையிலும் இத்தகைய அறச்செயலை செய்த தலைவன் இல்லத்தில் தலைவி விருந்தோம்பு பண்பு பின்வரும் பாடல் கூறுகிறது.

**"வரகுந் தினையுமுள்ளவை யெல்லாம்**
**கிரவன் மாக்களுணக் கொளத்தீர்ந்தெனக்**
**குறித்து மாறெதிர்ப்பைப் பெறா அமையிற்**
**குரலுணங்கு விதைத்தினையுரல் வாய்ப்பெய்து**
**சிறிது புறப்பட்டன்றோவிலள்"**[19]

என்ற புறநானூற்றுப் பாடல் மகளிரின் விருந்தோம்பல் பண்பினைக் கூறுகிறது. மனைத்தலைவி விருந்தினரின் பொருட்டு விதைத்தினையைக் குற்றிச் சமைக்க முற்பட்ட செய்தியை இப்பாடல் விளக்குகிறது. இவ்வாறு கணசமூகமாக வாழ்ந்த குறிஞ்சி முல்லை நில மாந்தரின் பற்றாக் குறையான அவலவாழ்வு குறித்துச் சங்க இலக்கியங்கள் பேசுகின்றன. இம்மக்கள் வறுமையில் வாடினாலும் பண்பில் உயர்ந்து ஓங்கி நின்றதைக் காண்கிறோம்.

உழைக்கும் மக்களாகிய உழவர், உழத்தியர், கடையர், கடைசியர் முதலியவர்களின் உழைப்பால் உழவுத்தொழில் சிறப்புப்பெற்றது.

### கடைசியர் நாற்றுநடுதல்

தொளி கலக்கிப் பண்படுத்திய வயல்களில் கடைசியர் நெல்நாற்றை நடவு செய்தது பற்றியும் களைபறித்தது பற்றியும் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. "முடிநாறமுத்திய நெடுநீர்ச் செறு" என்று பெரும்பாணாற்றுப்படையில் கூறப்பட்டுள்ளது. வயலில் கடைசியர் களைபறித்தது குறித்தும் அந்நூல் கூறுகிறது. கடைசியர் களையாகப் பறித்த தண்டினை வளையலாக அணிந்து அழகு பார்த்ததை "கழனி ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்" என்று புறநானூறு கூறுகிறது. இந்த செய்தியை உறுதிப்படுத்தும் வகையில்,

**"களைஞர் தந்த கணைக் கால் நெய்தல்**
**கள்கமழ் புதுப் பூ முனையின் முட் சினை**
**முகை சூழ் தகட்ட பிறழ் வாய் முள்ளிக்**
**கொடுங் கால் மா மலர் கொய்து கொண்டவனை**
**பஞ்சாய்க் கோரை பல்லின் சவட்டிப்**
**புணர் நார்ப் பெய்த புனைவு இன் கண்ணி**
**ஈருடை யிருந்தலையாரச் சூடி"**[20]

என்ற பெரும்பாணாற்றுப்படை பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன. வயல்களில் முடியாகக் கிடந்த நாற்றை நட்ட நெடிய நீரையுடைய செய்களில், களையைப் பறிப்பார். வயலிற் களைபறித்த கடைசியர் நெய்தற் பூவையும், முள்ளியின் பூவையும், தண்டாங் கோரையைப் பல்லால் கடித்து கிழித்ததில் தொடுத்து ஈர் நிறைந்த தலையில் சூடிக்கொண்டதை பெரும்பாணாற்றுப்படை பேசுகிறது.

**"கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்**
**சிறுமாணெய்தல் ஆம்பலொடு கட்கும்**
**மலங்குமிளிர் செறு"**[21]

என்ற புறநானூற்றுப் பாடல் கடைசியர் வயலில் ஆம்பலும் நெய்தலுமாகிய களையைப் பறித்ததனையும் தழை உடையை அணிந்திருந்ததையும் கூறுகின்றது.

### பயிர் காவல் காத்தல்

வேட்டைச் சமூகமாக வாழ்ந்த மக்கள் மேய்ச்சல் சமூகமாக மாற்றமடைந்து உழவுத்தொழிலை மேற்கொண்டு வரகு தினை முதலியவற்றைச் சாகுபடி செய்த காலம் முதலே பயிர்களைப் பாதுகாக்கும் பணிகளிலும் ஈடுபட்டனர். குறிஞ்சி முல்லை நிலங்களில் வரகும் தினையும் பயிரிட்ட எயினர்கள் யானை, மான், பன்றி முதலிய விலங்குகளாலும் கிளி, மயில், புறா போன்ற பறவைகளாலும் பயிருக்கு ஏற்படும் சேதங்களினின்றும் அவற்றைப் பாதுகாக்கப் பரண் அமைத்துக் காவல் காத்தனர். பகலில் பெண்களும் இரவில் ஆண்களும் காவற்பணியில் ஈடுபட்டனர். இதனை,

**"நெற்கொணெடு வெதிர்க்கணந்த யானை**

**முத்தார் மருப்பினிறங்குகை கடுப்பத்**

**தூய்த்தலை வாங்கிய புனித தீர் பெருங்குரல்**

**நல்கோட் சிறுதினைப் படுபுள்ளோப்பி**

**ஏல்பட வருதியரென நீ விடுத்தலிற்**

**கலிகெழு மரமிசைச் சேணோன் இழைத்த**

**புலியஞ்சிதண மேறியவண**

**சாரற் சூரற் நகைபெற வலந்த**

**தழலுக் தட்டையுங் குளிரும் பிறவும்**

**கிளிகடி மரபினூழூழ் வாங்கி**

**உரவுக் கதில் தெறூஉம்"**[22]

என்ற குறிஞ்சிப் பாடல் கூறுகிறது. குறிஞ்சிநிலத்தில் மகளிர் பகற்பொழுதில் பரண் மீதமர்ந்து கிளிகடி கருவிகளைக் கொண்டு பறவைகளை ஓட்டிக் காவல் காத்தமை இப்பாடலில் விளக்கப்பட்டுள்ளது.

**"வட்டவரிய செம்பொறிச் சேவல்**

**ஏனல் காப்போர் உணர்த்திய கூடம்"**[23]

என்ற புறநானூற்றுப்பாடல் இரவில் தினைப்புனங்காத்த எயினரைச் சேவல் கூவித்துயில் எழுப்பியது குறித்துக் கூறுகிறது. இவ்வாறு பகலில் பெண்களும் இரவில் ஆண்களும் தினைப்புலம் காத்தமை குறித்துச் சங்க இலக்கியங்கள் பேசுகின்றன. மேலும்

**"புதல்தளவின் பூச்சூடி**

**அரிப்பறையாற் புள்ளோப் பி"**[24]

என்ற புறநானூற்றுப் பாடல் மகளிர் புதலிடத்தே மலர்ந்த தவள முல்லையின் பூவைத் தலையிற் சூடிக்கொண்டு அரித்த ஓசையுடைய கிணைப்பறையைக் கொட்டி வயலில் விளைந்த நெற்கதிர்களை உண்டதற்கு வந்து படியும் பறவைகளை ஒட்டினர் என்று கூறுகிறது.

வயலில் களை பறித்த கடைசியர், வயலில் பிறழ்ந்து துள்ளிய மலங்கு, வாளை முதலிய மீன்களைத் தளம்பு என்னும் சேறுகத்தியால் பிடித்து வந்தனர். அதனைத் துண்டுதுண்டாக அறுத்துச் சமைத்ததனைப்

புதிய நெல்லில் சமைத்த வெள்ளிய சோற்றின் மேல் ஊற்றிவிலாப் புடைக்கத்தின்ற களமர், உடல் வளையாமல் சூட்டை இடும் இடம் அறியாமல் தடுமாறினர் என்ற செய்தியை,

**“கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்**
**சிறுமாணெய்தல் ஆம்பலொடு கட்கும்**
**மலங்குமிளிர் செறுவிற்றளம்பு தடிந்திட்ட**
**பழனவாளைப்ரூ உக்கண் துணியல்**
**புதுநெல் வெண்சோற்றுக் கையுறைமாக**
**விலாப்புடை மருங்கு விசிப்ப மாந்றி**
**நீடுகதிர்க் கழனி சூடு தடுமாறும்**
**வன்கை வினைஞர்”**[25]

என்று கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக்குமரனார் பாடியுள்ள பாடல் வழி அறியமுடிகின்றது.

## மகளிர் இறைவழிபாடு

மகளிர் நெல்லையும் மலரையும் தூவி இல்லுறை தெய்வத்தை வழிபட்டதை நெடுநல்வாடை காட்டுகிறது.

**“நென்னீ ரெறிந்து விரிச்சியோர்க்கும்**
**செம்முது பெண்டின் சொல்லு நிரம்பா**
**துடிய பாண பாடுவல் விறலி**
**என்னா குவிர்கொலரியிர் நுமக்கும்**
**இவணுறை வாழ்க்கையோ வரிதே”**[26]

எனும் இப்பாடல் சிறிய ஊர்களின் தலைவன் பற்றிய சமுதாயமானது புன்செய் நிலச் சமுதாயத்தைக் கொண்டவன் என்பதாகும். இப்புன்செய் சமுதாயத்திற்கு வேற்று விடுதொழில் நெல்லை அறிமுகப்படுத்துகிறது. இந்நிலையில் நெல்லும் நெல்லின் விளைவுக்குக் காரணமான நீரும் வழிபாட்டில் பயன்படுத்தப்படுகின்றது.

வெறியாட்டு

குறிஞ்சித் திணையில் காதல் வயப்பட்ட தலைவியின் உடலில் வேறுபாடு கண்ட தாய் அவ்வேறுபாடு அணங்கால் நேர்ந்தது என எண்ணிப் பூசாரியான வேலனை அழைத்து முருகனை வழிபட்டுத் தலைவியின் வேறுபாட்டுக்கான காரணம் அறிய நடத்தும் ஒரு வழிபாடே வெறியாட்டு ஆகும். வேலன் என்னும் பூசாரியே இதனை நிகழ்த்துவான். இவ்வழிபாட்டில் இடம் பெறும் ஒரே ஆண் வேலன்தான். ஆண்வழிச் சமூகமாக மாறிய சங்க காலத்தில் பெண்கள் ஆண்களின் கட்டுப்பாட்டிற்குள் முடங்கிப் போன நிலையின் ஒரு வெளிப்பாடே இது. இவ்வழிபாடு பெண்களாலும் நிகழ்த்தப்பட்டது. என்பதற்குச் சங்க இலக்கியங்களிலேயே சான்றுகள் உள்ளன. பெண்கள் தெய்வமுற்று ஆடிய நிலைகளையும் சங்கப் பாடல்களில் காணமுடிகின்றது.

**"முருகு மெய்ப்பட்ட புலைத்தி போலத்**
**தாவுபு தெறிக்கு மான்மேல்"**[27]

என்னும் பாடல் பெண்கள் தெய்வமுற்று ஆடியமையைப் பற்றிக் குறிக்கிறது.

திருமுருகாற்றுப்படையில் குறமகள் வெறியாட்டு நிகழ்த்தியமை விரிவாகப் பாடப்பட்டுள்ளது. ஆரியக்கந்தனின் கூறுகளை முருகன் தாங்கிக் கார்த்திகேயனாய் மாறிய சங்க இறுதிக் காலப் பகுதி சார்ந்த திருமுருகாற்றுப்படை வெறியாட்டையும் அது பெண்களால் நிகழ்த்தப் பட்டதையும் பின்வரும் பாடல் எடுத்துக்காட்டுகிறது. இதனை,

**"நளிமலைச் சிலம்பி னன்னகர் வாழ்த்தி**
**நறும்புகை யெடுத்து குறிஞ்சிபாடி**
**யிமிழிசை யருவியொ டின்னியங் கறங்க**
**வுருவப் பல்பூத் தூஉய் வெருவரக்**
**குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள்**
**முறுகிய நிறுத்து முரணின் ருட்க**
**முருகாற்றுப் படுத்த வுருகெழு வியனக**
**ராடுகளஞ் சிலம்பப் பாடி"**[28]

என்று வேலன் அமைத்த வெறியாட்டுக்களத்தில் குறமகள் வெறியாடியமை பாடப்பட்டுள்ளது. பெண்டிர் வெறியாடியமை ஒரு காலக் கட்டத்தில் பெரும்பான்மை நெறியாக இருந்ததை அறிய முடிகின்றது.

இதைப்போலவே மூதின்முல்லைப் பாடல்களும் பெண்டீர்க்கான சமுதாய உரிமையை, பெண்வழிச்சமுதாயத்தின் எச்சத்தை வெளிப்படுத்தும் சான்றுகளாய் உள்ளன. புறநானூற்றின் மூதின் முல்லைப் பாடல்களில் பெண்டிர் வீரமும் அவர்கள் சமுதாயத்தோடு உறவுடையவராய், வீட்டிலிருந்து வந்த விருந்தினரைப் பேணியவராய், ஊரோடு பசித்திருந்தவராய், மகனின் வீரச்சாவைக் கண்டு மகிழ்ச்சிக் கண்ணீர் பெருக்கியவராய், தந்தை, கணவன், மகன் என்ற மூவரையும் போர்களத்திற்கு அனுப்பி வைத்த வீரமிகு முதுகுடி மகளிராய் இருந்த நிலைகளும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. இவை எல்லாம் பெண்டீர், சமுதாயத்தோடு நேரடித் தொடர்புடையவராய் இருந்ததற்கும் அதன் அங்கமாய் விளங்கியதற்கும் சான்றுகளாய் உள்ளன.

தொடக்கக்காலத்தில் பெண் பயிர்த்தொழிலை ஆரம்பித்ததால் பெண்ணிற்கு முதலிடம் அளிக்கப்பெற்றது. மழைவளம் ஆகியவற்றை வேண்டிச் செய்யப்படும் சடங்குகளில் அக்காலத்தில் பெண்கள் முதலிடம் பெற்றது இதனாலேயே எனலாம்.

இம்மாதிரியான ஒரு சமுதாயத் தொடர்பை, சமுதாயத் தலைமையைத் தான் பெண்டிரின் தினைப்புனைக்காவல் பற்றிய வேளாண் சமுதாயப் பாடல்களும் காட்டுகின்றன. பெண்ணே இன உற்பத்திக்கான முதன்மை ஆதாரம். ஒரு இனத்தின் விருத்தி அவள் மூலமாகவே நடைபெறுகிறது. எனவே பெண் வளமையின் குறியீடாகவே என்றும் இருக்கின்றாள். பெண்ணுக்குப் பயிர்த் தொழிலோடு நெருங்கிய தொடர்பு இருப்பதும் இதனாலேயே எனலாம்.

குறைவான வளம் பொருந்திய நிலத்தில் பெண்களே சாகுபடியில் ஈடுபட்டு, ஆண்களுடைய கடினமான விவசாய வேலைகளுக்குத் தோள் கொடுக்கின்றனர். மிகவும் பூர்வ காலத்திற்குரிய பழங்குடிகளின் மத்தியில் ஆண்களுக்கு வேட்டைத் தொழில் எவ்வாறு அமைந்ததோ அதுபோல எல்லா விவசாய வேலைகளும் பெண்களுக்கே உரிமையானதாக திகழ்ந்தது எனலாம். இது தினைப்புனக்காவல் முதலான சங்கச் சமுதாயச் சூழல்களோடு மிகவும் பொருந்துவதாக அமைந்துள்ளதைக் காணமுடிகின்றது.

வளமைச் சடங்குகள் நடைபெறும் எல்லாச் சூழல்களிலும் பெண்களே முதலிடம் பெறுவதும் வளமை தொடர்பான வேளாண்மையிலும் அவர்களே முதலிடம் பெற்றிருந்தனர் என்பதும் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. வேளாண்மை மூதின் மகளிரின் முழுப் பொறுப்பில் நடைபெற்றது சான்றுகளுடன் அறியமுடிகின்றது.

விருந்தோம்பல்

பண்பாட்டைப் போற்றி வாழ்ந்தவர் பண்டையத் தமிழர். இன்றும் அப்பண்பாட்டின் மரபுநிலை தொடர்கிறது. அவர்கள் போற்றிய பண்புகளில் தலையாய பண்பு விருந்தோம்பல் விருந்து என்றால் புதுமை, புதியவர் என்று பொருள். ‘விருந்தே புதுமை’ என்பர் தொல்காப்பியர். இன்று உற்றார் உறவினர் நண்பர்களையும் விருந்து என்கிறோம். ஆனால் பண்டைக்காலத்தில் முன் பின் அறியாதவர்களாய் வீடு தேடி வருவோரே விருந்தினர் எனப்பெற்றனர். அக்கால மக்கள் அவர்களை அகமும் முகமும் மலர வரவேற்று விருந்தோம்பினர். இதனை,

> **“பண்டமாற்றுமுறை வழக்கிலிருந்த அக்காலத்தில் போக்குவரத்து வசதிகளும் இல்லாத சூழ்நிலை நிலவியது. எனவே இரவலர்கள் மட்டுமின்றி ஏனையோரும் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு கால்நடையாகவே நடந்து செல்ல வேண்டியிருந்தது. உணவு வசதிகளும் இல்லாத காரணத்தால் உண்டிக்கும் உறையுளுக்கும் அனைவரும்**

**செல்லும் ஊர்களையே நம்ப வேண்டியிருந்தது. ஆகவே புதிதாக வருவோர்க்குப் பசிக்கு உணவளிக்க வேண்டிய நிலை இருந்தமையால் விரும்தோம்பல் பண்பாடு தமிழகத்து இல்லங்களில் உருவாயிற்கு''**[29] என்பர்.

சங்க காலத்தில் விரும்தோம்புதல் ஒரு சிறந்த கலையாகப் போற்றப்பட்டது. விருந்தோம்பல் மங்கல மகளிர்க்குரிய தனி உரிமையாகவே கருதப்பட்டது.

ஒரு நாள் இரண்டு நாட்கள் அல்ல, பல நாட்கள் தொடர்ந்து பலரோடு சென்றாலும் முதல்நாள் எங்ஙனம் அன்போடும் ஆர்வத்தோடும் இனிது வரவேற்றாரோ அதேபோல் என்றும் விருப்புடன் வரவேற்கும் பண்பினை உடையவர் வள்ளல் அதியமான்நெடுமானஞ்சி, என்பதனை ஔவையார்,

**''ஒருநாட் செல்லல் மிருநாட் செல்லலம்**
**பலநாள் பயின்று பலரொடு செல்லினும்**
**தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ''**[30]

என்று போற்றியுள்ளார்.

உயிர் சாவாமைக்குக் காரணமாகிய அமுதமே கிடைத்தாலும் அதைச் சான்றோர்கள் தாம் மட்டுமே தனித்து உண்ணமாட்டார்கள் என்பதை,

**''உண்டால் அம்ம இவ்வுலகம் இந்திரர்**
**அமிழ்தம் இயைவ தாயினும் இனிது எனத்**
**தமியர் உண்டலும் இலரே''**[31]

என புறநானூறு மொழிகிறது.

**''குறிஞ்சி, முல்லை நிலங்களில் இருந்து மருதம், நெய்தல் நிலங்களுக்கு வந்த விருந்தினர்களுக்கு அங்குள்ள மக்கள் வாளைமீன், ஆமை கரும்புதேன், செங்கழுநீர் ஆகியவற்றை**

**உணவாகக் கொடுத்து உபசரித்தனர் என்பதனால் சங்ககால மக்களின் விருந்தோம்பற் சிறப்பு விளங்கும்.”**[32]

என நானில மக்களின் விருந்தோம்பல் இயல்பைக் குறிப்பிடுகிறார் செ.பழனிச்சாமி.

வளம்மிக்க நாட்டில் வாழும் மக்களில் உழவர் தன் கொளு முனையைத் தடுக்கும் ஆமைகளைப் படித்துக் கொணர, கரும்பறுப்பவர்கள் கரும்பினின்றும் தேன் எடுத்துக் கொணர, பெண்கள் நீர்த்துறைகளிலிருந்து செங்கழுநீர்ப் பூவினைக் கொணர்வர். இவற்றை வறட்சிமிக்க நாட்டிலிருந்து வரும் தம் சுற்றத்தவர்க்கும் விருந்தினர்க்கும் கொடுத்து மகிழ்வர் என்பதனை,

**“……… …………… ………… உழவர்**
**படை மிளிர்ந் திட்ட யாமையும், அறைநர்**
**கரும்பிற் கொண்ட தேனும், பெருந்துறை**
**நீர்தரு மகளிர் குற்ற குவளையும்**
**வன்புலக் கேளிர்க்கு வர விருந்தயரும்**
**மென்புல வைப்பின் நன்னாட்டுப் பொருந”**[33]

என்று விருந்தோம்பலின் சிறப்பினைப் பாடியுள்ளார் இடைக்காடனார்.

மற்றோர் இல்லத்தலைவியோ வேட்டுவச் சிறுவர்கள் மடுக்கரை யிலிருந்து பிடித்துக் கொணர்ந்த உடும்பின் இறைச்சியைச் சமைத்துத் தயிரோடு கூழையும் பிற நல்ல உணவுப் பொருள்களையும் செய்து பாணரோடு கலந்துண்ண விரும்பினாள் என்று கூறுகிறார் தங்காள் பொற்கொல்லனார் என்னும் புலவர் இதனை,

**“. . . . . . . . . . . . . . .மனைவியும்**
**வேட்டச் சிறாஅர் வேண்புலம் படராது**
**படைமடைக் கொண்ட குறுந்தாள் உடும்பின்**
**விழுக்கு நிணம் பெய்த தயிர்க்கண் விதவை,**
**யாணர் நல்லவை பாணரொடு, ஓராங்கு**
**வருவிருந்து அயரும் விருப்பினள். . . .”**[34]

என்ற புறநானூற்றுப் பாடல் விளக்குகிறது.

மற்றொரு வள்ளலின் மனைவியோ, இருக்கும் உணவு சிறிதேயாயினும் மிகப்பலர் வந்தனரே என்றெண்ணாது அனைவருக்கும் பகிர்ந்தளித்து மகிழ்பவள் என்கிறார் உறையூர் முதுகூற்றனார். இக்கூற்றை,

**“ . . . . . . . . . . . . . . . உள்ளது**
**தவச்சிறிது ஆயினும் மிகப்பலர் எள்ளாள்,**
**நீள்நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும்**
**இற்பொலி மகடூஉப் போல”**[35]

என்னும் புறப்பாடல் மெய்ப்பிக்கிறது.

**சிறுபாணாற்றுப் படையில் விருந்து**

வேடர்குலப் பெண்கள் புளிக்களி செய்வார்கள். சோறும் சமைப்பார்கள். வேட்டையாடிக் கொண்டு வந்த ஆமான் போன்றவற்றைச் சமைத்து விருந்தினருக்கு அளித்து உபசரிப்பார்கள்.

எயிற்றியரால் சமைக்கப்பட்ட இனிய புளிக்களியையும், விரும்பத்தக்க சோற்றையும் ஆமானுடைய சூட்டிறைச்சியையும் விருந்தினருக்கு இட்டு உபசரித்து மகிழ்வர் என்பதனை,

**“எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு**
**தேமா மேனிச் சில்வளை ஆயமொடு**
**ஆமான் சூட்டின் அமைவரப் பெருகுவிர்”**[36]

என்ற பாடல்வரிகள் மூலம் அறியலாம். உழவர் குலப் பெண்கள் கைக்குத்தல் அரிசியால் சோறாக்குவார்கள். வயல்களிலே பிடித்த நண்டையும், கொல்லையிலே காய்ந்த பீர்க்கங்காயையும் சேர்த்துச் சமைப்பார்கள். இதனைத் தாமும் உண்டு வந்த விருந்தினருக்கும் இட்டு மகிழ்வர்.

வைரம் பாய்ந்த உலக்கையின் இரும்புப் பூணால் பாடினி பெண்டிர் குற்றியெடுத்த சிறந்த வெண்மையான சோறு; கிளைத்த கால்களையுடைய நண்டோடு பீர்க்கங்காயையும் சேர்த்துச் சமைத்த கறி இவைகளை வந்த விருந்தினர்க்கு அளித்தனர். இதனை,

“இரும்காழ் உலக்கை இரும்பு முகம் தேய்த்த
அவைப்பு மாண் அரிசி அமலை வெண்சோறு
சுவைத்தாள் அலவன் கலவையொடு பெருகுவிர்”[37]

என்ற அடிகளில் பாணர்கள் விருந்தினரைச் சிறப்பாக உபசரித்தனர் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

### பெரும்பாணாற்றுப் படையில் விருந்து

வெண்மையான பற்களையுடைய வேடர்குலப் பெண்கள், எறும்புகள் சேர்த்து வைத்திருக்கின்ற மென்மையான புல்லரிசியைத் தேடிச் சேர்ப்பார்கள். மான்களைக் கட்டியிருக்கின்ற விளாமரத்தின் அடியிலே அகழ்ந்திருக்கின்ற உரலிலே அந்த நெல்லைச் சொரிவார்கள். சிறிய வயிரம் பாய்ந்த உலக்கையால் அதைக் குற்றிக் கொழித் தெடுப்பார்கள். ஆழமான கிணற்றிலே கொஞ்சமாக ஊறியிருக்கின்ற உவர் நீரை முகந்து, பழைய வெறும் பானையிலே ஊற்றி அடுப்பிலே உலை வைப்பார்கள். குற்றியெடுத்த புல்லரிசியை உலையிலிட்டு அடுப்பு அணையாதபடி எரித்துச் சமைத்துச் சோறாக்குவார்கள். வந்த விருந்தினருக்கும் இவ்வுணவைக் கொடுத்து உபசரிப்பார்கள் என்பதை,

“நுண்புல் அடக்கிய வெண்பல் எயிற்றியர்
பார்வை யாத்த பறைத்தாள் விளவின்
. . . . . . . . . . . . . . . . . . . . .
முரவு வாய்க் குழிசி முரி அடுப்பேற்றி
வாராது அட்ட வாடூன் புழுக்கல்”[38]

எனும் பாடல் வரிகளால் தனித்திருக்கும் வேடப்பெண்களின் விருந்தோம்பல் குணத்தினை அறிய முடிகின்றது.

### விருந்தோம்பல் மாண்பு

பழந்தமிழர்களின் விருந்தோம்பற்பண்பு தமிழர்களுக்குப் பெரிதும் பெருமையை சேர்த்தது என்பது மிகையல்ல. விருந்தினர்க்கு ‘உண்க’ எனச் சொல்லி உபசரிக்கும் நிலையற்ற போதும், புதுவிளைச்சலின்றித்

துன்புற்றபோதும் வித்தினுக்காக வைத்த திணையையேனும் பதப்படுத்தி உணவுதரும் தன்மையர் ஒரு வள்ளலின் இல்லாள் என்பதனை,

**"உண்க என உயரா உயவிற்று ஆயினும்,**
**தங்கினிர் சென்மோ, புலவிர்!**
**. . . . . . . . . . . மனையோள் விரும்பி,**
**வரகும் தினையும் உள்ளவை எல்லாம்**
**இரவல் மாக்கள் உணக்கொளத் தீர்ந்தெனக்,**
**குறித்துமாறு எதிர்ப்பை பெறாஅ மையின்,**
**குரல் உணங்கு விதைத்தனை உரல் வாய்ப்பெய்து,**
**சிறிது புறப்பட்டன் றோ விலளே….."[39]**

என்ற பாடல் அடிகள் விளக்குகிறது. எவ்வாறாயினும் விருந்தோம்புதலை விரும்பும் சங்ககால மாதர் மன்னராயினும் மக்களாயினும் அனைவரையும் ஒரே நிலையில் கருதி பாகுபாடு காட்டாமல் உணவு படைத்தமையை இப்புறப்பாடல் புலப்படுத்துகிறது. இதனை,

**"வம்பணி யானை வேந்துதலை வரினும்,**
**உண்பது மன்னும் அதுவே;**
**பரிசில் மன்னும், குருசில் கொண்டதுவே"[40]**

என்ற பாடல் அடிகளின் மூலம் அறிய முடிகின்றது.

தமிழர்கள் விருந்தோம்பலில் சிறந்தவர்கள். அவர்கள் தம் வீடு தேடி வந்தோர் யாவராயினும் அவர்களை உபசரிக்காமல் விடமாட்டார்கள். விருந்தோம்புபவரின் செல்வம் நல்வழிப்படுதலால் மகிழ்ச்சி விளையும் அவர்தம் செல்வமும் பெருகும், விருந்தோம்பும் பண்பாடு தமிழ் மக்களின் அடிப்படைப் பண்பாடு என்பதனையும், இது தொன்றுதொட்டு நிகழ்ந்து வருவதையும் தமிழர் விருந்து போற்றுவதைத் தவறாது தம் தலையானக் கடமையாக எண்ணி செய்து வருவதையும் தெளிவாக அறிய முடிகின்றது.

இல்லறத்தில் கணவனும் மனைவியும் இணைந்து ஆற்ற வேண்டிய அறம் விருந்தோம்பலாகும். இல்வாழ்க்கை நடத்தும் கணவனும் மனைவியும் தம் உற்றார் உறவினரைக் காக்கக் கடமைப்பட்டவர்.

அவருடன் நில்லாது தம் இல்லம் நாடிவரும் பிறரையும் உண்டியாலும் உறையுளாலும் உபசரித்தல் அவர்தம் கடமை என்று அறநூல்கள் கூறுகின்றன.

இரவு நேரத்தில் விருந்தினர் எவராவது உண்டா என்று பார்த்து பிறகு வாயிற்கததவை அடைப்பதைப் பண்டையத் தமிழர் வழக்கமாகக் கொண்டிருந்தனர். பண்டங்குறைவாக இருந்தபோதும் வரும் விருந்தினரை வரிசையாக அமரவைத்து முறையாக உணவிடும் மகளிரை நாம் புறநானூற்றில் காணமுடிகின்றது.

இவ்வாறு விருந்தோம்பல் பண்பு சங்ககாலத்தில் மிகவும் சிறப்பாகப் போற்றப்பட்டு வந்திருக்கின்றது. இதுகாணும் கூறியவற்றால், சமூகத்தின் ஒரு உறுப்பாக அமையும் குடும்ப மகளிர், வறியவர், நண்பர் உறவினர், விருந்தினர் ஆகியோர்க்குத் தன்னாலான உதவிகளைச் செய்து பயனுள்ள வாழ்க்கை வாழ வேண்டுமென்பது பண்டைத் தமிழச் சமுதாயத்தின் குறிக்கோளென்பது விளங்குகிறது. உலகையே தம் குடும்பமாகவும் உலகோர் அனைவரையும் தம் உற்றார் உறவினராகக் கருதி அவர்கட்கு உதவிவாழும் பெருவாழ்வு நெறியே தமிழர் பண்பாட்டின் மணிமுடியாகக் காணப்படுகின்றது.

**கைம்மை**

தமிழகத்தில் கணவரை இழந்த பெண்டிர் கைம்மை மகளிர் என அழைக்கப்படுகின்றனர். கைம்மை நிலை என்பது தந்தைவழிச் சமுதாயத்தின் ஒரு தார மணமுறை என்ற சமூக அமைப்பில் உருவாக்கப்பட்டது.

சங்க இலக்கியத்தில் பெண்களை ஆண்களின் சார்பில் வாழ்பவர்களாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. பெண்ணின் சிறப்பு அவளது செயல்பாட்டால் வரையறை செய்யப்படாமல், ஆணின் இருப்பினை வைத்து வரையறை செய்யப்பட்டுள்ளது. அதற்குக் கைம்பெண் மகளிர்

நல்ல சான்று. அவ்வகையில் இவ்இயலில் ஆணின் இல்லாமைக்குப் பிறர்க்கான பெண்ணின் வாழ்வியலைப் புறப்பாடல்கள் எவ்வகையில் பதிவு செய்துள்ளன என்பதை விளக்குவதாக அமைகின்றது.

ஒரு ஆணுடன் இணைந்து வாழும் வாழ்க்கையில் பெண்ணின் பிரிவு என்பதோ, இறப்பு என்பதோ ஆணை எச்சூழ்நிலையிலும் எந்தவிதப் பாதிப்பிற்கும், அவப்பெயருக்கும் உரியதாக ஆக்கவில்லை. அதே சமயம் ஆணின் பிரிவு பெண்ணை வாழாவெட்டியாக்குகின்றது. ஆணின் இறப்பு பெண்ணை விதவையாக்குகின்றது. பெண்ணை ஆளிற்பெண்டிர் எனக் குறிப்பிடும் இலக்கியம் ஆணிற் ஆடவர் பற்றிக் கூறவில்லை. ஏனெனில் பெண்ணின் பிரிவு, இறப்பிற்குப் பிறகும் ஆண் புதிதாகத் துணை தேடும் தகுதியுடையவனாய் உள்ளான் என்பது ஒரு புறமும், அவன் மனைவியுடன் வாழும் போதே மேலும் பல பெண்களுடன் தொடர்பு கொண்டவனாக வாழ்கிறான் என்பது மற்றொரு புறமாகவும் அமைகின்றன. ஆணின் மறைவிற்குப் பிறகு அவனது மனைவி பட்ட துன்பங்களைப் பதிவு செய்துள்ள சங்க இலக்கியங்கள், பெண் நல்லாடை நல்லுணவு, நல்படுக்கை என எல்லாவற்றையும் இழந்து பொலிவிழந்து, வடிவிழந்து வாடுகின்ற நிலைக்குத் தள்ளப்பட்டதைக் காணமுடிகின்றது.

**“அருவி மாறி அஞ்சுவரக் கடுகிப்**
**பெருவறம் சூர்ந்த வேனிற் காலைப்**
**பசித்த ஆயத்துப் பயன்நிரை தருமார்**
**பூவாள் கோவலர் பூவுடன் உதிரக்**
**கொய்துகட்டு அழிந்த வேங்கையின்**
**மெல்லியன் மகளிரும் இழைகளைந்தனரே”**[41]

எனக் கூறும் இப்பாடலில் நீரின்மையால் ஆவினங்களின் தாகம் தீர்க்கப்படவில்லை. எனவே அதற்கு மாற்று ஏற்பாடாக வேங்கை மரத்தின் தனி இலைகளை, பூவுடன் வெட்டி உணவாய் இடுகின்றன. இதன் மூலம் அதிலுள்ள நீர்ச்சத்து ஆவினங்களின் தாகத்தையும், பசியையும் ஒரே நேரத்தில் தீர்க்கின்ற ஆற்றலைத் தருகின்றது. ஆவினங்களுக்கு வாய்த்த இவ்வாழ்வு கூட கரிகால் பெருவளத்தானின்

உரிமை மகளிர்க்கு கிடைக்கவில்லை. வாரிசுகளை உருவாக்கி, சோழனின் குலத்தைக் காப்பாற்றிய அம்மகளிர் மொட்டையாய்ப் போன 'வேங்கை மரமாகவே' இருந்தனர். இதன்மூலம் அவர்களின் அணிகலன்களைக் களைந்து, அதன் விளைவாக அவர்கள் அழுது அரற்றிக் களைத்துள்ள நிலையைக் காணமுடிகிறது.

பாண்டியநாட்டு அரசன் பூதப்பாண்டியன் இறந்துவிட, அவன் மனைவி பெருங்கோப்பெண்டு பாடிய பாடலில் அவள் உயிர்துறக்க எண்ணியதைத் தடுத்த புலவர்களைப் பார்த்து கூறுவதாக அமைந்துள்ளது. இதனை,

**"பல் சான்றீரே பல் சான்றீரே**
**செல்க எனச் சொல்லாது ஒழிக என விலக்கும்**
**பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே"**[42]

எனக் கூறக் கணவன் மீது கொண்ட அன்பு ஒரு பக்கமும், மற்றொரு பக்கம் கைம்மை நோன்பின் கொடுமையை உணர்ந்ததும் ஆகும். சுவையான உணவுகளை உண்டு வாழ்ந்து பழகிய பெண் அதனை யெல்லாம் விட்டுவிட்டு சுவையற்ற உணவினை உண்டு, இன்பம் என்பது சிறிதும் கிட்டாத துன்பங்கள் அவள் வாழ்வதைவிட இறப்பதே மேலானது என்ற நிலைக்குத் தள்ளுகின்றது. இதனை,

**அணில் வரிக் கொடுங்காய் வாள் போழ்ந்திட்ட**
**காழ்போல் நல்விளர் நறுநெய் தீண்டாது**
**அடை இடைக் கிடந்த கைபிழி பிண்டம்**
**வெள் என் சாந்தொடு புளிப்பெய்து அட்ட**
**வேளை வெந்தை வல்சியாகப்**
**பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்**
**உயவற் பெண்டிரேம் அல்லேம் மாதோ"**[43]

என்ற பாடல் அடிகள் அணிலின் முதுகில் உள்ள வரிகளைப் போலக் கோடுகள் உடைய வெள்ளரிக்காயை அரிவாளால் வெட்டினால் விழும் விதைகள் போன்றே நல்நெய் சேர்க்காத, இலைகள் மேல் பரப்பிய, கையால் பிழிந்து எடுத்த சோற்றுப் பருக்கைகளை, வெள்ளை எள்ளுத்

துவையலுடன், புளியிட்டுச் சமைத்த வெந்தயக் கீரைகளையுமே உணவாகக் கொண்டு, படுக்கை விரிப்பில்லாமல் பருக்கைக் கல்லே படுக்கையாகக் கொண்டு, கைமமைத் துயருறும் பெண்கள் அல்லா் நாங்கள் எனக் கூறும் கூற்றில் பெருங்கோப்பெண்டு இறக்கத் துணிந்ததற்குக் காரணம் கணவன் மீது கொண்ட அன்பா? கைம்மை நோன்பின் கொடுஞ்செயலா? என்பது வினாவுக்குரிய ஒன்றாகும். ஆனால் பாடலின் இறுதிவரிகள் மன்னனின் மீது கொண்ட அன்பே என்பதை ஓரளவு தெளிவுப்படுத்துகிறது. இதனை,

**"பெருந்தோள் கணவன் மாய்ந்தென அரும்பு அற**
**வள் இதழ் அவிழ்ந்த தாமரை**
**நள் இரும் பொய்கையும் தீயும் ஓரற்றே"**[44]

என உரைப்பது அன்பின் மிகுதியை எடுத்துரைக்கும் வரிகளாகும். எனினும் எந்தப் பெண்ணும் முழு விருப்பத்துடன் தீப்புகச் சம்மதித்திருக்க மாட்டாள். சமூகக் கட்டுப்பாடும், கற்பு மகளிா் பற்றிய கோட்பாடும் ஆளிற் பெண்டிராக இருந்து படும் துன்பமும், உணவு, உடை, கூந்தல் என அனைத்திலும் அனுபவித்து மகிழ்ந்ததை விட்டொழிப்பதும், அதன்பின் படப்போகும் துன்பங்களையும் எண்ணிப் பாா்த்து, வாழ்வதால் அனுபவிக்க வேண்டிய கொடுமைகள் அச்சம் அளித்ததால் இறந்து பட துணிந்திருப்பாா்கள் என்ற ஐயம் எழுவதற்கான வாய்ப்புள்ளது.

தனக்கென இருந்த ஆண்மகன் போர்க்களத்தில் இறந்துபட அதன் விளைவாக அப்பெண் அணிந்திருந்த வளையல்கள் நீக்கப்படுகின்றன. துன்பம் அவளை ஆட்கொள்கிறது. அவனுடன் சென்ற இளம் வீரர்கள் எல்லாம் போரில் இருக்கும்போது அவனது மரணம் துன்பத்தைத் தருவதாக அமைவதை,

**"என் திறந்து அவலம் கொள்ளல் இனியே**
**வல்வாா் கண்ணி இளையா் திளைப்ப**
**நகா அல் என வந்த மாறே எழாநெல்**
**பைங்காதை பொதிகளைந் தன்ன வளா்ப்பின்**

**வளை இல் வறுங்கை ஓச்சிக்**

**கிளையுள் ஓய்வலோ கூறுதின் உரையே"[45]**

என்று உரைத்தன் காரணமாக ஏற்கனவே போருக்குச் சென்ற தலைவனின் பிரிவால் வளையல் கழன்று விழும் அளவிற்கு மெலிந்திருந்தவள், அவன் இறந்தான் என்பதை அறிந்து வெளுத்த வெறுங்கைகளைக் கொண்டு, கூக்குரல் இட்டு இச்செய்தியை சுற்றத்தாருக்கு எப்படிக் கூறுவேன் என்பதை போரில் இறந்த தன் கணவனிடம் கேட்பதாக உரை அமைக்கப்பட்டுள்ளது.

மேற்கண்ட சான்றுகளின்படி கைம்மை என்ற கோட்பாடு பெண்ணுக்கு மட்டுமே விதிக்கப்பட்டதையும், கைம்மை மகளிருக்கென்று தனி விதிமுறைகள் இருந்ததையும் அறிய முடிகின்றது. விதவைகள் சமூகத்தில் தரக்குறைவாக நடத்தப்பட்டதையும், கைம்மைக்குரிய விதிகளைப் பின்பற்றுதல் கணவனை இழந்த பெண்களின் வாழ்க்கைக்கு பெருமை அளிப்பதாகக் கூறப்பட்டுள்ளதும் சான்றுகளுடன் நிறுவப்பட்டுள்ளது.

**ஆடை**

பழங்குடி மக்களின் தழை ஆடைப் பழக்கத்தின் தொடர்ச்சியைச் சங்க இலக்கியப் பெண்களிடையே காணமுடிகிறது. இத்தழையுடை விழா, வழிபாடு, விளையாட்டு, விற்பனை போன்ற பல நிலைகளிலும் அறியப்பட்டுள்ளது. அதற்குச் சங்க இலக்கியங்கள் சான்றளிக்கின்றன.

மரப்பட்டைகள் ஆடையாக அணியப்பட்டமை குறித்தும் பெண்கள் தழையுடை அணிந்தமை குறித்தும் சங்க இலக்கியங்கள் விரிவாகப் பேசுகின்றன. இலைதழைகளையும் மலர்களையும் மலர்நாரிலும் நறை நாரிலும் தொடுத்துக் கட்டித் தழையுடையாகப் பெண்கள் அணிந்ததற்குச் சங்க இலக்கியங்கள் சான்று பகர்கின்றன.

**"முடிந்த குல்லை இலையுடை நறும்பூ**

**செங்கான் மரா அத்தவாலிண ரிடையிடுபு**

சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை

திருந்து காழல் குல் திளைப்ப உடீஇ"[46]

என்று திருமுருகாற்றுப்படை பாடல் கூறுகிறது. பெரிய குளிர்ந்த அழகினையுடைய தழையை வடங்கள் திருந்தும் அல்குலிடத்தே அசையும்படி உடுத்தினர் என்று மகளிர் தழையுடை அணிந்த செய்தியை நக்கீரர் கூறுகிறார்.

தொடக்கத்தில் மனிதன் தென்னை ஓலை, பனையோலை, மரநார், நரைநார் முதலியவற்றைக் கொண்டு பெட்டி, கடகம், பேழை, வலை முதலியவற்றைச் செய்யத் தெரிந்து கொண்டான். பின்னர் பருத்தியில் இருந்து பஞ்செடுக்கவும் நூல் நூற்கவும் ஆடை நெய்யவும் தெரிந்து கொண்டிருந்தான். சங்க காலத்தில் பருத்தி நெசவுத் தொழில் பெற்றிருந்த வளர்ச்சியைச் சங்க நூல்கள் நமக்குக் காட்டுகின்றன.

பருத்தியில் இருந்து கொட்டை நீக்கிப் பஞ்செடுத்து வில்லால் அடித்துச் சுத்தம் செய்தல், நூல் நூற்றல் முதலிய வேலைகளைப் பெண்களே செய்தனர். அப்பெண்கள் 'பருத்திப் பெண்டிர்' என்றழைக்கப் பட்டனர். இவ்வேலைகளைப் பெண்கள் பகலில் மட்டுமல்லாது, இரவு நேரங்களிலும் விளக்குகொளி உதவியுடன் நெடுநேரம் செய்தனர். இதனை,

"சிறையுஞ் செற்றையும் புடையுநளெழுந்த

பருத்திப் பெண்டிர் சிறு தீ விளக்கம்"[47]

என்ற புறநானூற்றுப் பாடலடிகள் கூறுகிறது.

பஞ்சிலிருந்து நூற்கப்பட்ட நூலில் இருந்து ஆடைகள் நெய்யப்பட்டன. ஆடைகளின் நுண்மையும் மென்மையும் காரணமாக அவை நுண்பூங்கலிங்கம் எனப்பட்டன. கலிங்க நாட்டினின்றும் ஆடைகள் இறக்குமதி செய்யப்பட்டமையால் அவை கலிங்கம் எனப்பட்டன. பட்டு சீனத்தில் இருந்தும் பருத்தி ஆடைகள் கலிங்கத்தில் இருந்தும் தமிழகம் வந்தன என்பதையும் இலக்கியங்கள் கூறுகின்றன.

விழா நாட்களில் புலைத்தி மிகுதியான ஆடைகளை ஆண்டைகளுக்கு வெளுத்துக் கொடுத்தாள் என்றும் வெளுத்த ஆடைகளுக்கு அகிற்புகையூட்டப்பட்ட செய்தியையும் மதுரைக்காஞ்சி கூறுகிறது.

**"மென்னூற் கலிங்கம் கமழ்புகை மடுப்ப"**[48]

என்பது மாங்குடி மருதனாரின் கூற்றாகும்.

**அணிகலன்கள்**

சங்க இலக்கியங்களில் பெண்கள் தம்மை இயற்கைப் பொருட்களால் அழகு செய்தது தவிர அணிகலன்களாலும் அழகு செய்து கொண்டிருக்கின்றனர். சங்க இலக்கியம் காட்டும் பெண்களது ஒப்பனை புலப்படுத்தும் செய்திகளை இனம் காண்பது இங்கு ஆய்வாகின்றது.

> **"சங்க இலக்கியத்தில் மாந்தர் அணியக்கூடியனவாக 30 வகையான அணிகலன்கள் குறிப்பிடப்படுகின்றன. இவற்றில் பெண்கள் மட்டும் அணியக்கூடியனவாக 14 அணிகலன்கள் கூறப்பட்டுள்ளன. பெண்கள் தாலி, குழை, தொடி, வளை, மகரப்பகுவாய் பூண், முத்துமாலை போன்றவை அணிந்த செய்தி கூறப்பட்டுள்ளது."**[49]

அந்தக் காலக்கட்டத்தில் வெள்ளி, பொன் முதலிய உலோகங்களால் ஆபரணங்களும் அணிகலன்களும் செய்து அலங்கரித்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் மனிதனுக்கு ஏற்படவில்லை பின் காலப்போக்கில் செல்வந்தர்கள் பொன், வெள்ளி போன்றவற்றால் ஆன ஆபரணங்களை அணிந்து தம்மை அலங்கரித்துக் கொண்டனர். உழைக்கும் மக்களை விடத் தாங்கள் உயர்ந்தவர்கள் என்று சமூகத்தில் அடையாளப்படுத்திக் கொள்ளவே அவர்கள் அவற்றை அணிந்திருக்க வேண்டும்.

தமிழ் இலக்கியங்கள் பெண்களைப் பற்றிக் குறிப்பிடும்போது அவர்கள் அணிந்திருந்த அணிகலன்களோடு தொடர்புபடுத்தியே கூறப்படுகிறது. 'மாணிழை மகளிர்', 'வாலிழை மகளிர்' என அணிகலன்

பற்றிய அடைமொழிகளோடேயே மகளிர் குறிக்கப்பட்டனர். மகளிரைப் பற்றிய அடைமொழிகள் அவர்கள் அணிந்த அணிகலன்களின் சிறப்பைக் குறிப்பனவாகவே இருக்கும். வள்ளுவரும் கூட 'கனங்குழைமாதர்' என்று குறிப்பிட்டுள்ளார்.

பெண்களைக் குறிக்கும் சொற்களாகிய மங்கை, மடந்தை, அரிவை முதலான சொற்கள் அவர்கள் அணிந்த அணிகலன்களைப் பற்றிய அடைமொழிகளுடனேயே குறிக்கப்பட்டுள்ளன. அவ்வடை மொழிகள் அம்மகளிர் அணிந்திருந்த அணிகலன்களின் சிறப்புப்பற்றியும் அவர்தம் செல்வச் செருக்குப் பற்றியும் தெளிவாக உணர்த்துகின்றன. செறியரிச் சிலம்பின் குறுந்தொடி மகளிர் என்றும் 'ஒண்டொடி மகளிர்' மாற்றும் 'வாலிழை மங்கையர்' என்றும் புறநானூற்றுப் பாடல்களில் செல்வ மகளிர் குறிக்கப்படுகின்றனர். இத்தொடர்கள் அம்மங்கையர் அணிந்திருந்த அணிகள் பற்றிய அடைமொழிகளோடு கூறப்பட்டுள்ளமை இங்கு நோக்கத்தக்கது.

அழகி ஒருத்தி அணிகலன் பல அணிந்து மணலில் உலவிய செய்தியைப் புறநானூறு கூறுகிறது.

**"ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த**
**பொலஞ் செய் பல் காசணிந்த வல்குல்**
**ஈகைக் கண்ணி இலங்கத்தை இத்**
**தரு மணலியல் வோள்"**[50]

என்னும் பாடலின் மூலம்

குற்றமில்லாத பொற்கொல்லன் பழுதறச் செய்த பொன்னாலாகிய பல மணியணிந்த மேகலையும் பொன்னாற் செய்த கண்ணியும் விளக்கமுற ஒப்பனை செய்து கொண்டு, புதிதாகப் பரப்பிய மணலில் நடந்து உலாவுகின்றவள் என்று காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் அழகி அணிந்த ஆபரணச் சிறப்புக் குறித்துக் கூறுகிறார்.

செல்வர் மனைகளில் எஜமானிகள் தம்கைகளில் பல்வகை வேலைப்பாடுகள் அமைந்த நவரத்தினங்களால் செய்யப்பட்ட வளையல் அணிந்து அழகு பார்த்தனா். அதனைக் கண்ட கடைசியா் தாமும் அவா்களைப் போல் தம் கைகளில் வளையல் அணிந்து கொள்ள ஆசைப்பட்டனா். ஆனால் அவா்களின் வறுமை நிலையால் அவர்களுக்கு அந்த வாய்ப்பு கிடைக்காத நிலையில் வயலில் களைபறித்த அப்பெண்கள், அங்கு களையாகப் பறித்துப் போட்டிருந்த குவளை, ஆம்பல் முதலியவற்றின் தண்டுகளைக் கொண்டு வளையல் செய்து தம் கைகளில் அணிந்து அழகு பார்த்துக் கொண்டார்கள். இந்த அவலக்காட்சியை,

**“ஆம்பல் வள்ளி தொடிக்கை மகளிா்”**[51]

என்று புறநானூற்றுப் பாடல் விளக்குகிறது.

**மகளிா் விளையாட்டு**

விளையாட்டாவது விரும்பியாடும் ஆட்டம் ஆகும். மக்கள் நிலைத்த குடும்ப வாழ்க்கை வாழத் தொடங்கிய காலத்திலிருந்து விளையாட்டு வினை உலகில் நிகழ்ந்து வந்திருக்கின்றது. வேலை செய்யாத பருவத்தில் அல்லது ஓய்வு நேரத்தில் சிறுவர் பெரியோரின் செயலை அல்லது இயற்கை நிகழ்ச்சியை நடித்து மகிழ்ந்த திறமே விளையாட்டுத் தோற்றமாகக் கொள்ளலாம். அது முதன்முதலில் சிறுவரிடையே தோன்றிற்றெனக் அறியப்படுகிறது. விளையாட்டு என்பது மக்களின் வாழ்வோடு பின்னிப்பிணைந்த ஒன்றாகும். இது ஆட்டம், போட்டி, வன்மை விளையாட்டு, இன்பப் பொழுதுபோக்கு முதலிய அனைத்து அம்சங்களையும் கொண்டுள்ளது. சமூகக் கல்வியைத் தருவதில் விளையாட்டு பெரும்பங்கு வகிக்கிறது.

பெண்களுக்குரிய விளையாட்டு அடுத்தவா்க்குச் சேவை செய்யும் மனப்பான்மையை உருவாக்கிறது. சங்க காலத்தில் பெண்கள் தனியாகவும் குழுக்களாகவும விளையாடவே நிகழ்த்தியுள்ளாா்கள்.

இவ்விளையாட்டு அமைப்பு நிலைத்தாக இல்லை. முறைசாரா அமைப்பாகவே காணப்படுகிறது.

பெண்டிர் தனித்து விளையாட்டு நிகழ்த்தியது பந்தாடல், செம்மூதாடல், அலவனாட்டல் ஆகியவற்றில் மட்டுமே காணப்படுகிறது. இதனால் பெண்கள் தனித்து விளையாடுதலை மிகக்குறைந்த அளவே மேற்கொண்டனர் என்பது புலப்படுகின்றது.

சங்க இலக்கியப் பெண்டிரது விளையாட்டுகளில் பெரும்பான்மை குழு நிகழ்வுகளாகவே காணப்படுகின்றன. இக்குழு நிகழ்வுகள் சங்க இலக்கியத்தில் ஆயம் என்ற சொல் அமைந்துள்ள இடங்களைக் கொண்டு வரையறுக்கப்படுகின்றன. கூட்டமாக ஆடல், நீராடல், வண்டல் அயர்தல், ஊசல், அலவனாட்டல், பந்தாடல், ஓரையாடல், கழங்காடல் ஒரே நேரத்தில் பல ஆடல் என ஒன்பது நிலைகளில் ஆயத்தோடு கூடிய விளையாட்டுகள் பதிவாகியுள்ளது.

ஆயத்தோடு கூடிய விளையாட்டுக்களில் வண்டல் அயர்தல் தவிரப் பிற ஆட்டங்கள் பொழுது போக்கு என்ற அடிப்படையில் மட்டுமே காணப்படுகின்றன. பொழுது போக்கு என்ற நிலையில் அமையினும் அவற்றில் போட்டி, வன்மம் ஆகியன காணப்படவில்லை. போட்டியற்ற இவ்விளையாட்டுக்கள் பெண்டிரிடம் ஒத்துப்போகும் மன உணர்வை உருவாக்குவனவாக அமைகின்றன. இவ்வுணர்வே பெண்கள் குடும்ப வாழ்வில் ஈடுபட்ட நிலையில் பொறுத்திருத்தல் பண்பைப் பெறுவதற்கான பயிற்சிக் களமாக அமைய வாய்ப்பாகின்றது.

பந்து, கழங்கு ஆகிய விளையாட்டிற்கான கருவிகள் புழக்கத்தில் இருந்தமை பெண்களின் விளையாட்டை அச்சமுதாயம் ஒத்துக் கொண்ட மரபைக் காட்டுவதாகவே உள்ளது. மேலும் இக்காலத்தில் ஆடவரும் மேற்கொள்ளும் ஆட்டமாகிய பந்தாடல் என்பது சங்க இலக்கியக்

காலத்தில் மகளிர்க்கு மட்டுமே உரிய ஆட்டமாகத் திகழ்ந்தது என்பது குறிப்பிடத்தக்கதாக உள்ளது.

வண்டல் அயர்தல் என்பது நீரோரங்களில் உள்ள வண்டல் மணலைக் கொண்டு விளையாடும் ஆட்டமாகும். சிற்றில் இழைத்தல், மணற்பாவைகளைச் செய்து விளையாடல் ஆகிய இதனை ஒட்டி அமையும் விளையாட்டுகளாகும். ஆயத்தாருடன் கூடிப் பெண்கள் இவ்விளையாட்டில் ஈடுபட்ட செய்தி சங்க இலக்கியத்தில் ஐந்து இடங்களில் காணப்படுகின்றது. இதனை,

**"தெற்றிப்பாவை திண்மணல் அயரும்**
**மென்தோள் மகளிர்"**[52]

என்று புறநானூறு கூறுகிறது.

மகளிர் பின்னாளில் குடும்ப வாழ்வில், ஆற்றியிருக்கும் பண்புடையவளாக காணப்படுவது விளையாட்டில் இப்பங்கினைக் கற்றிருக்க வேண்டும் என்பதைப் புலப்படுத்துகிறது. ஆயம் என்ற அமைப்பும், அடுத்தவர்க்குச் சேவை செய்யும் மனப்பான்மையைப்பும் பெண்டிர்க்கு உருவாக்கியது என்று கொள்ளலாம். விளையாடல்கள் ஆயத்துடன்தான் பெரும்பான்மை நிகழ்த்தப்பெற்றுள்ளன. இந்த ஆட்டங்களில் போட்டி, வன்மம் இல்லை. எனவே விட்டுக் கொடுத்தல், ஒத்துப்போதல் ஆகியன இயல்பாகவே வந்தணையும் நிலையில் சேவை மனப்பான்மையும் இயைபுறும் என்பது புலப்படுகின்றது.

இவற்றால் பெண்கள் பொறுமை வாய்ந்தவர்களாகவும், போட்டி வன்மை இல்லாதவர்களாகவும் இருந்தனர் என்பது பின்னர் இந்த அறச் செயல்கள் இல்லறவாழ்வில் அவர்களை பண்படுத்தியது என்றும் அறியலாம்.

## ஆய்வுத் தொகுப்பு

சங்க இலக்கியங்கள் பழம் தமிழர் வாழ்க்கையினை அகம், புறம் இருபகுப்பாக வெளிக்காட்டுகின்றன. அகம் என்பது மாட்சிமையுடைய களவு, கற்பு வாழ்க்கையினையும் புறம் என்பது மறக்குடி மக்களின் வீரத்தையும் விளக்கி நிற்கின்றன. குறிப்பாக புறம் பொருள் பற்றிய வாழ்க்கையில் ஆணும் பெண்ணும், அறம் வழுவாமல் வாழ்வதில் போட்டியிடுகின்றன. நாற் பொருளின் முதன்மையாக விளக்கம் அறம் ஆனது சங்ககால மக்களின் வாழ்க்கையில் எல்லா நிலைகளிலும் ஊடாடி உள்ளது. அறம் பற்றிய தனிப்பட்ட விளக்கத்தினை நோக்கும் போது சங்க கால மகளிர் பல்வேறு வாழ்க்கை நிலைகளில் அறம் சார்ந்த உன்னத வாழ்வே வாழ்ந்துள்ளனர்.

அறத்தின் தோற்றம், அறத்தின் வளர்ச்சி அறத்தின் பல்வேறு பரிணாமங்கள், பெண்பாற் புலவர்பாடிய போர் அறம், போன்றவை இவ்இயலில் விரிவாக ஆராயப்பட்டுள்ளது. மேலும் கைம்மை, விருந்தோம்பல், விருந்தோம்பல் சிறப்பு மற்றும் மேன்மை, ஆற்றுப்படையில் விருந்து அறம் சார்ந்த வாழ்க்கைகள் போன்றவை இவ்இயலில் கூறப்பட்டுள்ளது.

சங்ககாலப் பெண்பாற் புலவர்கள் தங்களின் பாடலின் வழி அறச் சிந்தனைகளை விதைத்து உள்ளனர். ஐவகை நிலங்களில் வாழ்ந்த மகளிர் நிலத்திற்குறிய புழங்கு பொருள்களை கொண்டு வணிகம் செய்து வாழந்துள்ளனர். உயர்ந்த தொழிலான வேளாண் தொழிலின் ஆணுக்கு நிகரான செயல்களை செய்துள்ளனர். ஆடை அணிகலன்களை பண்பாடு வழுவாமல் அணிந்து மகிழ்ந்து உள்ளனர். மகளிர் விளையாட்டு, சடங்கு முறைகளில் சமுதாயம் போற்றும் நிலையில் அறம் சார்ந்த வாழ்வினை வாழ்ந்து இருந்தினர் என்பது இவ்இயலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**சான்றெண் விளக்கம்**

1. வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி 2)
   தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். பக் 45-46
2. வே.முத்துலக்குமி, பண்டைத்
   தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள். பக் 27-28
3. புறம் பா.9 வரி.1-6
4. அ.மாணிக்கனார், பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்
   மூலமும் தெளிவுரையும் (மூன்றாம் தொகுதி)
   ஆசாரக்கோவை, ப.409
5. புறம் பா.56 வரி.1-2
6. மேலது., பா.277
7. மேலது., பா.278
8. மேலது., பா.279
9. கலைஞர் மு.கருணாநிதி., சங்கத்தமிழ், ப.334
10. புறம் பா.312
11. மேலது., பா.95
12. மேலது., பா.112
13. ஔவை.க.துரைசாமிப்பிள்ளை, புறநானூறு விளக்கவுரை, ப.248
14. புறம்., பா.11
15. மேலது., பா.250
16. வாழ்வியற் களஞ்சியம்., தொகுதி ஐந்து ப.367
17. அகம்.பாலை பா.331
18. புறம்., பா.327
19. மேலது., பா.333
20. பெரும்., வரி.211-218
21. புறம்., பா.61
22. குறிஞ்சிப்பாட்டு வரி.35-45
23. புறம்., பா.28
24. மேலது., பா.395

25. மேலது., பா.61
26. மேலது., பா.280:வரி.6-10
27. மேலது., பா.259:வரி.5-6
28. திரு., வரி.238-245
29. வே.முத்துலக்குமி., பண்பாட்டுச் சிந்தனைகள், ப.83
30. புறம்., பா.101: வரி1-3
31. மேலது., பா.182
32. சே.பழனிச்சாமி., புறநானூற்றில் தமிழர் பண்பாடு., ப.38
33. புறம்., பா.42: வரி13-18
34. மேலது., பா.326: வரி7-12
35. மேலது., பா.331: வரி 6-9
36. சிறுபா., வரி 175-177
37. மேலது., வரி.193-195
38. பெரும்., வரி.94-100
39. புறம்., பா.333: வரி.6-13
40. மேலது., பா.333: வரி.16-19
41. மேலது., பா.224: வரி.12-16
42. மேலது., பா.246: வரி.1-3
43. மேலது., பா.246: வரி.4-10
44. மேலது., பா.246: வரி.13-15
45. மேலது., பா.253: வரி.1-6
46. திரு., வரி.201-204
47. புறம்., பா.326: வரி.4-5
48. மதுரை., வரி.554
49. இரா.வேலம்மாள், தமிழ்இலக்கியத்தில் அணிகலன்கள், பக்.150-178
50. புறம்., பா.253
51. மேலது., பா.352: வரி.5
52. மேலது., பா.283: வரி.10

# இயல் 5

## சங்க இலக்கியங்கள் காட்டும் பெண்களின் மனிதம்

சங்கப் புலவர்கள் தொலைநோக்குப் பார்வை உடையவர்கள். தெளிந்த சிந்தனை உடையவர்கள்; மனித நேயமிக்கவர்கள்; கலையுணர்வும், கூர்த்த மதியும் பெற்றவர்கள்; வறுமை அவர்கள் வாழ்க்கையைச் செதுக்கியது. வாழ்வதற்காக எதை வேண்டுமானாலும் செய்யத் துணியாதவர்கள். சங்கப் புலவர்களுள் புரவலர்கள் தலைவர்கள் என இருவகையாகவும் இருபாலரும் இருந்தனர். வாழ்வைப் பற்றிய தன் பார்வையை அனுபவப் பிழிவைத் தேன் கூடாகத் தம் கவிதைகளில் சேமித்து வைத்தனர். அவர்களின் கூர்ந்த நுண்ணோக்கினால் தொலை நோக்குப் பார்வையோடு எல்லாக் காலத்துக்கும் பொருந்தக்கூடிய செழுமை மிக்க கவிதைகளும் நமக்குக் கிடைத்தன.

'ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்பது போல சங்க இலக்கியங்களில் ஒரு நூலை எடுத்துப் படித்தாலே அவற்றில் கூறப்பட்டுள்ள மனித நேயம் என்னும் மாண்பு தமிழர்களுக்கே உரிய சிறப்பு என வெளிப்படும்.

**"வள்ளியோர்ப் படர்ந்து புள்ளின் போகி**
**நெடிய என்னாது சுரம்பல கடந்து**
**வடியா நாவின் வல்லாங்குப் பாடி**
**பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருந்தி**
**ஓம்பாது உண்டு கூம்பாது வீசி**
**வரிசைக்கு வருந்தும் இப்பரிசில் வாழ்க்கை"**[1]

என வரும் சங்கப் பாடல் இரவலர்க்கு அளிக்கப்படும் பரிசிலின் மனித நேயத்தை சுட்டுகிறது. 'உற்றுழி உதவியும் பொருள் கொடுத்தும்' எனும்

நெடுஞ்செழியனின் பாடல் சங்கப் புலவர்களின் வாழ்வியல் நோக்கு உளவியல் நோக்கோடு கூடிய பன்முகப் பார்வையும் விரிந்த நோக்கையும் உடையது. சங்கப் புலவர்கள் புரவலனிடம் பொருள் பெறுவதை மட்டும் நோக்கமாகக் கொண்டு பாடல்கள் பாடவில்லை; மானுட உறவை வலுப்படுத்தினர்; புரவலனுக்கு நல்ல நண்பனாகவும் தூதுவனாகவும் வழிகாட்டியாகவும் அவன் குடும்பத்தில் ஒருவராகவும் விளங்கினர். சுருங்கக் கூறின் தன் நட்புக்குரிய தலைவர்களோடு இரண்டறக் கலந்து வாழ்விலும் தாழ்விலும் ஊடாடினர். அவர்களுக்கு ஊன்றுகோலாகவும் நல்ல ஆசானாகவும் வாழ்ந்து காட்டினர். சுருங்கச் சொன்னால் நல்ல மனிதர்களாக வாழ்ந்தனர். அவர்களின் இலக்கியங்களின் வழி ஒவ்வொருவரும் நடந்தால் நாடு நலம் பெறும்; வாழ்வு செழிக்கும்; மனிதம் தழைக்கும்; மானுடம் வாழும்.

சங்கப் புலவர்களின் அனுபவக் களஞ்சியமாக விளங்கும் சங்க இலக்கியங்கள் முழுவதும் மனிதநேயம் பற்றிய செய்திகள் வரவிக் கிடக்கின்றன. அவை தனி சமூக நிகழ்வுகள் பற்றிப் புலவர்கள் சித்தரிக்கும் பொழுதும், அறிவுறுத்தல் பாங்கிலும், தம் அனுபவங்களைப் பிறரிடம் பகிர்ந்து கொள்ளும் கூற்றிலும், புலவர்கள் இரவலரைப் புரவலனிடம் ஆற்றுப்படுத்தும் பொழுதும் எனப்பலவாறாக வெளிப்படுகின்றன.

இவ்வாறாக அரசர்களும், வள்ளல்களும், புரவலர்களுக்கும் இரவலர்களுக்கும் அளித்த பரிசில்கள் மூலம் மனித நேயத்தோடு பண்டைத் தமிழர்கள் வாழ்ந்தனர் என்பதை அறிந்து கொள்ளமுடிகிறது. குறிப்பாக பெண்பாற் புலவர்கள், அக இலக்கியங்களில் சுட்டப்படும் பெண் மாந்தர்கள் மனித நேயத்தினை போற்றி இருக்கின்றனர் என்பதை இவ்இயலின் வழிவிரிவாக விளக்கப்படுகிறது.

மனித வாழ்வில் இளம் பருவத்தினரே இலக்கியத்தின் தலைமைப் பாத்திரங்களாகத் திகழ்கின்றனர். இப்பருவத்தில் ஒவ்வொரு ஆணும்

பெண்ணும் புகழ் நாட்டமுடன் அனைத்துவிதமான ஆர்வங்களை நிறைவேற்றிக் கொள்ள விழைகின்றனர். இவ்ஆர்வங்களில் கருணை, வீரம், ஈகை உதவிமனப்பான்மை ஆகிய பண்புகள் மிளிர்கின்றன. இவற்றிற்கு மேலாகப் பாலியல் நாட்டம் முதன்மையுறுகின்றது. இதனைத் துய்க்கத் தலைமை மக்களுக்குக் கொடுப்போரும் கொள்வோரும் இடையூறாக இருக்கக் கூடாது. தத்தம் வாழ்வைத் தனியே கலந்து பழகிச் சரியான புரிந்து கொள்ளுதலுடன் வாழ முயலுதல் வேண்டும். இவ்வழிக் காதலுறவு உலக அன்பின் அடிப்படையாக அமையுமெனச் சங்க அகப்பாடல்கள் வலியுறுத்துகின்றன. இவ்வொழுக்கம் உடையோரால்தான் மனிதகுலத்தை மதிக்கவும், அன்பு காட்டவும் முடியும். இச்செந்நெறியை உலகின் இலக்கியப் பரப்பில் முதன்மையாக முழுமையாகச் சங்க இலக்கியங்கள் வலியுறுத்தினவென்பதை,

> **“அகத்திணை, வாழ்க்கையிலக்கியம் ஆதலால் உலக நடைமுறைக்கு ஒப்பதாயும் பெயரில்லாதாரின் காதலியல்புகளைப் புலப்படுத்துவதால், கற்பவர்க்குத் தமது என்ற உணர்ச்சியை ஊட்டுவதாயும் அமைந்துள்ளது”**[2]

என்று வ.சுப.மாணிக்கம் குறிப்பிட்டுள்ளார்.

உலகம் உவகையுடன் வாழ அன்பே அடிப்படை ஆகும். அன்புடையாரே பிறர்க்கும் இன்பத்தை உண்டாக்கித் தாமும் இன்பம் உடையவராக வாழ்வதற்குரியவராவர். இவ்வன்பு உள்நோக்கமற்றதாக, பிறருக்கு இடையூறு அற்றதாக மேலும் இடையூறு செய்தோரிடமும் இணக்கம் காட்டுவதாக அமைதல் வேண்டும். இவ்வடிப்படையின் புரிதலிலேயே மனிதநேயம் பிறக்கிறது.

மனிதநேயம் என்ற சொற்றொடர் மனிதன், நேயம் ஆகிய இரண்டின் கூட்டாக அமைந்தது. மனிதர்களுக்கிடையில் நிலவும் நேயம், மனிதர்களிடம் காட்டும் நேயம், மனிதர்களுடைய நேயம் எனப்பலவாறாகப் பகுத்துப் பொருள் காணும் நிலையில் இது அமைந்துள்ளது. மனிதர்கள் ஒவ்வொருவருக்கும் இடையில் நிலவும்

அன்பு கலந்த உறவை இது ஒரு வகையில் சுட்டி நிற்கின்றது. மனிதன் ஆறறிவு படைத்தவன் என்றும் பிற உயிர்கள் ஐந்தறிவும் அதற்கு குறைந்த அறிவும் கொண்டவை என்றும் பழந்தமிழ் இலக்கணமாகிய தொல்காப்பியம் கூறுகின்றது. இவ்வாறு குறிப்பிடும் தொல்காப்பியம் மனிதனின் ஆறாவது அறிவு 'மனம்' எனக் குறிக்கிறது. 'ஆறறிவதுவே அவற்றோடு மனமே' என்ற நூற்பா இக்கருத்தை நிறுவுகின்றது. எனவே மனம் உடையவனே மனிதன் என்பதை அறிய முடிகிறது.

இந்த 'மனம்' என்ற புலன், சிந்தனை வளர்ச்சிக்கும் செயல் திறனுக்கும் அடிப்படையாய் அமைந்திருக்கின்றது. மனத்தின் மூலம் உணர்ச்சிகள் வெளிப்படுத்தப்படுகின்றன. மனம் பலவிதமான செயற்பாட்டுடன் உறவு கொண்டுள்ளது. மனசாட்சி, மனக்கண், மனநிம்மதி, மனப்பால் முதலிய வழக்குத் தொடர்களும் வழங்கி வருதலைக் காணமுடிகிறது. இவை அனைத்தும் சிந்தனைக்குரிய புலன் 'மனம்' என்பதை உறுதி செய்கின்றன. எனவே மனம் என்ற ஆறாவது அறிவு மனிதனுக்குச் சிந்தனை ஆற்றலை வளர்க்கிறது என்பது புலனாகிறது.

இவ்ஆறாவது அறிவாகிய சிந்தனைத்திறனும் மனிதத் தன்மைகளாகிய அன்பும், இரக்கமும் நிறைந்த மனிதன் தனித்து வாழ்வதென்பது இயலாததாகும். அவன் தன் சமூகத்துடன் இணைந்தே வாழ வேண்டியுள்ளது. இதனாலேயே மனிதன் ஒரு சமூகப்பிராணி என அறிஞர்களால் குறிக்கப்படுகின்றான்.

> **"இயற்கைப் படைப்பின் மணிமுடியாக விளங்குபவன் மனிதன். தனக்கேயுரிய சிறப்புப் பண்புகளாலேயே மனிதன் பிற விலங்குகளின்றும் வேறுபடுகின்றான். அவனுடைய மனமே அவ்வேறுபாட்டை உருவாக்குகின்றது. சமுதாய விலங்காகிய மனிதன் பிறமனிதர்களோடு கலந்து வாழும் போது தன்னலத்தை ஓரளவு புறக்கணித்துப் பொது நலத்தைப் பேணவேண்டியவனாகிறான்."**[3]

என மேலைநாட்டு அறிஞரின் கூற்றை எடுத்துக்காட்டுகிறார் கா.மீனாட்சி சுந்தரம்.

**நேயம்**

தமிழ்மொழியில் ஒருபொருள் குறித்த பல சொற்களும் பல பொருள் குறித்த ஒரு சொல்லும் மிகுதியாகக் காணப்படுகின்றன.

> **"நேயம் என்பதற்குக் கழகக் கையகராதி 'நேசம்', 'பக்தி', 'நெய்'. 'நன்மை"**[4]

என்ற பொருள்களைக் குறிக்கிறது. இதனைப் போல அன்பு என்பதற்கும் நேசம் என்பதற்கு 'அன்பு', 'தகுதி' என்ற பொருள்களையும் அவ்வகராதியில் காணமுடிகிறது.

மேலும்,

> **"நேயம் என்ற சொல்லுக்குச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் லெக்சிகன் அன்பு, பக்தி என்ற பொருளைத் தருகிறது."**[5]

அன்பு என்பது ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையில் இருக்கும் உறவைக் குறித்து முதற்கண் எழுந்தது. பின்னர் நாட்டன்பு, இசையன்பு, பிள்ளையன்பு, கடவுளன்பு எனவும் வழங்கப்பட்டது. அன்பு என்பது வாழ்க்கையைக் கொடுப்பது, சுதந்திரமாக்குவது. இது தனிப்பட்ட இருமனிதர்களுக்குரிய உணர்ச்சியாகக் கொள்ளப்படுகிறது. இடத்திற்கு இடம் ஆளுக்கு ஆள் அவரவர் முதிர்ச்சியின் அடிப்படையில் இதனை விளங்கிக் கொள்ளக் கூடியதாக இது அமைந்துள்ளது.

**அன்பு**

நேயம் என்பதற்கு 'அன்பு' என்றும் ஒரு பொருள் உண்டு. 'அன்பு' என்பதன் பொருளைக் குறிக்கப் பல சொற்கள் உள்ளன. பற்று, பாசம், அருள், காதல், நட்பு, நேயம், பக்தி, கருணை இவ்அனைத்துச் சொற்களும் அன்பு என்னும் ஒரு பொருளையே குறிக்கின்றன.

பெற்றோர் தம் குழந்தைகளிடத்துச் செலுத்தும் அன்பு ‘பற்று’ ‘பாசம்’ எனப்படுகிறது. கணவன் மனைவியரிடையே தோன்றும் அன்பு ‘காதல்’ எனப்படுகிறது. குருவிடத்து அன்பர்கள் கொள்ளும் அன்பு ‘பக்தி’ எனப்படுகிறது. ஒத்த அன்புடையார் இருவர் தம்முள் பரிமாறிக் கொள்ளும் அன்பு ‘நட்பு’ என்றழைக்கப்படுகிறது. இறைவன் எல்லாப் பொருள்களிடத்துக் கொள்ளும் அன்பு ‘அருள்’ எனவும், அதன் முதிர்வு நிலை ‘கருணை’ எனவும் குறிக்கப்படுகின்றது.

> **“தமிழ்ப் பல்கலைக்கழகப் பெருஞ்சொல்லகராதி அன்பு என்பதற்குத் தொடர்புடையார் மீது உண்டாகும் பற்று, நட்பு, விருப்பு, காதல், உளநெகிழ்ச்சி, காமம், ஆசை, கருணை, பக்தி மென்மை”[6]**

எனப்பொருள் கூறுகின்றது.

அன்பின் பெயர்களை நாமதீப நிகண்டு,

> **“ஈரநே யம்புரிவா ணம்பாசம் பத்திரிபரி**
> **வார்வாந ரன்பெழுமை யன்புழுவல்-போர்மை**
> **கருணை யிரக்கந் தாயவே கிருபை**
> **யருளளிய னுக்கிரக மாம்”[7]**

என்ற நூற்பாவில் விளக்குகிறது. இத்தகைய அன்பு என்ற உணர்ச்சி மக்கள் உயிர்க்கு மட்டுமின்றி எல்லாவுயிர்களிடத்தும் அமைந்துள்ள பண்பாக காணப்படுகின்றது.

> **“பறவை விலங்கு இனங்கட்கும் அன்பு வெளிப்பாடு உண்டு**
> **மரஞ்செடி கொடிகட்கும் அன்புச்செயல் உண்டு”[8]**

என வ.சுப.மாணிக்கம் அன்பு பற்றிச் ‘சங்கநெறி’ என்ற தமது நூலில் குறிப்பிடுகிறார்.

அன்பே இவ்வுலக இயக்கத்தின் அடிப்படை பொருளாக அமைந்திருக்கிறது என்பதை மேற்கண்டவற்றால் தெளியமுடிகிறது.

**அன்புநேயம்**

இனி மேற்குறிப்பிட்ட அன்பு என்பதும் நேயம் என்பதும் ஒன்றுதானா? அவற்றுள் வேறுபாடு ஏதேனும் உண்டா? என்பதை உற்று நோக்க வேண்டும்.

அன்பு, நேயம் என்ற இவ்விரு சொற்களுக்கும் தனித்தனியே நாம் கண்ட மேற்கூறிய விளக்கங்களை உற்று நோக்குங்கால் நேயம் என்பதும் அன்பு என்பதும் மனித மனங்களில் இயற்கையாக எழும் ஓர் உயர்ந்த உணர்வு என்பதும் புலனாகும். இது வெளிப்படும் முறைகளிலும், காரணங்களிலும் இதன் செயல்பாடுகளிலும் வேறுபாடுகள் காணப்படினும் இவ்வுணர்வை எவ்வுயிரும் நீக்கவோ மறைக்கவோ இயலாததாகும்.

அன்பு எனப்படும் நேயம் அனைத்திற்கும் உரியதாயினும் மனித மனங்களில் எழுகின்ற போது மனிதநேயம் எனப்படுகின்றது. மனிதனுக்கு உயிர் வாழ உணவும், உடையும், இருப்பதற்கு இடமும் தேவை. இவை அனைத்தும் மக்கள் இனம் அனைத்திற்கும் பொதுவானவை ஆகும். இருப்பினும் வாழ்க்கையில் நிறைய வேறுபாடுகள் காணப்படுகின்றன. மதம், சாதி பொருளியல் முதலியவற்றால் வேறுபட்டும், நிறத்தாலும், நிலத்தாலும் பிளவுபட்டும் வாழும் ஒற்றுமையற்ற வாழக்கை தொடர்ந்து வருகிறது. இத்தகைய பிரிவினைகளைப் போக்கவும் புதிய வழிகளைக் காணவும் காலந்தோறும் எண்ணற்ற பெரியோர்கள் தோன்றித் தம் கருத்துக்களைப் பரப்பி வந்தாலும் அவர்களது முயற்சி வெற்றியடையாமலேயே போகின்றது. இதற்கெல்லாம் அடிப்படைக் காரணம் மனிதநேயக் குறைபாடுகளே யாகும். எனவே மனிதன் மனிதனாக வாழவும், சமுதாயமும். நாடும் வளம் பெறவும் தான் தனக்கு தங்களுக்கு என்ற சுய நல உணர்வுகள் மறைய வேண்டும். மேலும் பொதுநலம் மேலோங்க வேண்டும். அதற்கு அடிப்படைப் பண்பாக அமைவதே மனிதநேயப் பண்பாகும்.

இத்தகைய மனிதநேயம் காலந்தோறும் எவ்வாறெல்லாம் மக்களால் வெளிப்படுத்தப்பட்டது என்பதை அறிய வேண்டியது அவசியமாகும்.

**காலந்தோறும் மனிதநேயம்**

உலக மக்களின் ஒவ்வொரு காலகட்ட வாழ்க்கையையும் அறிய பேருதவியாக இருப்பவை வரலாற்று நூல்கள். அந்தக் காலங்களில் நடந்த நிகழ்ச்சிகளை அப்படியே சுட்டிச் செல்கின்றன. இலக்கியங்கள் அவற்றை அழகுப்படுத்தி ஆர்வத்தோடு கூறுகின்றன. எனவே இலக்கியப் படைப்பாளனின் பணி மனித சமுதாயத்திற்கு மிகவும் இன்றியமையாத தாகிறது.

மனிதநேயத்தை வளர்க்கும் கலை வடிவங்கள் பற்பல; அவற்றுள் சிறப்பிடம் பெறுவது இலக்கியம் என்றும் மனிதநேயப் படைப்பாளர்களை உருவாக்குவதில் கவிஞன் முன்னணியில் நிற்கிறான் என்றும் மனித நேயத்தை வளர்க்க வேண்டிய பொறுப்பு இலக்கியங்களைப் படைக்கும் படைப்பாளர்களுக்கே பெரிதும் உரியது என அறிஞர்கள் கருதுவர்.

சமுதாயத்தின் மீது அக்கறை கொண்ட இலக்கியப் படைப்பாளர்களே சமூகத்தின் நன்மை, தீமைகளை மிக அழகாகச் சித்தரித்துக் காட்டுகின்றனர்.

**தொல்காப்பியர் காட்டும் மனிதநேயம்**

தமிழ்மொழியைப் பொறுத்தவரை அனைத்திற்கும் இலக்கணம் வகுத்தவராகக் கருதப்படுவர் தொல்காப்பியர். இவர் மனிதநேயம் பற்றிக் குறிப்பிடுவது கருதத்தக்கது. உலகில் இன்பம் நிலவுவதற்கு அடிப்படைக் காரணம் அன்பு, இன்பம் என்பது அவரவர் மனத்தைப் பொறுத்தே அமைகிறது. இதனைத் தொல்காப்பியர்,

> **“எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது**
> **தான் அமர்ந்து உருஉம் மேவற்றாகும்”**[9]

என்ற நூற்பாவில் கூறுகிறார்.

எனவே, மனிதன் தன் மனமகிழ்ச்சியை நாடின் மாற்றாரின் நலனையும் நாடவேண்டியவனாகிறான் என்பது புலனாகிறது.

**சங்க இலக்கியங்களில் மனிதநேயம்**

தொல்காப்பியத்திற்கு அடுத்தபடியாகத் தமிழ்ச் சமுதாயத்தின் நிலையை அறிய அனைத்து வகையிலும் உதவுவன சங்க இலக்கியங்கள். இவை அகம், புறம் என்ற இருதிறத்திலும் அக்காலச் சமுதாயத்தின் மனிதநேயத்தைக் காட்டுகின்றன. சங்ககாலச் சமுதாயம் தனிமனிதன் மட்டுமின்றி முழுச் சமுதாயத்தின் நலனையும் எண்ணுவதாகவே திகழ்ந்தது.

சங்ககாலத் தமிழ்ச் சமுதாயம் சமய நம்பிக்கையை மட்டும் அடிப்படையாகக் கொண்டது அன்று. மனிதன் மனிதனாக வாழ வேண்டும் என்னும் மனிதநலக் கோட்பாட்டினையும் அடிப்படையாகக் கொண்டு அமைந்திருந்தது.

'மன்பதை காக்கும் நின் புரைமை', 'யாதும் ஊரே யாவரும் கேளீர்', ஆகிய இலக்கியத் தொடர்கள் சங்க காலத்திலே உலகம் முழுவதையும் ஒன்றாகக் கருதிய பாங்கையும் அனைத்து மக்களையும் தம்மைப் போலவே எண்ணி மதித்துப் போற்றிய பண்பையும் வெளிப்படுத்துகின்றன.

"இந்திரர் அமிழ்தம் இயைவதாயினும்" தனக்கென வாழாது பிறர்க்கென வாழ்ந்த சான்றோர்களாலேயே இவ்வுலகம் நிலை பெற்றிருக்கின்றது எனச் சங்ககால மக்கள் நம்பினர். அவர்கள் பிறரது வறுமையைக் கண்டு அஞ்சினர். அவர்தம் வறுமையைப் போக்குதலே தம் தலையாய கடமை என்று எண்ணினர். இதற்குப் புறநானூற்றிலும் பிற சங்க நூல்களிலும் காணப்படும் வள்ளல்கள் பற்றிய செய்திக் குறிப்புகள் சான்றாக அமைகின்றன.

சான்றோரால் மதித்து உயர்த்திக் கூறப்படும் செல்வம் யாதெனில் தம்மை நம்பி வந்து அடைந்தோரின் துன்பத்தையும், வறுமையையும். கண்டு அஞ்சி, அத்துன்பத்தைப் போக்கி அவரைக் கைவிடாமல் காக்கும் இனியதன்மையேயாகும் என்று சங்ககாலத் தமிழ்மக்கள் போற்றிய மனித நலக் கோட்பாடு உணர்தற்குரியது. தாம் இன்புறுவதற்குக் காரணமான கல்வியால் உலகமும் இன்புற வேண்டும் என்பது பண்டைத் தமிழரின் மனிதநல நாட்டமாகும் என்று சங்ககால மக்களின் மனிதநலக் கோட்பாடுகள் பற்றி அறியமுடிகிறது.

**பிற இலக்கியங்கள் காட்டும் மனிதநேயம்**

தமிழ் இலக்கியங்களில் தொடக்க காலத்திலிருந்தே மனித நேயப் பண்பு பேசப்பட்டு வந்துள்ளதைச் சான்றாதாரங்கள் வெளிப்படுத்துகின்றன. இலக்கிய வரலாற்றில் சிறப்பிடம் பெற்றுள்ள காப்பியங்களிலிருந்தும் மனித நேயத்தை உணர்ந்து கொள்ளமுடிகிறது. இவ்உயர் பண்பைச் சிலப்பதிகாரத்தின் வழி இளங்கோவடிகள் உணர்த்துகிறார்.

மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் சில கடமைகள் உண்டு. அதில் சமுதாயக் கடமையும் ஒன்று. அதிலும் பிறர் நலம் பேணல் தலையாய கடமையாகும். சிலப்பதிகாரத்தின் மூலம் கண்ணகி என்ற தமிழ்க் குடும்பப் பெண்ணின் உயர்ந்த மனிதநேயத்தை ஆசிரியர் எடுத்துக் கூறியுள்ளார். கணவனைப் பிரிந்து வாழும் கண்ணகி கணவனுடன் இருந்து விருந்தினரை உபசரிக்க இயலவில்லையே என வருந்துவதாகச் சித்தரிக்கப்பட்டுள்ளது. இப்பண்பு மனிதநேயப் பண்பாகக் கொள்ளத் தகுந்தது. இச்சூழலை,

**“அறவோர்க்கு அளித்தலும் அந்தனர் ஓம்பலும்**
**துறவோர்க்கு எதிர்தலும், தொல்லோர் சிறப்பின்**
**விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை”**[10]

என்ற கண்ணகியின் கூற்றுவாயிலாக இளங்கோவடிகள் புலப்படுத்து கின்றார்.

இரட்டைக் காப்பியங்களில் ஒன்றாகிய சிலம்பு இப்படிக்கூற மணிமேகலை பசிப்பிணி நீக்குதலையே நோக்கமாகக் கொண்டிருக்கிறது பண்டைத் தமிழகத்தில் மற்றவரின் வறுமையைக் களைவதே மனித நலக் கொள்கையாகத் திகழ்ந்தது.

குடிப்பிறப்பழிந்து, சிறப்பினைக் கொன்று, கல்வி நலனையும் கெடுத்து, நாணினைக் களைந்து, மாணெழில் சிதைத்துப் புறங்கடை நிறுத்தும் பாவியாகிய பசியை மணிமேகலை அழிக்க விரும்பியமையை,

**"மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்**

**உண்டி கொடுத்தோ ருயிர் கொடுத்தோரெ"**[11]

என்றும், அவளது அமுத சுரபியில் பிச்சையிட்ட கற்புக்கரசியாம் ஆதிரை,

**"பாரக மடங்கலும் பசிப்பிணி யறுகென"**[12]

வாழ்த்தியமையையும் சாத்தனார் எடுத்தியம்பும் திறன் உணர்ந்து இன்புறத்தக்கது.

சிலம்பும் மேகலையும் மக்களின் பசிப்பிணி அறுத்தலைச் சிறந்த நேயமாகக் கொள்ள, கம்பன் சாதி வேறுபாடற்ற சமூகத்தைக் கூறுகையில்,

**"குகனொடும் ஐவரானோம் முன்பு பின் குன்று சூழ்வான்**

**மகனொடும் அறுவரா னோம் எம்முழை அன்பின் வந்த**

**அகனர் காதலைய நின்னொடும் எழுவரானோம்**

**புகலருங் கானந்தந்து புதல்வரால் பொலிந்தான் நுந்தை"**[13]

என இராமன் அனைவரையும் நேயத்தோடு சகோதரனாக ஏற்றுக் கொண்ட தன்மையைக் காட்டுகிறார்.

**சங்க இலக்கியப் பெண்களின் தனிமனிதநேயம்**

உலகில் அன்பு நிலைபெற, காதலர் உரிமைகளைப் பெற்றுச் சமூகத்தில் தடையின்றி உலவ வலியுறுத்திய இலக்கியமாகச் சங்ககாலப் பாடல்கள் திகழ்கின்றன. காதல் வாழ்க்கையின் சிறப்பையும் நுட்பங்களையும் நம் பழந்தமிழ் நூல்கள் சுவைபட விளக்குகின்றன.

இத்தகைய அன்பு வாழ்விற்குத் தலைவி தலைமை தாங்குகிறாள். இதனால் அகத்திணையில் பெண்பாலரின் பங்கு பெரிதாகின்றது.

குடும்ப வாழ்வின் உறவு நேயத்தை வளர்க்கத் தலைவி அன்புடைமையுடன் நடந்து கொள்கிறாள். அடிப்படை உரிமைக்காகத் தலைவனிடமும், மற்றவர்களிடமும் குரல் கொடுக்கிறாள். அஃறிணை உயிர்களிடத்தும் அன்பு கொள்கிறாள். தன் மறுப்பை வெளிப்படுத்தும் போது கருப்பொருள்களின் செயற்பாட்டுடன் தெரிவிக்கிறாள். களவொழுக்கம் கற்பொழுக்கமாக மேன்மையுறத் தலைமக்களுக்கு ஏற்படும் துன்பங்களைக் களைந்து இணக்கப்படுத்தும் முயற்சியில் நற்றாய், செவிலி, தலைவி, தோழி ஆகிய பெண்பாத்திரங்கள் மேற்கொள்ளும் முயற்சிகளைத் தனித்தனியே இங்குக் காண்போம்.

**நற்றாய்**

தன் மகளின் அன்பு நெறியைப் போற்றியொழுகுபவளாய்த் திகழ்பவள் நற்றாய். தலைமகள் உடன்போக்கிற்கு ஆட்பட்டபோது மகளின் முடிவிற்குக் கவலைப்படுவதைவிட அவள் சென்ற வழியின் கொடுமைக்குப் பெரிதும் கவலைப்படுபவளாக விளங்குபவள் நற்றாய். நற்றாய் தம் இல்லறத்தின் அறம் பொருள் இன்பமிவற்றைக் காப்பாற்ற வேண்டிய முழுப் பொறுப்பினளாவாள். மேலும், தாய் சமுதாயத்தோடு ஒன்ற அறம் பொருள் இன்பங்களில் வழுவாமல் இல்லறத்தை இனிதே நடத்த வேண்டிய கட்டுப்பாடுகளும் உடையவள் என்பர்.

நற்றாய் மேற்கூறியவாறு இல்லறத்தை மேற்கொண்டதோடு மட்டுமல்லாமல் தன் மகளிடத்தும் பேரன்பு கொண்டிருந்த நிலையையும் சங்க இலக்கியப் பாடல்களால் அறியமுடிகிறது. நற்றாய் கூற்றாக வரும் ஐம்பத்தொன்பது பாலைத்திணைப்பாடல்கள் வழி அவளது அன்பு உள்ளத்தைக் காணமுடிகிறது. இப்பாடல்கள் தலைவி தன் தலைவனுடன் உடன்போக்கிற்குச் சென்றபின் புலம்பும் அன்னையின் கூற்றாக அமைந்துள்ளன.

தன் மகளது காதல் நோய்க்கு உரிய தலைவன் இன்னாரென அறியும் வகையில் அன்புடையவளாகிய அன்னை அறத்தொடு நிற்கும் காலத்துப் பெரும் பொறுப்புடையவளாகிறாள். தலைவி தோழிக்கும், தோழி செவிலிக்கும், செவிலி நற்றாய்க்கும் சொல்லாமல் இயம்பியவற்றை ஆடவராகிய தந்தைக்கும் தமையர்க்கும் குறிப்பால் உணர்த்தும் பெருங்கடமை தாய்க்கு உரியதாகிறது. இதனை,

**"தந்தையும் தன்னையும் முன்னத்தின் உணர்ப"**[14]

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

தலைவியின் காதலையறிந்து அதனைத் தந்தைக்கும் தமையர்க்கும் உணர்த்தி மகளின் மணவாழ்வை முடிக்கும் தாயின் நிலையை,

**"அறத்தோடு நின்றேனைக் கண்டு, திறப்பட**
**என்னையர்க்கு உய்த்த உரைத்தாள் யாய்;**
**அவரும், தெரிகணை நோக்கிச், சிலை நோக்கிக் கண்சேர்ந்து**
**ஒருபகற் லெல்லாம் உருத்தெழுந்து ஆறி**
**இருவர்கண் குற்றமும் இல்லையால் என்று**
**தெருமந்து சாய்த்தார் தலை"**[15]

என்னும் கலித்தொகைப் பாடலடிகளால் அறியமுடிகிறது.

மேலும் தாய் குறிப்பால் அறத்தோடு நிற்கும் நிலையை, நற்றாயோ தலைவியின் தந்தைக்கும் உடன் பிறந்தோர்க்கும் சொல்லாற் கூறாது அவர்கள் அறிந்து கொள்ளும் குறிப்பால் தெரிவிப்பாள் என்பது நற்றாயின் நல்லிணக்கத்தைக் குறிப்பிடுவர்.

இவ்வாறு அறத்தோடு நிற்றல் மட்டுமன்று, தலைவியின் களவொழுக்கத்தை அலர் அறிந்த தாய், தலைவி தலைவனிடையே அமைந்த நட்பைக் கூர்ந்து ஆய்வாள்.

இரவுக்குறியில் சிறைப்புறமாக வந்த தலைவனைக் கண்ட அன்னை தன் மகள் முகம் நோக்கி,

**"வல்லே யென் முகன் நோக்கி**

**நல்லை மன்னென நகூஉப் பெயர்ந்தோளே"[16]**

என்று கூறினாள். இதனால் தன் மகள் கொண்ட காதலொழுக்கம் முறையாக வளர்தல் கண்டு உவந்தமையால் நற்றாயின் பொறுப்பு மிக்க நேயம் வெளிப்படுவதை அறியலாம்.

முற்றிய தினைக்கதிரைக் காவல் செய்யும்படித் தந்தை மகளிடம் கூறினார். அதுகேட்ட அன்னை, தலைவியின் முகத்தைப்பொருள் பொதிந்த பார்வையுடன் நோக்கி, வேங்கை மலர்கள் இனி மலர்வதாக எனக் கூறினாள். இதனால் தன் களவொழுக்கத்தைத் தாய் அறிந்தாளோ எனத் தலைவியின் மனம் அஞ்சுகிறது. இதனை,

**"எந்தை வந்து உரைத்தனனாக அன்னையும்**

**நன்னாள் வேங்கையும் மலர்கமா இனியென**

**என்முகம் நோக்கினன் எவன்கொல் தோழி**

**செல்வாள் என்று கொல் செறிப்பல் என்றுகொல்**

**கல்லெழு நாடன் கேண்மை**

**அறிந்தனள்கொல் அ.்.து அறிகலேன் யானே"[17]**

என நற்றிணைப்பாடல் விளக்குகிறது.

தலைவியின் மீது உள்ளன்பு கொண்ட தாய் தன் மகளின் களவொழுக்கத்தை நுண்ணிதின் நோக்கும் நேயத்தை இச்சான்றுகள் வெளிப்படுத்துகின்றன.

தன்னைப் பிரிந்து சென்ற தன்மகளின் இளமையையும் காதல் வன்மையையும் எண்ணிப்பார்க்கும் அன்னை, அவள் சென்ற வழியினது இயல்பை எண்ணி அவ்வழி இனிதாக வேண்டுமெனவும் அறிமுகமானோர் பலர் அங்கிருந்து தலைவியைக் காக்க வேண்டுமெனவும் எண்ணுவதை அகநானூற்றுப் பாடல்கள் விளக்குகின்றன. பாலைநிலமே தன் தன்மையில் மாற வேண்டுமென்ற விருப்பத்தையும் உடையவள் நற்றாய்.

தலைவனை நம்பிச் சென்ற தலைவிக்குத் தன் மார்பைத் துயிலிடமாகத் தந்து தலைவன் காக்கவேண்டுமெனத் தெய்வத்தையும் வேண்டுகிறாள்.

**"ஆர்வ நெஞ்சமொரு ஆய்நலன் அளைஇ, தன்**
**மார்பு துணையாகத் துயிற்றுகதில்"**[18]

எனத் தாய் கவலைப்படுவதைக் காணமுடிகிறது.

இது மட்டுமின்றி உடன்போக்கிற்சென்ற தம்பதியர் தன் வீட்டுக்குத் திரும்ப வேண்டுமெனத் தாய் வேண்டிக் கொள்கிறாள் காக்கை கரைவது கண்டு வீட்டிற்குப் புதியவர் வருவர் என்ற நம்பிக்கையோடு தாய் உள்ளாள். தன் வீட்டிற்குத் தலைமக்கள் வருவர் என்ற நேயத்தை

**"மறுவில் தூவிச் சிறு கருங்காக்கை**
**அன்புடை மரபின் நின்கிளையோ டாரப்**
**பச்சூன் பெய்த பைந்நிண வல்கி**
**பொலம்புனை கலத்தில் தருகு வென் மாதோ**
**வெஞ்சின விறல்வேல் காளையொடு**
**அஞ்சி லோதியை வரக்கரைந் தீமே"**[19]

என நற்றாய் வெளிப்படுத்துவதை அறியலாம். இதன் மூலம் நற்றாய் தான் பெற்றெடுத்த மகள் மீது தவறு செய்தாலும் அவளின் மீது மாறா அன்பு உள்ளவளாக விளங்குவதை பலஅகப்பாடல்கள் இயம்புகிறன்றன.

**செவிலி**

தலைவன் தலைவியரின் அன்பொழுக்கத்தில் நற்றாய்க்கு அடுத்த நிலையில் நின்று உதவுபவள் செவிலித்தாயாவாள். இவளது அருமையைத் தொல்காப்பியர்,

**"ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்**
**தாயெனப் படுவாள் செவிலியாகும்."**[20]

எனக்குறிப்பிட்டவற்றால் அறியலாம்.

நற்றாயின் தோழியாகவும் தலைவிக்குச் செவிலியாகவும் சங்கப்பாடலில் செவிலி திகழ்கிறாள். நற்றாயைப் போலவே செவிலியும் தலைவி மாட்டு மாறா அன்பு கொண்டவளாவாள். தோழி, செவிலி இருவருமே தலைவியின் களவு கற்பொழுக்கங்களில் பங்கு கொள்கின்றனர்.

ஒரு குடும்பத்தில் பிறந்த இரு தலைமுறையினராகிய செவிலியும் தோழியும் தலைமக்களின் வாழ்வில் பெரும்பங்கு கொண்டு அவர்களுக்காகத் தொண்டாற்றும் சிறப்பைப் பெறுகின்றனர். தலைவியின் இளமைப்பருவத்தில் அவள் உடலைப் போற்றி வளர்ப்பவள் செவிலி ஆவாள்.

தலைவியின் உடல்நலம் பேணி உரிய அறிவுத்திறன் வளரவும் நற்றாயினின்று செவிலித்தாய் பெரிதும் பொறுப்புடையவளாய் விளங்கினாள்.

தலைவி பிறந்தநாள் முதல் தொட்டுச் சிறந்து வளர்த்து வருபவளாக செவிலி உள்ளாள். அத்தலைவியின் உடல்நலம் வளருந்தோறும் உளநலமும் வளருமாறும், நாளடைவில் அவளுக்கு நல்லவை எல்லாம் கூறி, அல்லவை எல்லாம் அகற்றித் தலைவி எனும் பெயர்க் குரியவளாகச் செய்வாள். அத்தகைய சிறப்புக்குரியவள் செவிலி.

சங்க இலக்கியங்களில் தாய் கூற்றாக வரும் பல பாடல்கள் நற்றாய் கூற்று அல்லது செவிலிக் கூற்று எனப் பிரித்துணர இயலாதவாறு அமைந்திருப்பது செவிலி தலைவியிடத்துக் கொண்ட நேய உணர்வைக் காட்டுகிறது.

தலைவியை நற்றாய் தழுவியதாகவோ அவளுடன் உறங்கிய தாகவோ சங்க இலக்கியங்களில் அறியமுடியவில்லை. ஆனால் செவிலி தலைவியின் பக்கத்தில் உறங்குகிறாள். அவளைத் தழுவுகிறாள்.

களவில் ஈடுபட்ட தலைவியொருத்தியைச் செவிலிச்சென்று அணைத்தாள். அதனைத் தலைவி விரும்பாது வியர்த்தனென் என்றனள். தலைவியின் உடன்போக்கிற்குப் பின்னரே இதன் உண்மையை செவிலி உணர்ந்தாள். மற்றொருத்தியோ உடன்போக்கை மனத்திற் கொண்டு அன்னையை அடிக்கடித் தழுவினள். அன்பு மகளின் அணைப்பில் மகிழ்ந்த அன்னை பின்னரே அதன் பொருளுணர்ந்து புலம்புகிறாள். இதனை,

**"குறுகவந்து குவவுநுதல் நீவி,**
**மெல்லெனத் தழீஇயினேனாக என்மகள்**
**நன்னர் ஆகத்து இடைமுறை வியர்ப்ப**
**பல்கால் முயங்கினள் மன்னே"**[21]

என்று அகநானூறும்,

**"பெயர்த்தனென் முயங்க 'யான் வியர்த்தனென் என்றனள்**
**இனி அறிந்தேன்"**[22]

என்று குறுந்தொகையும் குறிப்பிடுகின்றன.

செவிலித்தாயே தலைவிக்கு உணவூட்டினாள் என்பதனை,

**"...... தேம் பெய்து**
**மணிசெய் மண்டைத் தீம்பால் ஏந்தி**
**ஈனாத்தாயார் மடுப்பவும் உண்ணாள்"**[23]

என அகநானூறும்,

**"பிரசம் கலந்த வெண்சுவைத் தீம்பால்**
**விரிகதிர்ப் பொற்கலத்து ஒருகை ஏந்தி**
**... .... ... ... ... ... ... ...**
**அரிநரைக் கூந்தல் செம்மது செவிலியர்**
**பரீஇ மெலிந் தொழியப் பந்தர் ஓடி"**[24]

என்ற நற்றிணைச் செய்யுளும் காட்டுகின்றன.

மேலும் மழலைப் பருவத்தில் விளையாட்டு ஆர்வத்தில் உரிய நேரத்தில் உண்ண மறுப்பது இயல்பு. இதையறிந்த செவிலி அன்பு

கலந்த அச்சுறுத்தலோடு கையில் தலையில் பூவால் சுற்றப்பட்ட சிறுகோலுடன் தலைவியை அடிக்க விரட்டுவது போல் செவிலி ஓடுவாள். அத்தகைய செல்வசெழிப்பில் வாழ்ந்த தலைவி உடன்போக்கிற்குப்பிறகு வறுமையிலும் செம்மையான இல்லறத்தை நடத்தினாள் என்பதை செவிலி நேரில் சென்று பார்த்து அச்சிறப்பை நற்றாய்க்கு தெரிவித்ததும் நற்றிணைப் பாடலில் விளக்கப்படுகிறது.

### செவிலி தலைவி உறவுரிமை

தலைவியிடத்தே பொறுப்பும் உரிமையும் பெற்ற செவிலி அவளைத் தன் மகளாகவே அழைக்கிறாள்.

> **“என் மகள் பெருமடம் யான் பாராட்ட**
> **தாய் தன் செம்மல் கண்டுகடன் இறுப்ப**
> **என் மகள் ஒருத்தியும் பிறர்மகன் ஒருவனும்”**[25]

என்றெல்லாம் தலைவியை என்மகள் எனச் செவிலி அழைத்தது மட்டுமின்றி “ஈன்றேன்யானே” என இடைச்சுரத்துக் கண்டோரிடம் கூறுவதனாலும் தலைவி மாட்டு அவள் கொண்ட பேரன்பின் தன்மை புலப்படுகிறது. வளர்ப்புத் தாயாயினும் வற்றாத அன்பின் தாயாகச் செவிலி விளங்கினாள் என்பதை அறியமுடிகிறது.

### உடன்போக்கில் செவிலித்தாய்

தலைவியை ஈன்றெடுத்த நற்றாயைப் போன்றே செவிலியும் தலைவி உடன்போக்கிற் சென்றவிடத்துத் தலைவியின் இளமையையும் அவளது விளையாட்டு ஆயுதங்களையும் கண்டு மனைமருட்சி கொள்கிறாள்.

> **“திதலை அல்குல் குறுமகள் அவனொடு**
> **சென்று பிறள் ஆகிய அளவை என்றும்**
> **படர்மலி எவ்வமொடு மாதிரம் துழைஇ**
> **மனைமருண்டு இருந்த என்னினும்”**[26]

என்று செவிலியே தன் மனைமருட்சி பற்றிக் கூறுகிறாள்.

தலைவிசென்ற காட்டுவழியின் அருமையை எண்ணி மென்மைத்தன்மை வாய்ந்த தன்மகள் அக்கொடிய சுரத்தை எங்ஙனம் கடப்பாள் எனத்துயரம் கொள்கிறாள். இவ்வாறு தலைவியின் பிறப்பு முதல் பருவமெய்தி களவுக்காலத்தில் உடன்போக்கு சென்ற வரையிலும் அவள் மீது கொண்ட மாறா அன்பிலும், தலைவியை தன் மகளாக போற்றுமிடத்திலும், உடன்போக்கில் ஏற்பட்ட பிரிவால் தலைவியின் இளம் வயது விளையாட்டை எண்ணி வருந்திய செவிலி கொண்ட அன்பு பெற்றத்தாய்க்கு இணையான சிறப்பைப் பெறுவதை பல சங்கப்பாடல்கள் வழி அறியமுடிகிறது.

**தலைவி**

தலைமக்கள் தாமே எதிர்ப்பட்டுத் தங்கள் வாழ்வை அமைக்க விரும்பும் முயற்சிக்கு எதிராகச் சமூகம் நிற்கக்கூடாது. ஒத்த தலை மக்கள் உவந்து வாழ உரிமைகள் ஏற்கப்பட வேண்டும். இவ்வழிக் காதல், குடும்ப, சமூக, நாட்டு அன்பினை வளர்த்தெடுக்கும். அது தொலை நோக்குடன் மனிதகுல அமைதியை வழங்கும் என்பதை ஐந்திணைப் படைப்பாளர்கள் நம்பினர். இத்தகு உயரிய நோக்கம் அகத்திணைக்கு உண்டென்பதை,

> **“அகத்திணை என்பது அன்பு வரலாறு... அன்பை வளர்த்து உலகோடு ஒட்ட ஒழுகி ஒன்றாய்கி விடுதே நீக்கமற நிறைகின்ற பெருவாழ்வாகும். யாதும் ஊரே யாவரும் கேளிர் என வாழ்வது இந்த முறையில் தான்”**[27]

என்று தெ.பொ.மீனாட்சி சுந்தரம் குறிப்பிடுவதால் அறியலாம். ஐந்திணைக்கு அடிப்படையாய் நின்று தலைமைப் பாத்திரமாய்த் திகழ்பவள் தலைவி தலைவியின் காதல் தூயதாகத் துலங்கச் சங்கப் பாடல்கள் வழிமுறைகளைக் காட்டுகின்றன.

> **“பிறப்பே, குடிமை, ஆண்மை, ஆண்டொரு**
> **உருவு, நிறுத்த காமவாயில்,**
> **நிறையே, அருளே, உணர்வொடு, திருவென**
> **முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே”**[28]

என ஒத்த தலைவன், தலைவியின் இயல்புகளைக் தொல்காப்பியர் கூறுகிறார். இயற்கைப் புணர்ச்சியில் தலைவன் தலைவி இருவரும் தம்முள் அன்பு கொள்கின்றனர். தலைவன் தன் காதலைத் துணிவுடன் வெளிப்படுத்த தலைவி அவன் காதலை அறிந்தும் அறியாதாள் போன்று பெண்மைக்குரிய நாணத்தால் தன் காதலை மறைக்கிறாள். இக்காட்சியைத் தோழி,

**“உருவ வல்விற் பற்றியம்பு தெரிந்து**
**செருச்செய் யானை நெறிவினா அய்செல்**
**புலர்குர லேனற் புழையுடை யொருசிறை**
**மலர்தார் மார்பன், நின்றோ கண்டோற்.**
**பலர்தில், வாழி, தோழி! அவருள்**
**ஆரஇருட் கங்குல் அணையொடு பொருந்தி**
**ஓர்யான் ஆகுவது எவன்கொல்,**
**நீர்வார் கண்ணொடு நெகிழ்தோளேனே”**[29]

எனக் கூறுவது கவனிக்கத்தக்கது.

இதேபோன்று தன் ஆயத்தாரோடு சிற்றில் இழைத்து விளையாடிய ஆயமகள் ஒருத்தியிடமும் சென்றுரையாடிய தலைவனிடத்தே தன் மனம் சென்றதைத் தோழிக்கு உரைத்த செய்தியும் சங்கப்பாடலில் அறியமுடிகிறது.

இயற்கைப் புணர்ச்சியால் தோன்றிய காதலை எப்போதும் தன்னுடன் இருக்கும் ஆருயிர்த்தோழியிடம் அறியா வண்ணம் தலைவி மறைக்கின்றாள். இது பெண்மைக்குரிய நாணினால் நிகழ்ந்த செய்கையாகும். இதனை எவ்வாறோ அறிந்த தோழி தான் ஒருவனிடத்துக் காதலுற்றது போல் பொய்யுரையாடித் தலைவியின் காதலை வெளிக் கொணர்ந்தாள். தன் தோழியிடமே தன் உள்ளக் காதலை வெளியிடநாணும் தலைவி, தன் இதயம் கவர்ந்த தலைவனிடம் தன் உள்ளத்தின் விருப்பத்தை குறிப்பினாலன்றிச் சொல்லினால்

வெளிப்படுத்தல் இயலாததாகும். அவ்வாறு உணர்த்துவது தான் மரபென்பதை,

**"காமத்தி ணையிற் கன்நின்று உருஉம்**
**நாணும் மடனும் பெண்மைய ஆகலின்**
**குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை**
**நெறிப்படவாரா அவள் வயின் ஆன"**[30]

என்ற தொல்காப்பிய நூற்பாவால் அறியலாம். பெண்ணுக்கே உரிய பண்புகளில் ஒன்றான நாணம் தன் தோழியிடத்துக் கூட வெளிப்படையை உணர்த்துவதற்கு தடையாய் நிற்பது அக்கால பெண்களின் மரபு நிலையாகும்.

நட்பு நேயம்

இயற்கைப் புணர்ச்சியால் தலைவனோடு ஏற்பட்ட காதல் எத்தகைய வலிமையானது, உயர்ந்தது என்பதை தன்னுடனே உடனுறைந்து பழகும் தோழியிடம் தலைவி குறிப்பினால் உணர்த்துவதைப் போல தன் காதலை வெளிப்படுத்துவாள். தனக்கும் தலைவனுக்கும் உள்ள நேயத்திற்கு எல்லை கூறவியலாது என்பதை,

**"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆர்அள வின்றே சாரல்**
**கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே!"**[31]

என்று குறுந்தொகைத் தலைவி மொழிவதைக் காணமுடிகிறது.

உலகத்தின் சிறந்த பொருட்களை எல்லாம் காட்டி, தலைவன் மீது தனக்கேற்பட்ட நட்பின் சிறப்பைக் காட்ட இதனைவிட வேறு எந்த வழியும் தலைவிக்குத் தேவையில்லை உலகத்துப் பொருட்கள் அனைத்திலும் சிறந்து நின்று இவ்வுலகை இயக்க வல்லது காதல் இதனை,

காதலால் உள்ளம் பெருமையுறுகிறது, உயர்வடைகின்றது விரிவெய்துகின்றது. உள்ளத்தின் இப்பயன் பிறவியின் பயன் இதற்குக்

கருவி ஆண், பெண், நட்பு இந்நட்பு நிலம், நீர், வான் முதலிய பருப்பொருள்களின் ஆற்றலினுஞ் சிறந்தது அவற்றை இயக்கவும் வல்லது என்று உறுதிப்படுத்துவார்.

இத்தகைய உணர்வொன்றிய தலைவன் தலைவியரின் வாழ்வினும் சிறந்தது ஏதொன்றுமில்லை. தலைவியின் மனத்திலே தலைவன் மீது எழுந்த அன்பின் வெளிப்பாடாகவும் நம்பிக்கையின் வரமாகவும் இப்பாடல் அமைகிறது. ஒரு பாடலில் தலைமகளின் உள்ளத்து அன்பை வெளிபடுத்துவதற்காகத் தோழி வேண்டுமென்றே ஒருநாள் அவனிடம் தலைவனைப் பழித்துரைத்தாள். இந்தப் பழியுரையைக் கேட்க மனம் இல்லாமல் தலைவி உடனே, அவனுடைய உறவு எத்தகையது என்பதைப் புகழ்ந்துரைத்துப் போற்றினாள்.

கற்பொழுக்கத்திற்கு வித்தாகிய உண்மைக்காதல் அவள் உள்ளத்தே நிறைந்திருந்தமையால் அவ்வாறு கூறினாள். அவள் உள்ளத்தின் நிறைவு கூறிய சொற்களில் புலனாகுமாறு அமைந்தது என்றும், கற்புவழிப்பட்ட ஒரு பெண்ணின் உரமான நம்பிக்கையைப் புலவர் தேவகுலத்தார் இவ்வாறு எடுத்துரைத்துள்ளார். இவ்வாறு தலைவன் தலைவியிடத்து ஏற்படும் நட்பு உன்னத காதலாக மலர்வதை மேற்சொன்ன கருத்துக்கள் நிறுவுகின்றன.

## தோழி

தலைமக்களிடம் அன்பொழுக்கத்தை வளர்ப்பவள் தோழி தோழியின்றேல் ஒத்தக்காதல் வளர்ச்சியடைய வாய்ப்பில்லை. இவ்வரிய பாத்திரமாகத் தலைமக்களிடத்து அன்புப் பாலமாக விளங்குபவள் தோழி. இவள் செவிலித் தாயின்மகள் என்பதை,

**"தோழிதானே செவிலி மகளே"**[32]

என்ற நூற்பா மூலம் அறியலாம். தலைவிக்குத் தோழியர் பலர் இருப்பினும் தலைவியின் நன்மையைக் கருத்திற்கொண்டு அவளை விட்டு நீங்காது உறைபவளே தோழியாவாள் இதனை,

**பயின்றா ரெல்லாருந் தோழியாராகார்**
**அருமறை இளக்கப் படுதலான் உடன்**
**முலையுண்டு வளர்ந்த செவிலி மகளே**
**தோழி எனப்படுவாள் என்றவாறு"**[33]

என்று இளம்பூரணர் உரையில் குறிக்கிறார்.

பெண்மைக்குரிய இயல்பான நாணத்தால் இயற்கைப் புணர்ச்சி ஏற்பட்ட பின்னும் தன் காதலைத் தோழியிடமே மறைக்கும் தலைவியின் உள்ளக்கிடக்கையைத் தோழிதானே முயன்று அறிகிறாள். ஆயினும் தான் அறிந்து கொண்டமையை வெளிப்படையாய்க் கேட்டறிந்தால் தலைவி அஞ்சுவாளோ எனக்கருதித் தலைவி கொண்ட காதலை அறியாதாள் போன்று தான் ஒரு தலைவனிடத்தே காதல் கொண்டு மயங்கியதாகக் கூறுவதன் மூலம் தலைவியை ஒப்புச் செய்கிறாள்.

**"சுயமலர் உண்கணாய்! காணாய்"**[34]

என்ற கலித்தொகைப் பாடலில் தன்மீது காதல் கொண்ட தலைவன் அதைக் கூறாது மறைக்க தன் காதலை வெளிப்படுத்த எண்ணி ஒரு நாள் அத்தலைவனை அழைத்து "ஊசல் ஊர்ந்து ஆட" விரும்புவாள் போன்று ஐய! சிறிது என்னை ஊக்கி" என அழைத்தாளாம் அதற்கிசைந்து அவன் ஊசல் ஆட்டும் போது மயங்கியவள் போல் அவன் மார்பில் சாய்ந்து சற்று நேரம் அப்படியே கிடந்தனளாம். பின்னர் தன் செயற்கையாய் நாணிஅவள் எழ தலைவன் பண்பாடு மிக்கவன். என்பதால் தன்னை எழுந்து செல் என விடுத்தனன் எனக் கூறுகிறாள்.

தோழியின் இக்கூற்றைக் கேட்ட தலைவி தன் செயலுக்காக நாணி தோழியிடத்தே தன் காதலை மறைக்காது உரைத்திருப்பாள் என்பது திண்ணம் இது தோழியின் திறனுக்கு நற்சான்றாகும்.

தலைவியின் காதலை அறிந்தபிறகு தலைவனின் நிலை என்ன என்பதையும் அவன் பண்புகள் எத்தகையன என்பதையும் அவன் தன் தலைவிக்குத் தகுந்தவனா என்பதையும் அனைத்தும் அறிய

முனைகிறாள் தோழி. தலைவியிடத்து அவள் கொண்ட பேரன்பு, தலைவியின் நல்வாழ்வில் அவள் கொண்ட அக்கறை இதனை ஆய்ந்தறிய அவளைத் தூண்டுகிறது.

தலைவனைக் கண்டவுடன் காதல் கொண்டு விடாது. பல நாட்களும் தலைவனது குணங்களை ஆய்ந்த பிறகே தலைவியை அவனிடம் ஒப்படைக்கிறாள். தலைவனது குணச்சிறப்புகளை நன்கு ஆராய முனைந்த தோழி அவனைப் பல நாட்கள் அலைக்கழிக்கிறாள் இதனை,

**“ஒரு நாள் வரலான் இருநாள் வரலான்**
**பன்னாள் வந்து பணிமொழி பயிற்றி – என்**
**நன்னர் நெஞ்சம் நெகிழ்த்த பின்றை**
**வரைமுதிர் தேனின் போகியோனே”**[35]

என்ற குறுந்தொகைப் பாடலால் தெளியலாம். இங்ஙனம் பல நாட்கள் அவனை வரச்செய்து தன் தலைவியிடத்தே அவன் கொண்ட உண்மையான நேயத்தை அறிந்தபின்னர் அவனை ஏற்குமாறு அவளிடம் கூற முனைகிறாள். அப்போது தான் பல நாட்களாகக் கண்டு தெளிந்த தலைவனின் இயல்புகளை,

**“ஒன்று இரப்பான்போல் எளிவந்தும் சொல்லும் உலகம்**
**புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்**
**வல்லாரை வழிபட்டொன்றறிந் தான்போல்**
**நல்லார்கண் தோன்றும் அடக்கமும் உடையன்**
**இல்லோர் புன்கண் ஈகையின் தணிக்க**
**வல்லான் போல்வதோர் வன்மையு முடையன்”**[36]

எனத் தலைவிக்கு உரைக்கிறாள்.

இங்ஙனம் தலைவன் தலைவி இருவரையும் ஆய்ந்து தெளிந்து கூட்டு வித்த பின்னரும் தலைவனுக்குக் குறியிடம் கூறி அவர்கள் நட்பு வளர உதவுகிறாள். பகற்குறியில் தலைவன் வருவதையறிந்து தலைவிக்கு ஏற்படும் இன்னல்களை அழகாக எடுத்துரைத்துத் தலைவியை மணம்புரிய வேண்டுமெனத் தலைவனை வேண்டுகிறாள்.

### நட்பிற்கு இலக்கணம்

தலைவன், தலைவியின் காதல் கேண்மையைப் பலர் அறிய தூற்றப்படாமல் வளர்த்தெடுக்கத் தோழி தலைவனிடம் குறியிடங்களை மறுத்து விரைவில் வரைவு செய்ய மொழிகிறாள் அப்போது தனக்கும் தலைவிக்கும் உள்ள நட்பு இரு உடற்கு ஓர் உயிராக விளங்கும் தன்மையென்பதை,

"யாமே பிரிவின் றியைந்தது வராநட்பின்
இருதலைப் புள்ளின் ஓருயி ரம்மே"[37]

என்று தலைவியும் தானும் பிரிக்கவியலா நேயத்தினரென்று தலைவனிடம் கூறுவதால் தலைவிக்கு ஏற்படும் நன்மை, தீமையிரண்டிற்கும் தானே பொறுப்பு என்ற முழு உரிமையும் தலைவியின் களவொழுக்கம் விரைவில் கற்பொழுக்கமாக விளங்கத் தோழி காட்டும் உயர்ந்த உணர்வு சிறந்த மனித நேயத்திற்குரியதெனக் காட்டலாம். இதனாலேயே,

தோழியைத் தலைவியின் 'அகமனம்' எனவும் கூறலாம். உணர்ச்சிவயப்பட்ட தலைவி, தன் புறமனத்தைத் தன்னுடைய சொற்களாலேயே வெளிப்படுத்தி விடுகிறாள் ஆனால் அவளுடைய அகமனத்தைத் தோழியின் வழியே வெளிப்படுத்துகிறாள் எனக் கூறலாம்.

### இயற்கைப் புணர்ச்சியில் எழும் நேயம்

களவொழுக்கத்தின் களமாக அமைவது இயற்கைப் புணர்ச்சி இதை புணர்தல் உரிப்பொருள் என்பர். இந்நிலையில் தலைவன் தலைவியர் தொடர்பு அன்பின் ஆர்வமுடன் ஆராயப்பட வேண்டும் என்று உரைப்பவள் தோழி. தலைவன் வரைதலுக்குக் காலம் கடத்தாமல் வரைவுகடாவுதலைத் எடுத்து இயம்ப தோழி பல விளக்கங்களைத் தலைவனிடம் அளிப்பாள். இம்முயற்சியில் அஃறிணை விலங்குகளால் ஏற்படும் இடையூறுகளை எடுத்து மொழிவாள். தலைவியைக் காணத் தலைவன் இரவுக்குறியில் காட்டுவழியில் வந்தால் புலியின் சீற்றத்திற்கு ஆளாவான். இதனால் எங்களுக்கு அச்சமும் கவலையும் நேருகின்றது என,

"அடுபுலி வழங்கும் ஆர்இருள் நடுநாள்
தனியை வருதல் அதனினும் அஞ்சுதும்
எனஆகு வள்கொல் தானே"[38]

என்று குறிப்பிடும்போது தோழியின் உயர்ந்த நேயத்தைக் காணமுடிகிறது.

**அறத்தொடு நிற்றல்**

தலைவன் தலைவியிடையே காதலை வளர்த்து, அவர்கள் உள்ளத்திலே மணமேற்கொள்ள வேண்டுமென்ற ஆவலையும் தூண்டி விடுகிறாள் நேயத்தில் சிறந்தவளான தோழி. இந்நிலையில் அவர்களது உறவைப் பெற்றோரும் தெளிய வெளிப்படுத்த வேண்டிய முக்கிய கடமை தோழிக்கு உண்டு.

அதற்குத்தக்க வாய்ப்பாக அமையும் வெறியாட்டின் போது நன்முறையில் தோழி பயன்படுத்துகிறாள். இதனை,

"அருவிஇன் இயத்து ஆடும் நாடன்
மார்புதர வந்த படர்மலி அருநோய்
நின்அணங்கு அண்மை அறிந்தும், அண்ணாந்து
கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் கொண்ட, வெறிமனை வந்தோய்
கடவுள் ஆயினும் ஆக
மடவை மன்ற வாழிய முருகே"[39]

என்பது கடவுளுக்கு உரைப்பவள் போன்று தலைவியின் காதலை அறத்தொடு நின்று வெறியாட்டினை விளக்கியது தோழியின் கூற்றாகும்.

கட்டுவிச்சியை அழைத்து அன்னை வெறியெடுத்தபோது

"அகவன் மகளே பாடுக பாட்டே
இன்னும் பாடுக பாட்டே அவர்
நன்னெடுங் குன்றம் பாடிய பாட்டே"[40]

எனும் பாடல் மூலம் தலைவரின் குன்றத்தைப் பற்றி இன்னும் நீ பாடுக என்றதனால் செவிமடுக்கும் அனைவரையும் தோழி சிந்திக்க வைக்கின்றாள்.

குறிநிகழுமிடத்தே இருக்கும் அன்னை, தலைவியின் நோய்க்குக் காரணமான தலைமகனின் நிலையை அறிந்து தலைவியையும் தலைவனையும் களவிலிருந்து கற்புக்கு மாற்ற வேண்டுமென்ற நன்நயத்தில் தோழி இதனை உரைக்கிறாள்.

தலைவியின் மனநிலையை அறிய தலைவனுடைய அந்த மலையைப் பாடினால் அந்த நினைவினாலது இவளுடைய காதல்நோய் தீரும் என்ற குறிப்பு வீட்டார்க்கு விளங்கும்படிச் சொன்னாள் அதைக்கேட்டதும் தலைவியின் காதலைப் பெற்றோர் உணர்வார்கள் என நம்பி இவ்வாறு முயன்றாள் எனக் கூறுவதால் தோழியின் மதி நுட்பம் அறியலாம்.

தோழி உளவியலில் வல்லவள் என்பதற்கு சான்றாக எந்த தாயும் புகுந்த வீட்டில் தன்மகள் செல்வச் செழிப்புடன் வாழவேண்டும் என்பதையே விரும்புவாள். ஆகையால் தலைவனின் வேறு எந்தச் சிறப்பையும் கூறாது பொருள் சிறப்பை எடுத்துக்கூறி செவிலியைத் தன் பக்கம் இழுக்குமாறு பயன்படுத்தும் திறம் மிக்கவளாக தேவையான நேரத்தில் தேவையான சொற்களை தோழி விளக்குவாள்.

தலைவியின் மாறுபாட்டால் மனம் வருந்தும் அன்னைக்கும் தலைவியின் தமருக்கும் கூடத் தலைவியின் காதல் புலப்படுமாறு வெறியாட்டிடத்தே தோழி அறத்தொடு நிற்கும் துணிவினை ஐங்குறுநூற்றின் வெறிப்பத்து பாடல்களால் அறியமுடிகிறது.

**“பெய்ம் மணல் முற்றம் கவின் பெற இயற்றி**
**மலைவான் கொண்ட சினைஇய வேலன்**
**கழங்கினான் அறிகுவது என்றால்**

**நன்றால் அம்ம, நின்ற இவள் நலனே''[41]**

எனச் செவிலிக்கும்,

**"அன்னை தந்தது ஆகுவது அறிவென்**

**பொன்ன நகர் வரைப்பில் கன்னம் தூக்கி**

**'முருகு' என பொழியும் ஆயின்**

**அருவரை நாடன் பொய்கொலோ அதுவே''[42]**

எனத் தமர்கேட்கவும் அறத்தொடு நிற்கும் ஆற்றல் தோழிக்கே உரித்தானது.

தலைவன், தலைவியின் நேயத்தை வளர்ப்பதோ, அவர்களது பெருங்காதலை அன்னை, தந்தையர்க்கு அறிய உரைப்பதோ பெருங்காரியமன்று. அக்காதல் அவர்களுக்குச் சினமும், காதலர்க்கு துன்பம் தராத வகையில் மிகப்பக்குவமாய் எடுத்துரைத்து அக்காதலை மணவாழ்வாகவும் மலரச் செய்வது அரிய செயலாகும். இச்செயலைச் செய்து முடிக்க பண்பும் பக்குவமும், அறிவும் ஆற்றலும் வேண்டும் இவை அனைத்திற்கும் முதன்மையாய் மனத்திலே பேரன்பு வேண்டும். இவ்வன்பினாலேயே இக்காரியத்தைச் சிறப்புறச் செய்து முடித்து மகிழ இயலும்.

தலைவியிடத்துப் பேரன்பு கொண்டிருந்த காரணத்தாலேயே அவளைப் போன்றே இளமையும் அழகும் உடைய தோழி தன்னைப் பற்றிய என்னமின்றித் தலைவியின் மகிழ்ச்சிக்கு வழிவகுக்கும் செயல்களை அடுக்கடுக்காய்த் தொடர்ந்து செய்கிறாள். தன் செயல்களினால் வெற்றி கண்டு தலைவன் தலைவியை வரைவுமலிந்து பெண்கேட்டு வரும்போது பேரானந்தம் கொள்கிறாள். இத்தகைய அருங்குணங்களை கொண்டவளாக சங்கப்பாடல்கள் தோழியை படைத்துள்ளன.

**"அரும்பெறல் அமிழ்தம் ஆர்பதம் அகப்**

**பெரும்பெயர் உலகம் பெற்றியரோ அன்னை**

**………… ………… …………….**

ஓங்குமலை நாடனை வரும்என் றோளே”[43]

என்று குறுந்தொகைப்பாடல் மூலம் உணரப்படுகிறது.

**ஆற்றுப்படையும் மனிதநேயமும்**

சங்கத் தமிழர்கள் யாம் பெற்ற இன்பம் பெறுகஇவ்வையகம் என்ற வரிகளுக்கேற்ப வாழ்ந்து காட்டியவர்கள். தான் அனுபவித்த ஓர் இன்பத்தை மற்றவரும் அனுபவிக்க வேண்டும் என்ற உயர்ந்த எண்ணத்தைக் கொண்டவர்கள். வறுமையிலும் தங்கள் வாழ்க்கையை செம்மையாக நடத்தி வந்தவர்கள். அவர்களுடைய வாழ்க்கை முறையிலிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டியவை நிறைய இருக்கிறது. அதனால் அதனை தமிழர்களுக்குக் கிடைத்த கொடை என்றே கூறலாம்.

ஆற்றுப்படை என்பது தமிழில் உள்ள தனி இலக்கிய வகையாகும். ஆறு என்றால் வழி, படை என்றால் படுத்தல், அதாவது வழிப்படுத்துதல் என்பதாகும். இதில் கூறப்படும் கூத்தர் என்பவர் தனிக் கூத்திலும், கதை தழுவிவரும் கூத்திலும் வல்லவா். பாணர் என்பவர் இசைத்தமிழில் வல்லவா். இவர்கள் சூழல், யாழ் முதலிய இசைக்கருவிகளோடு பாடுவர் பொருநர் என்பவர் ஏர்க்களம் அல்லது போர்க்களம் சென்று பாடுபவா்கள். அவர்கள் நடிப்பிலும் வல்லவர்கள். விறலி என்பவள் உள்ளக்குறிப்பைப் புறத்தே வெளிப்படும்படி விறல்பட திறமையாக ஆடுபவள். இந்நால்வரும் தமக்குத் துணையாயினரோடு சிற்றரசரிடமும் பேரரசரிடமும் சென்று தம் கலைத்திறனைக் காட்டிப் பரிசு பெற்று மீள்வர். அங்ஙனம் மீண்டு வருபவர் வள்ளல்களை நாடிச் செல்லும் தம்மைப் போன்ற கலைவாணரை வழியில் காணின் அவர்மீது இரக்கம் கொள்வர் அவர்களுக்கு உதவி செய்ய விரும்புவர் அதனால் தம்மை ஆதரித்த வள்ளலிடம் சென்று பரிசில் பெற்று மகிழுமாறு அவர்களை ஆற்றப்படுத்துவர். இங்ஙனம் ஆற்றப்படுத்துதல் என்பதே ஆற்றுப்படை எனப்பட்டது.

அருளுணர்ச்சியால் தோன்றிய இவ்வாற்றுப்படை முறை தொல் காப்பியம் புறத்திணையியலில் கீழ்வருமாறு குறிப்பிடப்பட்டுள்ளது.

**"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்**
**ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்**
**பெற்ற பெருவளம் பெறா அர்க்கு அறிவுற்இச்**
**சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமும்"**[44]

எனத் தொல்காப்பியத்திலே காணப்படும் இவ்வாற்றுப்படை முறை தொல்காப்பியருக்கு முன்னரே தமிழ்நாட்டில் பன்னெடுங்காலம் வழங்கியிருத்தல் வேண்டும் என்றும், இத்துறையில் பல பாடல்கள் இருந்திருத்தல் வேண்டும் என்றும் கருத இவ்வடிகள் இடம் தருகின்றன.

சங்க இலக்கியத்தில் பல்வேறு இடங்களில் ஆற்றுப்படுத்துதல் என்ற சொல் இடம் பெற்றிருக்கின்றது. அதாவது தோழி தலைவியையும் தலைவனையும் ஆற்றுப்படுத்தி ஆறுதல்களையும் கூறுகின்றாள். இவ்வாறு ஆற்றுப்படுத்துதல் இன்றளவும் நடைமுறையில் உள்ளது. இன்று நமக்கு கிடைத்துள்ள சங்க நூல்களுள் புறநானூற்றிலும் பதிற்றுப்பத்திலும், பத்துப்பாட்டிலுமே ஆற்றுப்படைப் பாடல்கள் சில காணப்படுகின்றன. புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகியவற்றில் ஆற்றுப்படைப் பாடல்கள் 5 அடிமுதல் 31 அடிகள் வரையறை கொண்ட சிறு பாடல்களே ஆகும். பத்துப்பாட்டில் காணப்படும் ஆற்றுப்படைப் பாடல்களோ பலநூறு வரிகளைக் கொண்டு விளங்குகின்றது.

> **"ஆற்றுப்படை என்ற இத்துறை அறப்பண்பு மிக்க வறியோர்க்குத் தம்பால் உள்ளனவெல்லாம் உவந்தீயும் வள்ளல்களைப் புகழ்ந்து பாடுதற்கென நல்லிசைப் புலவர்கள் வகுத்துக் கொண்டதொரு புலனெறி வழக்கமாகும். உயரிய மக்கட் பிறப்பெய்தியோர் அப்பிறப்பின் பெருமைக்கேற்ற செயலாக மேற்கொள்ளப் பலவாகிய அறங்களில் ஈகை தலைசிறந்த தொன்று."**[45]

என்று பொ.வே.சோமசுந்தரனார் கூறுகின்றார்.

**பொருளின் முதன்மை**

மனித நிலத்தில் மற்றவர்களைப் போலவே நமது தமிழர்களும் பொருட் செல்வத்தின் பெருமையை நன்கு அறிந்திருந்தார்கள் பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லவே இல்லை என்று அடித்துச் சொன்னவர்கள் தமிழர்கள் பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருளல்லது இல்லை பொருள் என்று விளக்கமும் சொல்லி வைத்திருக்கிறார்கள். இதனாலேயே ஓர் இளம் பெண்ணை விரும்புகிற ஓர் இளைஞன் தன்னுடைய மணவாழ்வைச் சீராகத் தொடங்குவதற்குரிய பொருளைத் தேடிக் கொள்ள வேண்டும் என்பதை வாழ்விலக்கணத்தின் ஒரு கூறாகவே தமிழர்கள் அமைத்திருக்கிறார்கள். தமிழ் இலக்கியத்தில் உள்ள 'வரைவிடை வைத்துப் பொருள்வயின் பிரிதல்' என்னும் குறிஞ்சித் திணைத் துறை இதை அழகாக வலியுறுத்துகிறது.

திருமணத்துக்கு முன்பு அவர்கள் இருவரின் இன்ப வாழ்வுக்கு அடித்தளமாக பொருளைத் தேடிக் கொள்ள வேண்டும் என்று வற்புறுத்திய இலக்கணம் திருமணத்திற்குப் பிறகும் தலைவன் பொருள் தேடிச் செல்ல வேண்டியதன் இன்றியமையாமையை வற்புறுத்துகிறது. திருமணத்துக் முன்பு பொருள் வேண்டும் என்று கூறிய இலக்கணம் மணவாழ்க்கையில் பொருளைத் தேடிக் கொள்ள வேண்டியதற்கு உரிய காரணத்தையும் விரிவாகவே விளக்குகிறது. இந்த இடத்தில் தான் பொருளைத் தேடிக் கொள்ள வேண்டும் என்னும் வாழ்க்கை நெறிக்கு மனித நேயத்தை அடிப்படை ஆக்குகிறது.

> **"தனிநயத்து உறைவோர் தாங்கித் தாம்நயந்து**
> **இன்னமர் கேளிரொடு ஏமுறக் கெழீஇ**
> **நகுதல் ஆற்றார் நல்கூர்ந்தோர்"**[46]

என்றும் பொருள் தேடுதலின் இன்றியமையாமையை வரையறுத்து அகநானூறு கூறுகிறது.

**விறலியை ஆற்றுப்படுத்திய புலவர்களின் மனித நேயம்**

நெடும்பல்லியத்தனார் என்ற புலவர், பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியிடம் விறலி ஒருத்தியை ஆற்றுப்படுத்தியுள்ளார்.

**“நளி இரு முந்நீர் நாவாய் ஒட்டி**
**வளிதொழில் ஆண்ட உரவோன் மருக**
**………….. ……. ………….**
**மிகப் புகழ் உலகம் எய்தி**
**புறப் புண் நாணி, வடக்கிருந்தோனே”**[47]

இதனை என்ற அடிகளால் அறியலாம்.

ஔவையார் என்ற பெண்பாற் புலவர், அதியமான் நெடுமான் அஞ்சியிடம் விறலியை ஆற்றுப்படுத்தியுள்ளர்.

**“ஒரு தலைப்பதலை தூங்க, ஒரு தலைத்**
**தூம்பு அகச் சிறு முழாத் தூங்கத் தூக்கி**
**………….. ……. ………….**
**அலத்தற் காலை ஆயினும்**
**புரத்தல் வல்லன் வாழ்க அவன் தாளே!”**[48]

என்ற அடிகளால் விறலியை ஆற்றுப்படுத்தியமை அறியலாம்.

கபிலா் எனும் புலவா் வேள்பாரியிடம் விறலி ஒருத்தியை ஆற்றுப் படுத்தியுள்ளாா்.

**“சேயிழை பெறுகுவை-வாள் நுதல் விறலி**
**தடவு வாய்க் கலித்த மா இதழ்க் குவளை**
**….. ….. ….. ….. ….**
**நீரினும் இனிய சாயற்**
**பாரி வேள்பால் பாடினை செலினே”**[49]

என்ற அடிகளால் அறியலாம்.

முடமோசியார் என்ற புலவா், ஆய்வேளிடம் விறலி ஒருத்தியை ஆற்றுப்படுத்தியுள்ளாா்.

**"மெல் இயல் விறலி! நீ நல் இசை செவியின்**
**கேட்பின் அல்லது காண்பு அறியலையே**
**…. …. …. ….. ….**
**மாரி அன்ன வண்மைத்**
**தேர் வேள், ஆயைக் காணிய சென்மே!"**[50]

எனும் பாடல் வரிகளால் அறியலாம்.

### சமுதாயத்துடன் எழும் மனிதநேயம்

பிறப்பால் ஒவ்வொரு மனிதனும் தனிமனிதனாகத் திகழ்கிறான் ஆனால் பிறப்பிற்குப் பின்னர் அவனது வளர்ச்சியின் ஒவ்வொரு நிலையிலும் அவன் புதுப்புது உறவுகளைப் பெற்று, அதன் கட்டுப்பாட்டிற்குள் வந்து தான் தனிமனிதன் என்பதை மறந்து மற்றவர்களுக்காக வாழ்வதையே பெருமையாகக்கருதுகிறான். இந்நிலையிலேயே சமூக அமைப்பும் சமுதாய உறவுகளும் தோன்றுகின்றன.

**"பிறப்பால் கட்டுப்பாடற்று விளங்கிய மனிதன் சமுதாயத்தில் விளங்கும்போது ஒவ்வொரு திருப்புமுனைகளிலும் கட்டுப்பாடுகளை உணர்கிறான்"**[51]

அங்ஙனம் அவன் உணர்ந்த கட்டுப்பாடுகளில் ஒன்று குடும்ப வாழ்வு. இது தனிமனிதனுக்காக மட்டும் நடத்தப்படுவதன்று. சமுதாய நன்மை கருதியும் நடத்தப்படுவதாகும்.

சங்க காலத்தில் குடும்ப வாழ்வு சமுதாய நன்மைக்காக மனிதன் நடத்த வேண்டிய தொண்டு வாழ்வாகக் கருதப்பட்டது. அன்பும் உழைப்பும் வறுமையிற் செம்மையும் அன்றைய குடும்பத்தின் அடித்தளமாக விளங்கின என்பர் இதனால் தனிமனிதன் தற்சார்பினின்று சமூக நலனைக் கலந்து வாழ்வது மனித நேயப்பட்டதாக உணர்த்தப்பட்டதைப் காணமுடிகிறது. பல்வேறு தரப்பட்ட மக்கள் வாழும் சமுதாயம் என்பதற்கு குடும்பங்கள் பலவற்றின் கூட்டுத்தொகையாகவே காட்சியளிக்கின்றது.

சமுதாயத்தின் முதன்மையான உறுப்பாகக் குடும்பம் கருதப்பட்டது என்பதாலும் உற்பத்தி உறவுமுறைவழியாக கூட்டுஉழைப்பு இன்றியமையாததாகி ஒருமித்த வாழ்வைத் தமிழ்ச் சமூகம் எய்தியதைச் சங்க நூல்களின் வழிக் காணமுடிகிறது.

சங்க காலத்தில் சமுதாயமும் தனிமனித வாழ்க்கையும் வேறுவேறாகக் கருதப்படவில்லை இரண்டும் ஒன்றையொன்று சார்ந்ததாகவே இருந்தன. சமுதாயத்திற்குப் பயன்படுதலே இல்வாழ்வின் நோக்கமாக இருந்தது என்பதனை, காதலா் இருவா் மக்களைப்பெற்று, மனையறம் காத்துச் சுற்றம் தழுவிச் சோர்விலாது சமுதாயத்திற்குப் பயன்பட வாழ்தலே இல்வாழ்க்கையின் இனிய நோக்கங்களாக இருந்தன என ஆய்வாளர்கள் குறிப்பிட்டவற்றால் அறியலாம்.

அ∴து மட்டுமன்று; வீட்டின் நல்வாழ்வே நாட்டின் நல்வாழ்விற்குக் காரணமாகும். சமுதாயப் பண்பாட்டிற்கு இல்லறப் பண்பாடே வழிவகுக்கும் என்பதனை அ.ச.ஞானசம்பந்தன்,

> **“ சமுதாயத்தார் சிறந்த நாகரிகமும் பண்பாடும் பெற்றுச் சிறந்து வாழ்ந்தனா் எனில், அதன் அடிப்படை அவர்களுடைய குடும்ப வாழ்விலே தான் காணப்பெறும். வீட்டில் நல்வாழ்வைப் பெறாத சமுதாயம், வெளியில் சிறந்த வாழ்வைப் பெறுதல் என்பது வேரில்லாத மரம் தழைத்தது என்பது போலத்தான்”**[52]

என்று குறிப்பிடுகிறார்.

எனவே, சங்ககாலச் சமுதாயம் என்பது தனிமனித உணர்வுகளுக்கு மதிப்பளித்ததோடு, சில கட்டுப்பாடுகளையும் உடையதாய்த் திகழ்ந்தமையைத் தெளிவாகக் காணமுடிகிறது. தனிமனிதனும் சமுதாயக் கட்டுப்பாடுகளுக்கு அடங்கிச் சமுதாயத்திற்குப்

பயன்படும் வகையில் தன் வாழ்வை அமைத்துக் கொண்டு சிறப்புற வாழ்ந்தான்.

**பிற உயிரினங்களும் மனிதநேயமும்**

தனிமனிதனாய்த் தோன்றியவனிடத்தே குடும்பம் என்ற அன்பு வளர்ந்தது. அவ்வன்பு அவனது சமுதாயம் முழுமைக்கும் விரிந்து பரந்து மனிதநேயமாகியது. "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற இம்மனிதநேயத்தை உயர்திணை மாந்தரிடமின்றி அஃறிணை உயிர்களிடத்தும் சங்க மகளிர் கொண்டிருந்தனர். இதற்குக் காரணம் அவர்கள் மேற்கொண்டிருந்த இயற்கையோடியைந்த வாழ்வேயாகும். சங்ககால மக்கள் இயற்கைப் பொருள்களிடத்தும் அன்பு செலுத்தினர். அவற்றின் அன்பான வாழ்வையும் கூர்ந்து நோக்கினர். இந்த அஃறிணைப் பொருள்களின் வாழ்வை மனித வாழ்வோடு ஒப்பிட்டுப் பல இடங்களில் உள்ளுறையாகவும் இறைச்சியாகவும் குறிப்புப் பொருளாகவும் அமைத்துப் பாடினர் உள்ளுறை இறைச்சி, இவற்றிற்கு இயற்கையே களமாக அமைந்தது.

> **"இயற்கையோடு இயைந்து வாழ்வு நிகழ்த்தியதால்,**
> **சங்கப்புலவர் தம்**
> **உணர்வுகளை இயற்கையிலும் ஏற்றிக் காட்டுகின்றனர்."**[53]

மானிட உணர்வுகளோடு இயற்கையின் எழிலை இறைபுறச் செய்தது பண்டைத் தமிழிலக்கிய மரபு எனச் சங்ககாலம் இயற்கையோடியைந்த வாழ்வினை உடையதாக அமைந்திருந்ததை குறிப்பிடுவர்.

சங்கப்பாடல்கள் பல இயற்கைப் கூறுகளை உவமைகளாகக் காட்டுகின்றன. புறப்பொருள் பாடல்களாயினும் அகத்திணைப் பாடல்களாயினும் புலவர்கள் இயற்கையில் தாம் கண்ட பல செய்திகளையும் பாடல்களிலேற்றித் தந்திருக்கின்றனர். அங்ஙனம் தரும் போது அவர்கள் தாம் காட்டும் இயற்கைக் காட்சிகளை மனித வாழ்வோடு இணைத்துக் காட்டுகின்றனர். மனித வாழ்வில் இயற்கை

பெரும்பங்கு வகிப்பதைச் சங்க இலக்கியப் பாடல்கள் தெளிவாகக் காட்டுகின்றன.

சங்கப்பாடல்கள் அஃறிணைப் பொருட்களைத் தாய்போலிருந்து வளர்த்ததோடன்றித் தமக்கையாகவும் எண்ணிப் போற்றியதை ‘அன்னைக் கூறினல் புன்னையது சிறப்பே” எனும் வரியால் அறியலாம்.

**பறவையின் நேயம்**

அன்பின் ஐந்திணை நேயமிக்கதாக அமைய, ஆணாதிக்கச் சமூகத்தில் இணக்கமுடன் உரிப்பொருள் உணர்வுகளை ஒப்பிட்டுக் காட்டும் நோக்கில் சங்க அகப்பாடல்களில் பறவையினங்களின் நேயங்கள் சுட்டப்பெறுகின்றன. இக்கருத்தின் மூலம் “சங்க நூல்களில் பறவைகள் பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப்படுவதை அறியலாம். ஐந்திணைப் பாகுபாட்டில் கூறப்பட்டுள்ள பறவைகள் இயற்கையில் காணப்படும் நிலப்பாகுபாடு, சூழ்நிலை, சுற்றுச்சார்பு ஆகியவற்றை ஒத்தே சொல்லப்பட்டுள்ளன. நெய்தலில் மட்டும் காணக்கூடிய கடற்காக்கையை மருதத்திலோ, குறிஞ்சியிலோ, பாலையிலோ கூறவில்லை. நீர்ப்பறவைகள் மருதத்திணையிலோ அல்லது நெய்தற்றிணையிலோ கூறப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. மருத நிலத்திலும் நெய்தல் நிலத்திலும் காணக்கூடிய சில நீர்ப்பறவைகள் இருதிணையிலும் கூறப்பட்டிருப்பது இயற்கை யோடொத்துக் காணப்படுகின்றது. குறிஞ்சி நிலத்தில் காணப்படும் பறவைகள் வேறு நிலத்தில் கூறப்பெறவில்லை. பறவைகள் வாழும் சூழ்நிலையையும் இருப்பிடங்களையும் நன்கு கண்டுணர்ந்தே சங்கப் புலவர்கள் கூறியுள்ளனர். இவ்வழி ஐந்திணைக்குரிய உரிப்பொருள் உணர்வுகட்கு ஏற்பப் படைத்துள்ளனர் என்றறியலாம்.

பறவையினங்களின் மீது அன்புகாட்டல், தன் அகவொழு கலாற்றிற்குப் பறவையினங்களின் வாழ்வியலை ஒப்பிட்டுக் காட்டல் என்ற இருநிலைகளில் ஈண்டு நேயங்கள் வெளிப்படுகின்றன. இதில் அன்றில், அன்னம், ஆந்தை, கிளி, குருவி, குயில், பருந்து, புறா, வெருகு ஆகிய

பறவைகளின் அன்பு வாழ்க்கை பலவிடங்களில் மனித நேயப் பண்புகளுடன் ஒப்பிட்டுக் காட்டப்படுகிறது.

அன்னம் தன் துணையுடன் மகிழும் பறவையினத்துள் ஒன்றாகும் அன்னத்தின் அன்பு காட்டல் போலத் தன்னோடு தலைவன் அன்பு காட்டித் துஞ்சவில்லையே என்ற தலைவியின் ஆதங்கத்தை,

**“செந்நெல்அம் செறுவின் அன்னம் துஞ்சம்**
**பூக்கெழு படப்பை”**[54]

என்பதிலிருந்து அறியலாம்.

பிறவிதோறும் அன்புமாறாக் கணவனாக விளங்குவதாக உறுதியளித்த தலைவன் மணவினைக்குப் பின் பரத்தைமை ஒழுக்கம் கொண்டதால் தலைவி பெரிதும் வருந்தினாள். இந்நிலையில் தன் ஊர்ப் பொய்கையில் அன்னம் பெடையன்னத்தோடு மகிழ்ந்து திரிவதைக் காண்கிறாள்.

**“ஆய்தூவி அன்னம் தன் அணிநடைப் பெடையொடு**
**மேதகத் திரிதரூஉம்”**[55]

என அன்னத்திடம் காணப்படும் அன்புறவு என்னும் உயிரொழுக்கத்தை அன்னத்திலும் ஆற்றல் வாய்ந்த தலைவனிடம் காண முடியவில்லையெனத் தலைவி கவலைப்படுவதைக் காணலாம். தலைவி அன்னத்தின் மீது கொண்ட நேயமும், அந்நேயம் தலைவனுக்கு வரவேண்டுமென்ற எதிர்ப்பார்ப்பும் வெளிப்படுவதைக் அறியலாம்.

கதிரவன் மறைந்த இரவுப்பொழுதில் ஆந்தைச் சேவல் மகிழ்வோடு தன் பெடையை அழைக்கும் குரலைச் செவிமடுத்த தலைவி தன் தனிமைத் துயரை எண்ணி வருந்துவதை,

**“………….. …………. சேவலும்**
**நகைவாய்க் கொளீஇ நகுதொறும் விளிக்கும்”**[56]

என்னும் வரிகளால் அறியலாம். ஆந்தை பெடையிடம் காட்டும் மகிழ்ச்சி கலந்த அன்பைத் தன் தலைவனோடு கொள்ளமுடியவில்லையே என்ற

ஆதங்கம் புலப்படுகிறது. இதில் ஆந்தையின் அன்பைத் தலைவி போற்றுவதையும், தனக்கு அவ்வன்பு தலைவனால் உடன் வந்து சேர வேண்டும் என்ற அவளது உள்நோக்கமும் புலப்படுகிறது.

நீண்ட நாட்களாகத் தன் தலைவனைக் காணஇயலாது தவித்த தலைவிக்குத் தினைப்புனக் காவல் தொழில் மீண்டும் கிடைத்தது இதனைத் தலைவனுக்குத் தெரியப்படுத்த தகுந்த ஆளைத் தேடினாள் தினைக்கதிரைக் கொய்ய வந்த கிளி கண்ணில் பட அதனிடத்து,

**"கொடுங்குரல் குறைந்த செவ்வாய்ப் பைங்கிளி**
**யஞ்சல் ஓம்பி ஆர்பதம் கொண்டு**
**நின்குறை முடித்த பின்றை என்குறை**
**செய்தல் வேண்டுமால்…..**
**………….. அவர்நாட்டு**
**நின்கிளை மருங்கின் சேறி யாயின்**
**அம்மலை கிழவோற்கு உரைமதி"[57]**

எனவும் கிளிகளிடத்தே தலைவனுக்காகத் தவிப்போடு காத்திருக்கும் நிலையை உரைக்கிறாள்.

கிளியால் தலைவனிடம் செய்தியை முழுமையாகக் கூறவியலாது என்பது தலைவிக்குத் தெரியும். தெரிந்தும் கிளியைப் பார்த்துக் குறிப்பிடுவது தன் கருத்தொத்தத் தலைவனின் அன்பை நாடவேயாம்.

தினைக்கதிரைக் கொய்யவரும் கிளியை விரட்ட வேண்டிய தலைவி அதன்மீது அன்பு காட்டித்தன் விருப்பத்தை வெளிப் படுத்துகிறாள்.

மாமரச் சோலை வாழும் குயிலொன்று கூவுகிறது. அதன் குரலைக் கேட்ட தலைவிக்குத் தலைவனை விட்டுப் பிரியாது ஒன்றாக வாழ்வீர்" என்பதை,

**"பொதும்புதோறு அல்கும் பூங்கண் இருங்குயில்**
**கவறுபெயர்த்து அன்ன நில்லா வாழ்க்கையிட்டு**
**அகறல் ஓம்புமின் அறிவுடையீர் எனக்**

**கைமறத் துறப்போர்க் கழறுவ போல**

**மெய்யுற இருந்து மேவா நுவல''**[58]

எனத் தலைவனுக்கு அறிவுரை கூறுவது போல் அமைந்துள்ளதெனக் காமக்கணிப் பசலையார் பாடியுள்ளார். குயிலின் குரல் ஒன்றிய காதலை வெளிப்படுத்துவதாக அறிகிறான். இதனால் குயிலினத்தின் நேயத்தைத் தலைவி பாராட்டுவதும், அந்நேயம் குயிலினும் அறிவு சான்ற மக்கட் குலத்தில் தோன்றியவனுக்கு வரவேண்டும் என்று கருதுவதும் புலப்படுகிறது.

பறவையினங்களில் ஒன்றாகிய குயில்கள் இணையாக இருக்கும் காட்சியினை தலைவி கூறுகிறாள். தலைவன் குறித்துச் சென்ற பருவம் வந்தது. ஆனால், தலைவன் மீண்டானில்லை. இந்நிலையில் குயில்களின் செய்கையைக் கண்ட தலைவி, தலைவனும் விரைந்து வந்து தன்னை மகிழ்விக்க வேண்டுமென விரும்புகிறாள். தலைவனைக் காண விரும்பும் தலைவியின் அன்பு நெஞ்சம் இதில் காட்டப்படுகிறது.

ஆண் நாரையை இழந்த பெண் நாரை உணவு உண்ணாது வருந்தும் நிலை,

**"நலன் உணப்பட்ட நல்கூர் பேடை**

**கழிபெயர் மருங்கில் சிறுமீன் உண்ணாது**

**சைதை அம்படுசினைப் புலம்பொடுவதியும்''**[59]

எனக் காட்டப்படுகிறது.

தலைவனால் நலன் பெறப்பட்ட தலைவி மீண்டும் அவனை அடையப்பெறாது வருந்தி உணவும் கொள்ளாது இச்செறிக்கப்பட்டுத் துன்புறுகிறாள். இச்சூழலைத் தலைவனுக்குத் தோழி குறிப்பிடுகிறாள். இவ்வாறு கூறுவதன் மூலம் தலைவன், தலைவியை இச்செறிப்பிற்கு வாய்ப்பு நல்காது உடன் வரைதல்வேண்டும் எனும் குறிப்பு அறிவுறுத்தப் படுகிறது.

மாந்தர் வாழ்வில் உரியோர் உறவோர் இறந்தால் சிலவேளை மட்டும் முழுஉணவு உண்ணாது நோற்பது வழக்கம் நாரை தன் துணை

இறந்தபோது சிறுமீனைக் கூட உண்ணாது. பெரும்பசியைக் களையாது வருத்தமுற்றது. தோழி தலைவியிடத்து நாரையின் நல்நேயத்தைப் பாராட்டுகிறாள் என்பது புலனாகிறது. மேலும் புள்ளினத்திற்கு இருக்கும் நேயம் மனித இனத்திற்கு மிக வேண்டுமென்ற கருத்தும் உறுதிப்படுவதாகக் கருதலாம்.

புறாவானது இவ்விடத்தே வளர்க்கப்படும் ஒரு பறவை. இவ்வாறு வளர்க்கப்படும் புறாக்களில் ஓர் ஆண்புறா தான் விரும்பும் பெண் புறாவை அழைக்கிறது. இதன் குரலைக் கேட்ட தலைவி தன் தலைவனை எண்ணித் துயருற்றாள். இதனை,

**“வகைஅமர் நல்இல் அகஇறை உறையும்**
**வண்ணப் புறாவின் செங்காற் சேவல்**
**வீழ்துணைப் பயரும் கையறு முரல்குரல்**
**நும்இலள் புலம்பக் கேட்டொறும்**
**பொம்மல் ஓதி பெருவிதுப்பு உறவே”**[60]

என்ற பாடலடிகள் காட்டுகின்றன. இவ்வாறு கூறித் தலைவியின் மீது அன்பு கொண்ட தோழி தலைவனைச் செலவழுங்குவிக்க முயன்றனள்.

இவ்வாறாக தலைவி தலைவனோடு கொண்டிருந்த மாறா அன்பிற்கு புள்ளினங்களின் இயற்கை நிகழ்வுகளைச் சான்று காட்டும் நேயம் போற்றுதற்குரியதாகும்.

## ஆய்வுத் தொகுப்புரை

சங்கப் புலவர்கள் தொலை நோக்குப் பார்வை உடையவர்கள் தெளிந்த சிந்தனை உடையவர்கள். மனித நேயமிக்கவர்கள், கலையுணர்வும், கூர்த்த மதியும் பெற்றவர்கள், வறுமை அவர்கள் வாழ்க்கையைச் செதுக்கியது. இத்தகைய சங்கப் புலவர்கள் இயற்றிய பாடல்களின் மூலம் தமிழர்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே மனித நேயமிக்கவர்களாக திகழ்ந்தனர் என்பதும் குறிப்பாக சங்க கால பெண்கள் மனித நேய உணர்வுக்கு இலக்கணமாக திகழ்ந்தனர் என்பதும் இவ்இயலில் விளக்கப்பட்டுள்ளது.

இவ்இயலில் அன்பு, நேயம் பற்றிய அகராதிகள் தரும் விளக்கமும் காலந்தோறும் மனிதநேயம் எவ்வாறு வளர்ச்சி பெற்றது என்ற சான்றுகளும் தொல்காப்பியரும் சங்க இலக்கியங்களும் அறிவுறுத்தும் மனித நேய நிகழ்வுகளும் சான்றுகளுடன் விளக்கப்பட்டுள்ளது.

சங்க இலக்கிய அகப்பெண் மாந்தர்களான நற்றாய், செவிலி, தலைவி, தோழி ஆகியோரின் சங்க கால சமுதாயம் போற்றும் மனித நேய நிகழ்வுகளும் சங்கப் புலவர்கள், விறலி எனும் விளிம்பு நிலைப் பெண்ணிடம் காட்டிய மனித நேயமும் சங்க காலத் தலைவி அ∴றிணை உயிர்களிடத்து காட்டிய மனித நேய நிகழ்வுகளும் சான்றுகளுடன் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

**சான்றெண் விளக்கம்**

| | |
|---|---|
| 1. புறநானூறு | பா.47 வரி. 1-6 |
| 2. வ.சு.ப.மாணிக்கம், தமிழ்க்காதல் | பக் 505-506 |
| 3. கா.மீனாட்சி சுந்தரம் தமிழ்நாட்டு வரலாறு | ப.1 |
| 4. கழக கையகராதி | ப.243 |
| 5. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் லெக்சிகன் தொகுதி.4 | |
| 6. பெருஞ்சொல் அகராதி | தொகுதி.1 |
| 7. நாமதீப நிகண்டு | நூ 608 |
| 8. வ.சு.ப.மாணிக்கம், சங்கநெறி | ப.14 |
| 9. தொல்.பொருள் பொருளியல் | ப.216 |
| 10. சிலம்பு கொலைக்களக்காதை | வரி.71-73 |
| 11. மணிமேகலை | காதை 11 வரி 95-96 |
| 12. மேலது | காதை 16 வரி 134 |
| 13. கம்.வீடணன், அடைக்கலப்படலம் | வரி.145 |
| 14. தொல் பொருள் களவு | நூ.1083 |
| 15. கலி | பா.39 வரி 20-25 |
| 16. அகம் | பா.248 வரி 15-16 |
| 17. நற்றிணை | பா.206: வரி6-11 |
| 18. அகம் | பா.35: வரி.12-13 |
| 19. ஐங் | பா.391 |
| 20. தொல்.பொருள். களவு | நூ.122 |
| 21. அகம் | பா.49: வரி.6-9 |
| 22. குறுந்தொகை | பா.84: வரி.1-2 |
| 23. அகம் | பா.105: வரி4-6 |
| 24. நற்றிணை | பா.110: வரி.1-2 |
| 25. கலித்தொகை | பா. 8 |
| 26. அகம் | பா.189:வரி.9-12 |
| 27. தெ.பொ.மீனாட்சி சுந்தரம் ‘நற்றிணைச் சொற்பொழிவுகள் | பக் 6-7 |
| 28. தொல் பொருள் மெய் | நூ.25 |

| | |
|---|---|
| 29. அகம் | பா.82: வரி.11-18 |
| 30. தொல் பொருள் களவு | நூ.1053 |
| 31. குறுந்தொகை | பா.3 |
| 32. தொல் பொருள் களவு | நூ.123 |
| 33. தொல்.பொருள் இளம்பூரணர் | ப.342 |
| 34. கலித்தொகை | பா.37:1 |
| 35. குறுந்தொகை | பா.176:வரி.1-4 |
| 36. கலித்தொகை | பா. 47:1-6 |
| 37. அகம் | பா.12 வரி4-5 |
| 38. அகம் | பா.118: வரி.9-11 |
| 39. நற்றிணை | பா. 34: வரி.5-11 |
| 40. குறுந்தொகை | பா. 23: வரி.3-5 |
| 41. ஐங்குறுநூறு | பா.248 |
| 42. மேலது, | பா.247 |
| 43. குறுந்தொகை | பா.83 வரி1-25 |
| 44. தொல்.புறத்திணை | நூ. 1037 |
| 45. பொ.வே.சோமசுந்தரனார், பத்துப்பாட்டு மூலமும் உரையும், ப.11 | |
| 46. அகநானூறு | பா.157 |
| 47. புறம் | பா.66 |
| 48. மேலது | பா.103 |
| 49. மேலது | பா.105 |
| 50. மேலது | பா.133 |
| 51. அ.ச.ஞானசம்பந்தன், முன்னுரை அகமும் புறமும், ப.5 | |
| 52. நற்றிணை | பா.13 வரி.8-7 |
| 53. ச.வே.சுப்பரமணியன், சங்க இலக்கியத்தில் இயற்கை, சங்க இலக்கிய கட்டுரைகள் | ப.83 |
| 54. நற்றிணை, | பா.13: வரி8-9 |
| 55. கலித்தொகை | பா.69: வரி.6-7 |
| 56. மேலது | பா-218: வரி3-4 |
| 57. மேலது | பா.102: வரி1-4 |

| | |
|---|---|
| 58. மேலது | பா-243: வரி4-8 |
| 59. மேலது, | பா.178: வரி3-5 |
| 60. மேலது, | பா.71: வரி7-11 |

# துணைநூற்பட்டியல்

**முதன்மை சான்றாதாரங்கள்**

**எட்டுத் தொகை நூல்கள்**

| | |
|---|---|
| நற்றினை | குறுந்தொகை |
| ஐங்குறுநூறு | பதிற்றுப்பத்து |
| பரிபாடல் | கலித்தொகை |
| அகநானூறு | புறநானூறு |

**பத்துப்பாட்டு நூல்கள்**

| | |
|---|---|
| திருமுருகாற்றுப்படை | பொருநராற்றுப்படை |
| சிறுபாணாற்றுப்படை | பெரும்பாணாற்றுப்படை |
| முல்லைப்பாட்டு | மதுரைக்காஞ்சி |
| நெடுநல்வாடை | குறிஞ்சிப்பாட்டு |
| பட்டினப்பாலை | மலைபடுகடாம் |

**துணைமைச் சான்றாதாரங்கள்**


1. **அகத்தியலிங்கம்., ச**
சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு – 1997.

2. **அழகம்மை. கே.பி**
சமூக நோக்கில் சங்க மகளிர்
ஸ்டெப்பாஸ்ட் பிரஸ்,
சென்னை – 600013.
முதற்பதிப்பு – ஆகஸ்ட் - 2001.

3. **அழகம்மை., கே.பி**
அகநானூற்றில் வாழ்வியல் நீதி நெறிகள்,
அழகு புவனேஸ்வரி வெளியீடு,
காரைக்குடி
முதற்பதிப்பு – 2003.

4. **அனார்கலி., சு**
குறுந்தொகையில் உளவியல் கருத்து
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு - 2001

5. **அனுராதா., இரா.**
சங்க இலக்கியத்தில் அறக்கருத்துக்கள்,
தமிழாய்வு மன்றம் பதிப்பகம்,
கொட்டிவாக்கம்,
சென்னை – 600096.
முதற்பதிப்பு – 2007.

6. **அன்புச்செல்வி., மு**
சங்க இலக்கியப் பெண்களின் மனித நேயம்
பிரிண்ட் டெக் இந்தியா
சென்னை - 5.
முதற்பதிப்பு – செப்டம்பர் 2005.

7. **இளம்பூராணர்., (உரை)**
தொல்காப்பியம்,
பொருளதிகாரம்,
கழக வெளியீடு,
சென்னை.
முதற்பதிப்பு – 1969

8. **இராசமாணிக்கனார்., மா**
பத்துப்பாட்டு ஆராய்ச்சி,
சென்னை பல்கலைக்கழகம்,
முதற்பதிப்பு – 1970.

9. **கம்பராமாயணம் (யுத்தகாண்டம்).,**
வர்தமானர் பதிப்பு
சென்னை,
எட்டாம்பதிப்பு – 1976.

10. **கருணாநிதி.,மு**
சங்கத் தமிழ்
ராக்போர்ட் பப்ளிகேஷன்ஸ்(பி) லிட்.,
சென்னை.
முதற்பதிப்பு – ஆகஸ்ட் 1987.

11. **கலைஅரசி. தி.**
இலக்கணம் சுட்டும் அகவாழ்வு,
காவ்யா பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 2012.

12. **கார்த்திகேசு சிவத்தம்பி**
பண்டைத் தமிழ்ச் சமூகம்,
பாவை பிரிண்டர்ஸ் (பி) லிட்.,
சென்னை -14
முதற்பதிப்பு – ஜுன் 2010.

13. **குருநாதன். இராம**
புறநானூறு புதிய பார்வை,
வானதிபதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 1997

14. **சக்தி தரும நடராசன் புலவர்**
சங்ககால இறைநெறியும் வாழ்வியல் நெறியும்
ஸ்ரீ வெங்கடேஸ்வரா அச்சகம்,
சென்னை.
முதற்பதிப்பு 2001.

15. **சண்முகம்பிள்ளை. மு**
சங்கத்தமிழர் வாழ்வியல்
உலக தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை,
முதற்பதிப்பு – 1997.

16. **சண்முகம். இரா.**
வரவு கடாதலும் அறத்தொடு நிற்றலும்
சரவணா பதிப்பகம், மதுரை -1
முதற்பதிப்பு, நவம்பர் -1992

17. **சாலினி இளந்திரையன்**
சங்கத்தமிழரின் மனிதநேய மணிநெறிகள்,
உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்.
தரமணி, சென்னை.
முதற்பதிப்பு, பிப்ரவரி – 1995.

18. **சிதம்பரம் பிள்ளை. த.**
சங்க இலக்கியத்தில் பரத்தமை
மதுரை பதிப்பு,
முதற்பதிப்பு – 1980.

19. **சுப்பரமணியன். ச.வே.**
சங்ககால மகளிர்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 2014.

20. **சுப்ரமணியன் ச.வே.**
சங்க இலக்கியத்தில் அறத்தொடு நிற்றல்
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 2014.

21. **சுப்ரமணியன். ந**
சங்ககால வாழ்வியல்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை.

22. **சுப்புரெட்டியர். ந**
அகத்திணைக் கொள்கைகள்
பாரி நிலையம்,
சென்னை,
முதற்பதிப்பு – 1981

23. **செல்வராசு சிலம்பு.ரா**
சமூகவியல் நோக்கில் தமிழ் மரபுகள்
பாரி நிலையம்,
சென்னை.
முதற்பதிப்பு – அக்டோபர் 1980

24. **சேதுராமன். பி**
ஆற்றுப்படை இலக்கியத்தில் தமிழர் வாழ்வியல்
பாவை பிரிண்டர்ஸ்,
சென்னை -14
முதற்பதிப்பு – டிசம்பர் 2011

25. **சொக்கலிங்கம், சு.ந.**
வாழ்க்கைக்கு அறம்
பத்மா பதிப்பகம், சென்னை.
முதற்பதிப்பு – டிசம்பர் 2001.

26. **சோமசுந்தரனார்.பொ.வே**
பத்துப்பாட்டு மூலமும் உரையும்,
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
திருநெல்வேலி.
முதற்பதிப்பு – 1971.

27. **ஞானசம்பந்தன். அ.ச.**
அகமும் புறமும்
தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம்,
சென்னை.
முதற்பதிப்பு – 1991.

28. **தட்சிணாமூர்த்தி. அ**
சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனித உறவுகள்
நியூ செஞ்சுரி புக் ஸவுஸ், சென்னை.
முதற்பதிப்பு - ஜூலை-2016.

29. **தட்சிணாமூர்த்தி. அ**
தமிழர் நாகரிகமும் பண்பாடும்
யாழ் வெளியீடு,
சென்னை.
முதற்பதிப்பு – 1999.

30. நக்கீரர் (உரை)
இறையனாராகப் பொருள் உரை
சென்னைக்கழகம் வெளியீடு
முதற்பதிப்பு - 1969

31. **நச்சினார்க்கினியர் (உரை)**
தொல்காப்பியம், பொருளதிகாரம்
சென்னை.
கழக வெளியீடு – 1975.

32. **நாற்கவிராசர் நம்பி**
அகப்பொருள் விளக்கம்
கழக வெளியீடு, சென்னை
ஏப்ரல் - 1969.

33. **துரைசாமிப்பிள்ளை, ஔவை.சு.**
புறநானூறு விளக்கவுரை
தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்பகம்,
சென்னை.
முதற்பதிப்பு -1977.

34. **பழனிச்சாமி. செ**
புறநானூற்றில் தமிழ்பண்பாடு
சென்னை பதிப்பு
முதற்பதிப்பு – 1981.

35. **பழனிச்சாமி. இரா.**
சங்கப் பண்பாட்டியல்
இயல் பிரிண்டர்ஸ், தஞ்சாவூர்
முதற்பதிப்பு – ஆகஸ்ட் -2012.

36. **பிள்ளை கே.கே**
தமிழ்நாட்டுப் பாட நூல் நிலையம்,
சென்னை – முதற்பதிப்பு – 1981

37. **மணிமேகலை. இரா.**
சங்கத் தமிழ்க் காதல்
சிந்து காரைக்கால் பதிப்பு
முதற்பதிப்பு – டிசம்பர் 2006

38. **மணிமேகலை (உரை)**
உ.வே.சாமிநாதயர் பதிப்பு,
சென்னை. நான்காம்பதிப்பு – 1949

39. **மணி. பெ.சு.**
சங்ககால ஔவையாரும் உலப் பெண்பாற் புலவர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
சென்னை. புதிப்பு – 1986.

40. **மாணிக்கனார். அ.**
பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் மூலமும் தெளிவுரையும்
வர்த்தமானன் பதிப்பகம்,
சென்னை.
பதிப்பு – 1991.

41. **மாணிக்கம். வ.சு.ப.**
தமிழ்க்காதல்
நதிரகம் பதிப்பகம், காரைக்குடி
பதிப்பு – 1962.

42. **மாணிக்கம். வ.சுப.,**
சங்கநெறி
மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.
பதிப்பு – 1987

43. **மீனாட்சி சுந்தரம்**
தமிழ்நாட்டு வரலாறு
மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம்.
இரண்டாம் பதிப்பு – 2001.

44. **மீனாட்சி சுந்தரம். தெ.பொ.**
நற்றிணைச் சொற்பொழிவுகள்
மணிவாசகர் பதிப்பகம், சென்னை
பதிப்பு – 1980.

45. **முத்துலக்குமி. வே.**
பண்டைத் தமிழ் இலக்கியங்களில் அறநெறிகள்
அனிதா பதிப்பகம்,
திருச்சி, முதற்பதிப்பு – 1999.

46. **முத்துலக்குமி. வே.**
பண்பாட்டுச் சிந்தனைகள்,
அனிதா பதிப்பகம்,
திருச்சி, முதற்பதிப்பு – 1999.

47. **வரதராசன். மு**
நெடுந்தொகை விருந்து
மு.பாரிநிலையம்,
சென்னை – 1996.

48. **வரதராசன். மு.**
திருக்குறள் (உரை)
தென்னியந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம்,
சென்னை – 1991.

49. **வெள்ளைவாரணன். பி**
சங்ககாலத் தமிழ் மக்கள்
பாரத் பதிப்பகம், சென்னை.
முதற்பதிப்பு – 2013.

50. **வேலம்மாள். இரா.**
தமிழ்இலக்கியத்தில் அணிகலன்கள்,
கேரளப் பல்கலைக்கழகத்தின் முன்வைத்த ஆய்வுக்கட்டுரை
1968.

அகராதி

**இராமநாதன். பொ**
இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் பெயரகராதி,
இன்ஸ்டிடியூட் ஆப் ஸவுத் இந்தியன் ஸ்டடீஸ்
சென்னை, பதிப்பு – 1991.

**சிங்காரவேலு முதலியார். ஏ**
அபிதான சிந்தாமணி
ஏசியன் எஜூகேஷனல் சர்வீஸ்
புதுடெல்லி, பதிப்பு – 1999.

**திவாகர முனிவர்**
சேர்ந்தன் திவாகரம்
கழக வெளியீடு, சென்னை
முதற்பதிப்பு – 1958

**வாழ்வியற்களஞ்சியம், தொகுதி - இரண்டு**
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு
முதற்பதிப்பு – 1986.

**வாழ்வியற் களஞ்சியம், தொகுதி - ஐந்து,**
தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.
தமிழ்ப்பல்கலைக்கழக வெளியீடு,
முதற்பதிப்பு – 1987.

# முடிவுரை

சங்க கால சமூக அமைப்பு எனும் முதலியலில் முச்சங்கங்கள் பற்றிய வரலாறு எட்டுத்தொகை பத்துப்பாட்டு எழுந்த காலங்கள் பற்றிய வரலாறு கூறப்பட்டுள்ளது. சங்க இலக்கியங்கள் கூறும் ஐவகைத் தினை வகைப்பாடு குறித்தும், அங்கு வாழும் மக்களின் வாழ்க்கைச் சூழல், தொழில், உணவு, ஆடைகள், தெய்வ வழிபாடு போன்றவை விரிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது. சங்க கால மக்கள் வாழ்ந்த ஊர் அமைப்பு, நகரமைப்பு ஐவகை நிலங்களில் வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறை முதலானவை இவ்இயலில் விளக்கப்பட்டுள்ளன. அகத்தினை மாந்தர்களான தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய் பரத்தையர் முதலானவர்களின் வாழ்க்கைப் படிநிலைகளும் புறத்தினை மாந்தர்களான அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் போன்றவர்களில் சமூக பங்களிப்பும் மன்னர்கள் புலவர்களோடு கொண்டிருந்த அரசியல் சார்ந்த பதிவுகளும் இவ்இயலில் ஆராயப்பட்டு முடிவுகளாக கூறப்பட்டுள்ளன.

சங்ககால பெண் சமூக அமைப்பும் உறவுகளும் என்ற இரண்டாவது இயலில் சங்க இலக்கியங்களில் மகளிர் பற்றிய சமுதாய உறவுகள் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. பொது நிலையில் சங்க கால மகளிர் பற்றிய விளக்கம், மகடூஉ என்பதன் பொருள், தலைவன் தலைவியிடம் கொண்ட உறவு, கணவன், மனைவி உறவு, தலைவன் பரத்தையர் உறவு, தலைமக்கள் பணிமக்கள் உறவு, மக்கட் பேற்றுடன் கொண்ட உறவு முதலானவை சான்றுகளுடன் இவ்இயலில் நிறுவப்பட்டுள்ளன. மேலும் மன்னர் பெண்பாற் புலவர்கள் நட்புறவு கொண்டதையும் அரசர்களின் ஆட்சிக்கு அச்சாணியாய் நின்ற புலவர்களின் உறவும் இவ்இயலில் விளக்கப்பட்டுள்ளது.

அகஇலக்கியங்களில் பெண்களின் வாழ்வியல் அறங்கள் என்னும் மூன்றாவது இயலில் பழந்தமிழ் இலக்கியங்களான எட்டுத்தொகை,

பத்துப்பாட்டு ஆகியவற்றில் பெண்களுக்கான அறச்சிந்தனைகள் மிகுந்திருக்கின்றன என்பது இவ்இயலில் சான்றுகள் மூலம் நிறுவப்பட்டுள்ளது. முன்னோர் போற்றி வந்த வாழ்வியல் நெறிகள், அறங்கள் முதலானவற்றின் தொகுப்பாகவே சங்க இலக்கியங்கள் காட்சி அளிக்கின்றன என்பது நிறுவப்பட்டுள்ளது. சங்ககால மகளிரின் அறவாழ்வான களவு வாழ்க்கை, கற்பு வாழ்க்கை என இரண்டிலும் மேற்கொள்கின்ற வாழ்வியல் அறங்களான திருமண வாழ்க்கை, குடும்ப வாழ்க்கை, மக்கட்பேறு முதலான அக வாழ்க்கை அறங்கள் பற்றி விரிவாக இவ்இயல் எடுத்துரைத்துள்ளது.

புற இலக்கியங்களில் பெண்களின் வாழ்வியல் அறங்கள் என்னும் நான்காம் இயலில் பெண்களின் கற்பு, வாழ்க்கை, இல்லற நெறி, தாய்மை, ஆண்களை போருக்கு அனுப்புதல், ஈன்ற பொழுதின் பெரிதுவத்தல், போர்க்களத்தில் வீரத்தாய் போன்றவை எடுத்துரைத்துள்ளது. இவ்இயலில் மகளிரின் புறப்பழக்க வழக்கங்கள், கைம்மை நோன்பு பொருளாதாரத்தில் பெண்களின் நிலை முதலானவை இவ்இயலில் விளக்கப்பட்டுள்ளது.

சங்க இலக்கியங்கள் காட்டும் பெண்களின் மனிதம் என்னும் ஐந்தாவது இயலில் ஒவ்வொரு மனிதர்களிடையே நிலவும் அன்பான உறவே மனிதநேயம் என்பது எனப்படுகிறது. மனிதன் மட்டும் உலக உயிர்கள் அனைத்திடத்தும் அன்பு காட்டுபவன். எனவே எல்லா உயிர்களைக் காட்டிலும் உயர்ந்தவனாகிறான். அவ்வகையில் சங்ககால மகளிர் மனிதநேய பண்பை பெரிதும் பெற்றிருந்தனர். சங்க இலக்கியங்களில் மகளிர் சமூகமான தலைவி, தோழி, செவிலி, நற்றாய் முதலானவர்களின் மனித நேய பண்பு ஆராயப்பட்டுள்ளது. பிற உயிர்களிடத்து மகளிர் கொண்ட அன்பும் விளக்கப்பட்டுள்ளது.

சங்கப்புலவர்கள், விறலி எனும் விளிம்பு நிலைப் பெண்ணிடம் காட்டிய மனித நேயமும் சங்க காலத் தலைவி அஃறிணை

உயிர்களிடத்து காட்டிய மனித நேய நிகழ்வுகளும் சான்றுகளுடன் விரிவாக விளக்கப்பட்டுள்ளது. இவ்ஆய்வின் முடிவாக சங்க கால பெண் சமூக அமைப்பில் அகவாழ்க்கையிலும், புறவாழ்க்கையிலும் தனித்துவமான பண்பை சங்க மகளிர் பெற்றிருந்தனர். களவு வாழ்க்கையிலும், கற்பு வாழ்க்கையிலும் வீரம் மிகுந்த போர் பிண்ணனியிலும் இல்லற மாண்பை காப்பதிலும் மற்றவர்களுக்காக இரங்கும் மனித நேயத்திலும் தனி முத்திரை படைத்து தமிழ்ப் பண்பாட்டை பேணி வந்தனர் என்பதை அறிந்து கொள்ள முடிகிறது.